# வாழ்ந்து காட்டிய வள்ளல்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

மதுரை சிவானந்த தபோவன வெளியீடு

# வாழ்ந்து காட்டிய வள்ளல்



பேராசிரியர் டி. கே. நாராயணன், M.Sc., M. Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி', மதுரை




வெளியிடுவோர் :
சிவானந்த தபோவனம்,
சிவானந்த நகர் P. O மதுரை—625 006

முதற்பதிப்பு : செப்டம்பர் 1982 (1000 பிரதிகள்)
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர் 1986 (1000 பிரதிகள்)

குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் நூற்றுண்டு விழாவினை ஒட்டி வெளியிடப் பெறும் இந்நூல் அவரது பாதாரவிந்தங்களில் சமர்ப்பிக்கப்படுகிறது.

இந்நூல் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

---

1. S. K. Sengam Chettiar & Sons,
   Exporters & Tanners,
   Commander-in-chief Road,
   Madras-600 008

2. M/s Ponni Sugars & Chemicals Ltd,
   Pallipalayam, ERODE-638007

3. K. V. Kuppuswamy,
   Managing Director,
   Embee Textiles (P) Ltd
   Dindigul-624 004

   

Printed at VIJAYA PRINTERS, Madurai 625001

# முன்னுரை

குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களது தெய்வீக வாழ்க்கை மனித குலத்துக்கு என்றுமே வழிகாட்டும் ஒரு உன்னத சரித்திரமாகும். இமயமலையிலிருந்து கொண்டு உலகனைத்துக்கும் அருள் ஒளி விளக்காய்த் திகழ்ந்த இந்த நூற்றுண்டு கண்ட மகாபுருஷர் நம் குருதேவர். தமது போதனைகளின்படி வாழ்ந்து காட்டிய அவதார புருஷர் அவர்.

'வாழ்ந்து காட்டிய வள்ளல்' என்ற குருதேவரின் திவ்விய சரித்திரத்தை எடுத்துக் கூறும் இந்த நூலின் தலைப்பு மிகவும் பொருத்தமானதாகும். தம்மிடமிருந்த அனைத்தையும் வாரி வாரி அனைவருக்கும் கொடுத்தவர் அவர். பொருளைக் கொடுத்தார். புத்தகங்களைக் கொடுத்தார். மருந்துகளைக் கொடுத்தார், அருளையும் கொடுத்தார்—அனைத்தையும் கொடுத்தார். ஜகத் குருவாக விளங்கிய நம் குருதேவரைப் பொருளையும் அருளையும் மக்களுக்கு வாரி வாரி வழங்கிய வள்ளல் என்று அழைப்பது மிகவும் பொருந்தும்.

மதுரைத் தெய்வ நெறிக் கழகக் கிளை குருதேவரின் தொண்டில் பல்லாண்டுகள் ஈடுபட்டு நல்ல பல பணிகளைப் புரிந்து வருகிறது. சிவானந்த தபோவனம் மருத்துவம், கல்வி போன்ற பல துறைகளில் மாபெரும் தொண்டு ஆற்றி வருவதை நான் மனமாரப் பாராட்டுகிறேன். 7—2—82 அன்று நான் மதுரைக்கு விஜயம் செய்திருந்த பொழுது சிவானந்த தபோவனத்துக்குச் சென்று அவர்கள் ஆற்றிவரும் நல்ல பல பணிகளைப் பார்த்துப் பரவசமடைந்தேன். 'சமயஜோதி' மாத

இதழ், சிவானந்தா கிளினிகல் லாபரட்டரி, சிவானந்த இலவச மருத்துவ முகாம்கள், சிவானந்த மருத்துவ ஆராய்ச்சி கேந்திரம் முதலியன நல்ல விதத்தில் மக்க ளுக்குத் தொண்டாற்றி வருகின்றன.

இந்நூல் ஆசிரியர் பேராசிரியர் டி. கே. நாராயணன் குருதேவரின் சிறந்த பக்தர். பல்லாண்டுகள் இத்தகைய நற்றொண்டில் ஊறியவர். தலைமைத் தெய்வ நெறிக் கழகத்தின் நிர்வாகக் குழுவின் உறுப்பினரான அவர் மிக அற்புதமான முறையில் குருதேவரின் சரித்திரத்தை இந்த நூலில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். அனைவரும் இந் நூலைப் படித்துப் பயனடைய வேண்டுமென்பது என் விருப்பம்.

குருதேவரின் ஆசீர்வாதம் அனைவர் மீதும் மலர்வ தாகுக.

சுவாமி மாதவானந்தா

(உப தலைவர், தலைமைத் தெய்வநெறிக் கழகம், ரிஷிகேசம்)

# அணிந்துரை

ஆதிமதமாக விளங்கும் இந்து மதத்தில் தோன்றிய பெரியார்கள் எண்ணற்றவர். அவர்கள் அனைவரும் தாங்கள் தங்களது அனுபவத்தில் கண்ட உண்மைகளைத் தெரிவித்துள்ளனர்.

மனிதன் தனது லட்சியத்தை அடைவதற்குரிய பற்பல விதிமுறைகளை வகுத்தருளியுள்ள நமது ரிஷி முனிவர்கள் தாங்கள் சொன்னபடியே வாழ்ந்து வந்தவர்கள்.

இறைவனிடமிருந்து தோன்றிய அனைவரும் திரும்பவும் இறைவனையே அடைய வேண்டும் என்பது தான் ஆன்றோர்கள் கண்ட உண்மை. அது எப்படி சாத்தியமாகும் என்பதைத்தான் நமது வேதங்கள், உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், ஸ்ரீமத் பகவத் கீதை போன்ற உயர் நூல்கள் தெரிவிக்கின்றன.

சமீப காலத்தில் நம் பாரதநாட்டில் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், ஸ்ரீ ராமலிங்கர் போன்றவர்கள் தாங்கள் கூறியபடி வாழ்ந்து காட்டிய வள்ளல்கள்! அந்த வரிசையிலே, தமிழகத்தில் தோன்றி, இமயத்தில் அமர்ந்து, உலகனைத்தையும் விழிப்புறச் செய்த அவதார புருஷர், 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' ஸ்ரீ சுவாமி சிவானந்தர் ஆவார்.

இறைவனை அடைவதற்குக் கர்மம், பக்தி, ஞானம் போன்ற பாதைகள் பல உள்ளன என்பதையும், அவற்றை ஒருங்கிணைத்து 'சம்பூர்ண யோகம்' என்பதாக அமைத்துக் கொண்டு அனைவரும் தங்கள் லட்சியத்தை அடையலாம்

என்பதைத் தமது வாழ்க்கையின் மூலம் வெளிப்படுத்திய வித்தகர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர்.

'அன்பு', 'அருள்', 'ஞானம்', 'தொண்டு' முதலிய பல சொற்களின் பொருள்களை நூல்களிலே மாத்திரம் கண்டு நிற்கும் மாந்தர்கள் அவற்றை அனுபவத்தில் எப்படிக் காண முடியும் என்று எண்ணி நின்றவர்களுக்கு நிதரிசனமாக, அன்பின் உருவாக, அருளின் வடிவமாக, ஞானத்தின் சொரூபமாக, தொண்டின் திரட்சியாக காட்சியளித்தவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர்.

குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரது வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் வேத வேதாந்த விளக்கமாக அமைந்தது என்பது குருதேவரை நேரில் தரிசனம் செய்யக் கொடுத்து வைத்த பாக்கியவான்களுக்குத்தான் தெரியும். எனவேதான் அவரைக் காண உலகமே ஓடி வந்தது எனலாம். நாட்டு வேற்றுமை, மத வேற்றுமை, ஜாதீ வேற்றுமை, மொழி வேற்றுமை என்பதில்லாமல் அகில உலகத்திலிருந்தும் கோடிக்கணக்கான மக்கள் அவரது பெருமையை உணர்ந்ததன் மூலமாக தங்கள் வாழ்க்கையில் மறுமலர்ச்சியை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர்.

இன்றையச் சூழ்நிலையில், இறையருளைப் பெறத் துடித்து நிற்கும் எண்ணற்றவர் பயனடைய இவ்வரிய நூல் வெளிவருகிறது. அனைவரும் வாங்கிப் படித்துப் பெரும்பலனடைவார்களாக.

சுவாமி விமலானந்தர்
*தலைவர், சிவானந்த தபோவனம், மதுரை..*

# ஆசிரியர் உரை

மகான்களின் புனிதமான வாழ்க்கை மறைநூல்களின் விளக்கமாகும். குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் உன்னதமான வாழ்க்கை வேத, உபநிடதங்களின் விளக்க மாக அமைகிறது. குருதேவர் எழுதிய நூல்கள் முன்னூறுக் கும் மேற்பட்டவை என்றால், அவற்றின் சாரமாக அவரது வாழ்வு திகழ்ந்ததன் காரணமாகத்தான் அவரது அன்றாட வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றிக் கேட்குந் தோறும், படிக்குந் தோறும் நம்முள் ஒரு பவித்ரமான பக்தி கலந்த உணர்வு மேலிடுகிறது.

பிறருக்குப் போதிப்பது மிக எளிது. ஆனால் அதன்படி தானே வாழ்ந்து காட்டுவது மிகக் கடினம். குருதேவர் மக்களுக்கு எதைப் போதித்தாரோ அதன்படி தாமே வாழ்ந்தும் காட்டினார். தவிர தம்மிடம் இருந்த அனைத் தையும் பிறருக்கு வாரி வாரி வழங்கினார். அதனால் அவரை 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' என்று அழைத்தல் மிகவும் தகும். குருதேவரின் புனித நூற்றாண்டு விழா வேளையில் இந்நூலின் இரண்டாவது பதிப்பை வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

முன்னுரை வழங்கிய ரிஷிகேசம் தெய்வ நெறிக்கழக உபதலைவர் ஸ்ரீ சுவாமி மாதவானந்தர், அணிந்துரை வழங்கிய மதுரை சிவானந்த தபோவனத்தலைவர் ஸ்ரீசுவாமி விமலானந்தர், நூல் அச்சிட மனமுவந்து நன்கொடை வழங்கிய அன்பர்கள், அவர்களை இப்புனித காரியத்தில் ஈடுபடத் தூண்டிய அன்பர் ஸ்ரீ டி. பி. ஸ்ரீனிவாசன், நூலை உரிய காலத்தில் அச்சிட்டு வெளியிட உதவிய விஜயா பிரிண்டர்ஸ் மற்றும் இப்புனித ஞானயக்ஞத்தில் துணைநின்ற அனைவருக்கும் நன்றி கலந்த வணக்கங்கள் உரித்தாகுக.

டி. கே. நாராயணன்

# பொருளடக்கம்

# வாழ்ந்து காட்டிய வள்ளல்

## 1

### பாரதம் செய்த பாக்கியம்

அணுகுண்டினாலே அமெரிக்காவிற்குப் பெருமை என்றால் —

புரட்சியினாலே பிரான்சுக்குப் பெருமை என்றால்—

எண்ணெய் வளத்தாலே அரேபிய நாடுகளுக்குப் பெருமை என்றால்—

அடர்ந்த காடுகளாலே ஆப்பிரிக்காவிற்குப் பெருமை என்றால்—

பாரதத்துக்குப் பெருமை எதனால்?

அதனது ஆன்மீகச் செல்வத்தால், அருளாளர்களால்.

அன்றும் இன்றும் என்றுமே பாரத நாட்டிற்குத் தனிப்பெருமை அதனது வற்றாத ஆன்மீக ஊற்றினாலேயேயாகும்.

வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம்தான் இந்த நாட்டின் குன்றாத மூலதனம்.

அன்று வேதவியாசர், சுகர், பதஞ்ஜலி, புத்தர், சங்கரர், ராமானுஜர், மத்வர், இப்படி எத்தனையோ அவதார புருஷர்கள் இந்த பூமியில் தோன்றினார்கள்.

இன்று ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ராமதீர்த்தர், விவேகானந்தர், ராமலிங்கர், மணிவாசகர், ரமணர், சுவாமி சிவானந்தர் இவ்விதம் எண்ணற்ற அவதார புருஷர்கள் நம்மிடையே தோன்றியிருக்கிறார்கள்.

இனியும் எதிர் காலத்தில் இந்தத் திருக்கூட்டத்தில் எண்ணற்ற அவதார புருஷர்கள் தோன்றுவர். தோன்றி இந்தப் புண்ணிய பூமிக்கு மேலும் புண்ணியம் சேர்ப்பர்!

புண்ணிய பூமியாம் நமது பாரத நாட்டின் தென் கோடியிலே நெல் வயல் சூழ்ந்த அழகான இடம் திருநெல்வேலி நகரமாகும். நெல்லை என்று சுருக்கமாக அழைக்கப்பெறும் அந்த நகரத்திற்கு அருகில் பத்தமடை என்றொரு சிற்றூர் உண்டு. பத்தமடை என்றதும் நமக்கு நேர்த்தியான பாய்களைப் பற்றிய நினைவு உடனே வரும். ஆமாம், படுக்க நல்ல பாய் தரும் அதே பத்தமடைதான் உலகை உய்விக்க வந்த உத்தமராம் சுவாமி சிவானந்தரை யும் நமக்குத் தந்துள்ளது.

எப்பொழுதும் சல சல வென்று நீர்பாயும் ஒரு அழகிய கால்வாய் அந்தச் சிற்றூருக்கு அழகு செய்கிறது. தாம்பிரபரணி நதியிலிருந்து பிரிந்து வரும் கால்வாய் அது. எங்கு நோக்கினும் நாற்புறமும் பச்சைப் பசேலென்று நெல் வயல்கள். அந்தப் பச்சைக் கம்பளத்துக்கு மத்தியிலே பாங்காக அமைந்திருக்கும் பத்தமடையில் வாழ்ந்து வந்த பக்தர்களில் வெங்கு ஐயர் என்பவரும் ஒருவர். சிவபிரானின் திருஅவதாரமாகக் கருதப்பட்ட மாபெரும் துறவியும் சமஸ்கிருத அறிஞரும் கவிஞருமான மஹான் அப்பய்ய தீக்ஷிதர் பரம்பரையில் தோன்றியவர் அப்பெருமகன்.

அப்பய்ய தீக்ஷிதரின் சகோதரருடைய மகன் நீலகண்ட தீக்ஷிதர் என்பவர். இவரும் பெரிய சிவபக்தர், சம்ஸ்கிருத அறிஞர்.

இத்தகைய ஞானியர் பரம்பரையிலே உதித்த வெங்கு ஐயருக்கும் பார்வதி அம்மாளுக்கும் திருக்குமாரனாக 1887ம் ஆண்டு செப்டம்பர் 8ம்தேதி பரணி நட்சத்திரத்தன்று சுவாமி சிவானந்தர் பத்தமடையில் அவதாரம் செய்தார். பெற்றோர் அவருக்கு இட்ட பெயர் குப்புசுவாமி. 'பரணியில் பிறந்தவர் தரணி ஆளுவர்' என்பது பழமொழி. அதற்கொப்ப இவர் பிற்காலத்தில் ஆன்மீக உலகில் ஜகத் குருவாக தரணியை ஆண்டார்.

குப்புசுவாமியின் தந்தையான வெங்கு ஐயர் எட்டையா புரம் சமஸ்தானத்திலே ரெவின்யூ அதிகாரியாகப் பணி யாற்றினார். இயற்கையாகவே அவரிடம் பொருள் நாட்டத் தைவிட அருள் நாட்டம் அதிகமாகக் காணப்பட்டது. அன்றாடம் அவர் பண்ணிய பூஜையின் போது 'சிவோஹம்' என்று உச்சரித்தவாறு கண்களில் கண்ணீர்மல்க மணிக் கணக்காகப் பிரார்த்தனையில் அமர்ந்திருப்பார். குழந்தை குப்புசுவாமியும் அவருடனேயே அமர்ந்திருப்பான். தந்தை செய்த பாக்கியம் தனயனும் பக்தி மார்க்கத்தில் தோய்ந்து வளரலானான்.

குழந்தை குப்புசுவாமியிடம் இளமையிலேயே தெய்வீக அம்சங்கள் பல தென்படலாயின. வீட்டிலே தாயார் அவனுக்குத் தின்பதற்காகக் கொடுக்கும் தின்பண்டங்களை எடுத்துக்கொண்டு ஓடோடியும் வெளியே வந்து நண்பர் களை யெல்லாம் கூவி அழைத்து அவர்களோடு பகிர்ந்து கொண்டு சாப்பிடுவான். தனக்குக் கிடைத்ததைத் தான் மட்டும் உண்ணாது, நண்பர்களுக்கு மட்டுமன்றி, நாய், பூனை. காக்கைகள் மற்றும் அணில்களுக்கும் பரிமாறி அவை உண் பதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான் குழந்தை குப்புசுவாமி.

தெருவில் யாராவது பிச்சைக்காரர்கள் சென்ருல் உடனே அவர்கள் மீது இரக்கம்கொண்டு வீட்டிற்கு அழைத்து வந்து ஏதாவது கொடுத்து அனுப்புவான் குப்புசுவாமி. மகான்களைக் கண்டாலோ ஒரு தனி பக்தி அவனிடம் வெளிப்படும். இவ்விதம் அனைவர் மீதும் குழந்தை அன்பு செலுத்த, அனைவரும் அவன் மீது அன்பு பாராட்ட குப்புசுவாமி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரலானன்.

## சிவானந்தருடன் ஒரு நாள்

"சுவாமிஜி! ஏன் நீங்கள் பலதரப்பட்ட நபர்களை இங்கே வைத்திருக்கிறீர்கள்?", என்று பக்தர் ஒருவர் குருதேவரிடம் கேட்டார்.

"உங்களது வளர்ச்சிக்காகத்தான். நீங்கள் எப்படி முன்னேற முடியும்? நீங்கள் முன்னேறிவிட்டதாக மனதில் எண்ணிக் கொண்டிருக்கலாம். ஆனல் பலதரப்பட்ட நபர்களுடன் பழகும் வாய்ப்புக் கிட்டினலொழிய நீங்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிறீர்களா இல்லையா என்பதை எப்படி நீங்கள் கண்டு கொள்ளமுடியும்? இங்கு நடக்கும் பல்வேறு நிகழ்ச்சிகளுக்கிடையில், உங்கள் மனம் அமைதியுடனும் அடக்கத்துடனும் இருந்தால், அப்பொழுதுதான் நீங்கள் முன்னேறியிருக்கிறீர்கள் என்பது தெரியும் அதுவரை இல்லை". என்று குருதேவர் பதில் சொன்னர்.

# 2

## குப்புசுவாமியின் கல்விப் பருவம்

### விளையும் பயிர் முளையிலே

குப்புசுவாமியின் பள்ளிப் படிப்பு மஹாகவி பாரதியின் பிறந்த ஊரான எட்டயபுரத்தில் அமைந்தது. அந்த ஊரிலே தீக்ஷிதர் தெரு என்ற பெயருடைய ஒரு சிறியதெரு. அந்தத் தெரு மிகவும் பிரபலமானது. ஏனெனில் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசுவாமி தீக்ஷிதர் இருந்தது அந்தத் தெருவில் தான். அதுமட்டுமல்ல, நாம் சமீபத்தில் மிகவும் விமரிசையாகப் பாரெங்கும் நூற்றாண்டு விழாக் கொண்டாடிய பாட்டுக்கொரு புலவன் மகாகவி சுப்பிரமண்ய பாரதியார் வசித்ததும் அதே தெருவில் தான். அந்தத் தீக்ஷிதர் தெருவில் கல்மண்டபம் என்று அழைக்கப்பட்ட ஒரு வீட்டில் வெங்கு ஐயர் வசித்து வந்தார்.

அங்கிருந்த ராஜா உயர் நிலைப்பள்ளியில் குப்புசுவாமி படித்தார். படிப்பிலும் சரி, விளையாட்டிலும் சரி குப்பு சுவாமி தான் முதல். விவேகானந்தரைப் போலவே குப்பு சுவாமிக்கும் எந்த ஒரு குழுவிற்கும் தலைமை வகிப்பதில் தனிப் பிரியம். வீரசாகசங்கள் புரிவதிலும் அவருக்கு ஒரு

விசேஷமான விருப்பம் இருந்தது. திடீரென்று கிணற்றினுள் குப்புசுவாமி படாரென்று குதித்து விடுவார். மூச்சையடக்கி நீருக்குள் சிறிது நேரம் இருந்து விட்டு எவ்விதத் தீங்குமின்றியே வெளியே வந்து பெற்ருேரையும் மற்றவரையும் திகைக்க வைப்பார். சில சமயங்களில் எவரிடமும் சொல்லாமல் வீட்டை விட்டுக் கிளம்பிச் சென்று உணவு ஏதுமின்றி நான்கு ஐந்து நாட்கள் அலைந்துவிட்டு வீட்டுக்குத் திரும்புவார். அந்த வேளைகளில் பெரும்பாலும் அவர் சென்ற இடங்கள் ஆலயங்களாகத்தான் இருக்கும்.

குப்புசுவாமியின் உடலமைப்பு வாட்டசாட்டமாயிருந்தது. தேகப் பயிற்சியில் அவருக்குப் பெரு விருப்பம் ஏற்பட்டது. அதிகாலை 3-30 மணிக்கு எழுந்திருந்து உடற்பயிற்சி செய்ய 'ஜிம்'முக்கு அவர் ஓடி விடுவார்.

பள்ளியில் குப்புசுவாமிக்கு உடற்பயிற்சி ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியாரின் மாமாவான சாம்பசிவ ஐயர் ஆவார். குப்புசுவாமியின் பயமற்ற பயிற்சிகளைக் கண்டு இவர் பெரிதும் வியந்தார். படிப்பிலும் அவர் வகுப்பில் முதன் மாணவராக விளங்கிஞர். பின்னர் இந்தப் பெரியவர் குருதேவரின் சீடராகி சுவாமி சதாசிவானந்தர் ஆஞர்.

குப்புசுவாமியும் சுப்பிரமணிய பாரதியும் சமகாலத்தவர்கள். இருவரும் ஒரே ஆசிரியரிடத்தில் சிலம்பப் பயிற்சி பெற்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு சமயம் அப்பொழுது சென்னை கவர்னராயிருந்த ஆம்ப்ஹில் பிரபு கும்பகோணம் பகுதிக்கு விஜயம் செய்த பொழுது குப்புசுவாமி தேர்த்தியான ஆங்கிலத்தில் வரவேற்புரையை வாசித்தளித்து அனைவரது பாராட்டையும் பெற்ருர்.

மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ச்சி அடைந்த பின்னர் குப்புசுவாமி திருச்சியில் இருந்த எஸ். பி. ஜி. கல்லூரிக்குச் சென்றார். (மிஷனரி கல்லூரியான இது இப்பொழுது பிஷப் ஹீபர் கல்லூரி என்று அழைக்கப் படுகிறது.) தமது அறிவாற்றலால் சக மாணவர்கள், ஆசிரியர்கள் மற்றும் முதல்வருடைய அன்பையும் ஆதர வையும் குப்புசுவாமி பெற்றார், கல்லூரிப் படிப்பின் போது மேலும் அவரது ஆற்றல்கள் வெளிப்பட்டன. ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் மாணவர்களைப் பயிற்றுவித்து தாமே திறம்பட நடிக்கவும் செய்தார்.

1905-ம் வருடம் இண்டர்மீடியட் பரீட்சையில் தேர்ச்சி பெற்று குப்புசுவாமி தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தார். மருத்துவக் கல்வி அவரைப் பெரிதும் ஈர்த்தது. கல்லூரிப் பாடங்களைத் தவிர ஓய்வு நேரங்களில் அவர் மருத்துவ சம்பந்தமான நூல்களையெல்லாம் கற்றுத் தேர்ந்தார். முதல் வருட மாணவராயிருக்கும்போதே ஆப்பரேஷன் தியேட்டருக்குள் அவரது ஆசிரியர்களால் அனுமதிக்கப்படுமளவுக்கு அவரது மருத்துவ அறிவு மிளிர்ந்தது என்றால் பாருங்களேன்.

## 'அம்புரோஷியா'வின் ஆசிரியர்

மருத்துவப் படிப்பின் போது இடையில் அவரது தந்தை யார் திடீரென்று காலமானார். தாயும் நோய்வாய்ப்பட்டாள். குடும்பம் வறுமையில் தத்தளித்தது. படிப்பை இடையில் விடவேண்டிய இக்கட்டான சூழ்நிலை உருவாகியது. வேறு ஏதாவது வேலைக்குப் போகுமாறு தாய் எவ்வளவோ வேண்டிக் கொண்டும் மருத்துவத் துறையை விட்டுச் செல்ல அவரது மனம் இடம் தரவில்லை. எனவே தாம் பெற்று விளங்கிய மருத்துவ அறிவின் உதவியுடன் ஒரு மருத்துவப் பத்திரிகை ஆரம்பிப்பதென்று அவர் முடிவு செய்தார். அதற்கான ஆரம்பச் செலவுக்கு தாயார் 100 ரூபாய்

கொடுத்தார். தஞ்சையிலிருந்து குப்புசுவாமி திருச்சிக்குப் பயணமானார்.

"அம்புரோஷியா"

இதுதான் குப்புசுவாமி நடத்திய மருத்துவப் பத்திரிகையின் பெயர். 32 பக்கங்கள் கொண்ட அதன் முதல் இதழ் 1909-ல் வெளிவந்தது. 'அம்புரோஷியா' என்றால் அமிர்தம் என்று பொருள். பல்வேறு புனைப் பெயர்களில் குப்புசுவாமியே அதில் கட்டுரைகளை எழுதினார். பல பிரபல ஆயுர்வேத வைத்தியர்களிடமிருந்தும் சிறந்த கட்டுரைகளைப் பெற்று அவர் அதில் வெளியிட்டார். ஆங்கிலத்தில் தான் அந்தப் பத்திரிகை வெளியிடப்பட்டது என்றாலும் தமிழிலும் ஒரு சில பக்கங்களில் மருத்துவக் குறிப்புக்களை அவர் அம்புரோஷியாவில் வெளியிட்டார்.

மருத்துவம் மற்றும் பொது சுகாதாரத்தைப் பற்றிய கருத்துக்கள் அம்புரோஷியாவில் வெளியிடப்பட்டாலும் வாசகர்கள் அதில் காணப்பட்ட ஆன்மீக அடிப்படையை நோக்கத் தவறவில்லை. பத்திரிகையின் புகழ் எங்கும் பரவியது. கல்வி அறிவு பரவாத அந்தக் காலத்தில் பத்திரிகை வெளியிடுவது என்பது மிக மிகக் கடினம். குப்புசுவாமிக்கு வேறு எந்த உதவியாளரும் கிடையாது. பத்திரிகையின் ஆசிரியர், மானேஜர், அனுப்புபவர் எல்லாம் அவரே.

பத்திரிகை நடத்துவதற்கிடையில் தபால் மூலம் மருத்துவ ஆலோசனை வழங்க குப்புசுவாமி தலைப்பட்டார். அந்த வருமானமும் பத்திரிக்கையை நடத்தப் போதாததால் குப்புசுவாமி சென்னையில் இருந்த டாக்டர் ஹாலர்ஸின் மருத்துவ மனையில் சேர்ந்தார். அங்கே அவர் மருந்து கொடுப்பது, நோயாளிகளைக் கவனித்துக் கொள்வது, கணக்குப் பார்ப்பது போன்ற பல வேலைகளைச்

செய்தார். இவற்றுடன் பத்திரிகை வேலையும் ஒழுங்காக நடந்து கொண்டிருந்தது.

இதற்கிடையில் மருத்துவத் துறையில் பிரபலமாக விளங்கிய டாக்டர் ஐயங்காருடன் குப்புசுவாமிக்குத் தொடர்பு ஏற்பட்டது. சென்னையில் பணிபுரிந்த அந்த டாக்டர் அப்பொழுது சிங்கப்பூர் சென்றிருந்தார். சிங்கப்பூர் சென்று மருத்துவப் பணியைத் தொடர விரும்பிய குப்புசுவாமி அந்த டாக்டருக்குக் கடிதம் எழுதினார். அவரும் குப்புசுவாமியை மிக மகிழ்ச்சியுடன் வரவேற்பதாகப் பதில் எழுதினார். மலேயா போகத் தம்மை ஆயத்தப்படுத்தினார் குப்புசுவாமி.

1913ல் அம்புரோஷியா நிறுத்தப்பட்டது. நான்கு ஆண்டுக் காலம் அந்தப் பத்திரிகை வெளிவந்தது.

---

### சிவானந்தருடன் ஒரு நாள்

ஒரு ரயில்வே இஞ்சினியரும், ஒரு துணைப் பிரதம இஞ்சினியரும் குருதேவரைத் தரிசிக்க வந்தனர். தங்களை இன்னாரென்று அவர்கள் அறிமுகப்படுத்திக் கொண்டதும் குருதேவர் அவர்களிடம், "வெறும் செங்கல் சுண்ணாம்புப் பாலம் கட்டாமல், அமரத்வம் என்ற பாலத்தைக் கட்டுங்கள். ஜபம், கீர்த்தனை, ஸத் ஸங்கம், தியானம் போன்றவற்றால் அந்த அழியாப் பெருநிலையாம் பாலத்தைக் கட்டுங்கள். சம்சார சாகரத்தைக் கடக்க உதவும் இந்தப் பாலம்தான் அனைத்திலும் பெரிய பாலம் ஆகும். உயரிய ஆனந்தத்தையும் அமரத் தன்மையையும் இந்தப் பாலம் ஒன்றே உங்களுக்குத் தரும்", என்று ஆன்மீகப் பொறியியலை அவர்களுக்குப் புகட்டினார்.

# 3

## மலேயாவில் மருத்துவ சேவை

தமது மலேயாப் பயணம் பற்றி வீட்டில் குப்புசுவாமி தெரிவித்ததும் அதற்குப் பலத்த எதிர்ப்புக் கிளம்பியது. தாயார் கண்ணீர் விட்டு அழுதாள். 'கடல் கடந்து போவதை நமது சாஸ்திரங்கள் சம்மதிக்கவில்லை' என்று வாதித்தனர். குப்புசுவாமிக்கு இரண்டு அண்ணன்மார்கள். வீரராகவன். சிவராமன் என்பன அவர்களது பெயர்கள். வீரராகவன் எட்டையபுரம் ராஜாவின் அந்தரங்கச் செயலாளராகவும், சிவராமன் தபால் நிலைய இன்ஸ்பெக்டராகவும் பணிபுரிந்து வந்தனர். ஆனால் எதிர்ப்புக்கள் அனைத்தையும் தமது வாதத் திறத்தால் குப்புசுவாமி சமாளித்து அவர்களது சம்மதத்தையும் பெற்றார்.

### கடவுளைக் கண்டார்

குப்புசுவாமியின் நண்பர்கள் மதுரையில் அவருக்கு ஒரு பிரிவுபசார விழா நடத்தினர். அதுவரை குப்புசுவாமிக்கு நீண்ட பயணத்தின் அனுபவம் எதுவும் கிடையாது. அவரோ ஆசார அனுஷ்டானம் மிக்க சுத்தமான சைவ உணவு உண்ணும் குடும்பத்தைச் சேர்ந்தவர். கப்பல் பயணம் அந்தக் காலத்தில் இப்பொழுது இருப்பதைப் போல அவ்வளவு சௌகரியமாக இருந்த

தில்லை. குறிப்பாக கப்பலில் தயாரிக்கப்படும் அசைவ உணவைப் பற்றி நினைத்தாலே குப்புசுவாமிக்கு வயிறு குமட்டியது. இதை அறிந்த அவரது அன்னை நிறைய லட்டு செய்து பொட்டலம் போட்டு அவரிடம் அளித்தார். கையிலிருந்த கொஞ்சம் பணத்துடன் 'எஸ். எஸ். தாரா' என்னும் கப்பலில் குப்புசுவாமி சிங்கப்பூருக்குக் கிளம்பினார்.

கப்பல் பிரயாணத்தின் போதுகூட அவர் கையில் ஸ்டெதாஸ்கோப் எப்பொழுதும் காணப்பட்டது. கப்பல் பயணிகளில் எவருக்காவது ஏதேனும் உதவி தேவைப் படின் அந்த இடத்தில் டாக்டர் குப்புசுவாமியைக் காண லாம்.

அன்னை கொடுத்த லட்டுவையும் தண்ணீரையும் தவிர வேறு எதுவும் அவர் தமது கப்பல் பிரயாணத்தில் சாப்பிடாத தால் நாளாக ஆக அவரிடம் களைப்பு ஏற்பட்டது. மிகவும் தளர்ந்த நிலையில் அவர் சிங்கப்பூர் போய்ச் சேர்ந்தார்.

நேராக டாக்டர் ஐயங்காரைப் போய்ப் பார்த்தார். அவர் செரம்பானில் இருந்த டாக்டர் ஹெரால்டு பார்ஸன்ஸ் என்பவரிடம் ஒரு அறிமுகக் கடிதத்துடன் டாக்டர் குப்பு சுவாமியை அனுப்பி வைத்தார்.

செரம்பானில் குறிப்பிட்ட முகவரியில் டாக்டர் பார்ஸனைக் காணாது திகைத்தார் குப்புசுவாமி. என்ன செய்வதென்று தெரியவில்லை. கையிலிருந்த பணமும் செலவழிந்துவிட்டது. செரம்பானில் அவர் பசியுடன் சுற்றி அலைந்தார். தலை சுற்றியது. கண்கள் இருண்டன. மயங்கி விழுந்தார்.

கண் விழித்துப் பார்த்தார். தாம் ஒரு கோவிலில் இருப்பதை அவர் உணர்ந்தார். அந்தக் கோவில் அர்ச்சகர் அவருக்குச் சாப்பிடுவதற்குக் கொஞ்சம் தயிர் சாதம்

கொடுத்தார். அதைச் சாப்பிட்ட டாக்டர் குப்பு சுவாமிக்கு இழந்த உயிரை மீண்டும் பெற்றது போன்ற தெம்பு ஏற் பட்டது. பல வாரங்கள் கப்பல் பயணத்திற்குப்பின் அவர் சாப்பிட்ட சாப்பாடு அதுதான்! 'நான் கடவுளை முதலில் இந்த அர்ச்சகரிடம் கண்டேன்,' என்று பின்னர் தனது சுயசரிதையில் சுவாமிஜி இந் நிகழ்ச்சியைப் பற்றி உருக்க மாகக் குறிப்பிடுகிறார்.

## இப்படியும் ஒரு டாக்டர்

பின்னர் டாக்டர் பார்ஸனை அவர் தேடிக் கண்டு பிடித்தார். அந்த வேளையில் டாக்டர் பார்ஸனுக்கு உதவி யாளர் எவரும் தேவைப்படவில்லை எனவே தமது நண் பரான ராபின்ஸிடம் குப்புசுவாமியை அழைத்துச் சென்றார். ராபின்ஸ் மலேயாவில் இருந்த ஒரு ரப்பர் தோட்டத்தின் மானேஜராவார். அவர் மிகவும் முன்கோபக்காரர். நெடிது வளர்ந்த உருவம். 'உம்மால் ஒரு ஆஸ்பத்திரியைத் தனி யாகக் கவனித்துக் கொள்ள முடியுமா?', என்று ராபின்ஸ் டாக்டர் குப்புசுவாமியிடம் கேட்டார். 'ஒன்றென்ன, மூன்று ஆஸ்பத்திரிகளை என்னால் மேற்பார்வை செய்ய முடியும்', என்று உடனே டாக்டர் குப்புசுவாமி பதிலளித்தார். மாதம் 150 டாலர் சம்பளத்தில் டாக்டர் குப்புசுவாமி அங்கே வேலையில் சேர்ந்தார்.

தமது முந்தைய அனுபவத்தின் துணையுடன் டாக்டர் குப்புசுவாமி திறம்பட ஆஸ்பத்திரியை நிர்வாகம் செய்தார். டாக்டர் பார்ஸன்ஸ் அவரது திறமையைக் கண்டு பெரிதும் பாராட்டினார்.

ஆஸ்பத்திரி வேலையைத் தவிர டாக்டர் குப்புசுவாமி தனியாகவும் மருத்துவ சேவை செய்து வந்தார். டாக்டர்கள் பலர் அங்கே இருந்தாலும் ஏழைகள்பால் பரிவு காட்டிய ஒருவரை அங்கே காணுதல் அரிதாயிருந்தது. மற்ற டாக்டர் கள் தங்களை நோயாளிகள் சந்தித்துப் பேசுவதற்கே பெரும்

பணம் வாங்கினர். ஆனால் குப்புசுவாமியோ தம்மிடம் வந்த நோயாளிகளுக்குக் கைச் செலவுக்குப் பணம் கொடுத்து அனுப்பினார்.

எப்பொழுதும் மலர்ந்த முகத்தினராய் சிரிக்கச் சிரிக்கப் பேசி நோயாளிகளின் நோயை உற்சாக மூட்டும் பேச்சிலேயே பாதி குணமாக்கி விடுவார் டாக்டர் குப்புசுவாமி. நோயாளிகளைக் கவனிக்கையில் இடைவிடாது பிரார்த்தனையிலும் ஈடுபட்டார். அவரது ஆஸ்பத்திரியில் வெள்ளிக்கிழமை தோறும் கூட்டுப் பிரார்த்தனை உண்டு. பிரார்த்தனை முடிவில் அனைத்து நோயாளிகளுக்கும் பிரஸாதம் வழங்கப் படும். பிரார்த்தனையில் கலந்து கொள்ள இயலாத நோயாளிகளின் படுக்கைக்கு டாக்டர் குப்புசுவாமியே சென்று அவர்கள் வாயில் பிரஸாதத்தை இடுவார். அவரது பரிவைக் கண்ணுற்ற நோயாளிகளின் கண்களில் கண்ணீர் மல்கும். அவரது அருட் பிரஸாதத்தால் அவர்களது நோயும் விரைவில் குணமாய்விடும்.

மலேயாவில் டாக்டர் குப்புசுவாமி ஒரு வினாடிப் பொழுதையும் வீணாக்கவில்லை. மருத்துவத் தொண்டு மட்டுமல்லாது எவருக்கும் எந்த விதத்தில் உதவி தேவைப்பட்டாலும் உடனே ஓடோடியும் சென்று அவர் உதவிகளைச் செய்தார்.

மலேயாவில் இருந்த சமயம் அவர் விளையாட்டிலும் மிகுந்த ஆர்வம் காட்டினார். பல்வேறு விளையாட்டுப் போட்டிகளில் அவர் கலந்து கொண்டார். ஒரு சமயத்தில் மலேயா டிரிபியூன் என்ற பத்திரிகைக்கு அவர் விளையாட்டு நிருபராகக் கூடப் பணியாற்றினார்.

நேர்த்தியாக உடை அணிந்துகொள்வதில் அவருக்கு அப்பொழுது தனி விருப்பம் இருந்தது. சில சமயங்களில் அவர் ராஜபுத்திர இளவரசனைப் போலத் தோற்றமளிப்பார். பத்து விரல்களிலும் பத்து மோதிரங்களை சில வேளைகளில்

அவர் அணிந்திருப்பார். வெள்ளி தங்க நகைகளிலும், சந்தன மரப்பொருள்களிலும் அவருக்கு விருப்பம் உண்டு. சில சமயங்களில் இவை அனைத்தையும் அணிந்து கொண்டு மிடுக்காகத் தோற்றம் அளிப்பார். மற்றும் சில வேளைகளில் இவை எதுவுமின்றி மிகவும் சாதாரணமாகக் காட்சி தருவார். அதாவது எல்லாம் இருந்தும் ஒன்றிலும் பற்றுதல் அற்ற பெருநிலையில் அவர் இருந்தார்.

## படிப்பும் பஜனையும்

பெருவாரியாகப் பணம் அவர் கையில் புரண்டாலும், எந்தவிதமான தீய பழக்கத்தாலும் தாக்கப்படாது அவர் தூய்மையான வாழ்க்கை வாழ்ந்தது அனைவரையும் அதிசயத்தில் ஆழ்த்தியது.

தத்துவப் புத்தகங்கள் எதுவானாலும் அவர் அவற்றை உடனுக்குடன் வாங்கிப் படித்துவிடுவார். தன்னிடம் இருந்த புத்தகங்களின் பட்டியலைக் கடைக்காரரிடம் கொடுத்து, இவை என்னிடம் உள்ளன. இவை தவிர வேறு தத்துவப் புத்தகங்கள் உங்களிடம் எவை இருந்தாலும் அவற்றை என் இருப்பிடத்திற்கு அனுப்பி வையுங்கள்,' என்று சொல்வது அவரது வழக்கம்.

பஜனை, சங்கீர்த்தனம், ஜபம் இவற்றில் டாக்டர் குப்புசுவாமிக்கு ஈடுபாடு அதிகம் உண்டு. ஜபமாலைகளை வாங்கி நண்பர்களுக்கு அவர் இலவசமாக விநியோகம் செய்வார். அடிக்கடி தமது நண்பர்களை பஜனைக்கு அழைத்து தெய்வீகத்தில் அவர்களை ஈடுபடுத்துவார் இளம் சிறுர்களைப் பயிற்றுவித்து ராமாயண நிகழ்ச்சிகளை நாடகமாக நடித்துக் காட்டுவார், எல்லோரும் இன்பமாக இருத்தல் வேண்டும் என்பதுவே அவரது ஒரே இலட்சியம்.

குறிப்பிட்ட நேரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு மணி நேரத்திற்கு முன்னதாகவே குருதேவர் நண்பர்கள்

அழைக்கும் நிகழ்ச்சிகளுக்குச் சென்று அங்குள்ளோரை ஒன்று திரட்டி திவ்ய நாம பஜனையில் ஈடுபடுத்துவார். தம்மை அவர்கள் அழைக்காவிடினும் இவராகவே வலுவில் போய், 'என்னை நீங்கள் மறந்து விட்டீர்களா? இவ்வளவு எளிதில் எப்படி உங்களால் என்னை மறக்க முடிந்தது? இருந்தாலும் நீங்கள் எனக்கு மிகவும் வேண்டியவர். உங்கள் வீட்டு நிகழ்ச்சியில் கலந்துகொள்வது எனது தலையாய கடமையாகும்,' என்று சொல்லி வழக்கம் போல் நாமாவளிகளைத் தொடங்கி விடுவார். இறைவன்பால் அவருக்கு இருந்த அளவற்ற பக்தியும், எங்கும் தெய்வீகத்தைப் பரப்ப வேண்டும் என்று அவர் கொண்டு விளங்கிய பேரார்வமும் அவரை இப்படிச் செய்யத் தூண்டின.

அள்ளி அள்ளிக் கொடுத்தார்

எவரிடமும் எந்தவிதக் கடுஞ் சொல்லையும் அவர் பிரயோகிக்க மாட்டார். எவர் என்ன சொன்னாலும் வெறும் புன்முறுவலுடனே அவர் அதை ஏற்றுக் கொள்வார். மலேயாவில் ஆரம்பத்தில் அவர் தமது உணவைத் தாமே தயாரித்து வந்தார். பின்னர் ஒரு சமையற்காரன் அவருக்குத் தேவைப்பட்டது. நரசிம்ம ஐயர் என்பவர் சமையற்காரராக வந்து சேர்ந்தார். சமையற்காரர் என்பது பெயரளவில்தான். அவருக்கு வேண்டிய உதவிகளை டாக்டர் குப்புசுவாமியே செய்து வந்தார். நரசிம்ம ஐயருக்குப் பேசிய சம்பளம் 25 டாலர்கள். ஆனால் மாத முடிவில் டாக்டர் 35 டாலர்களைக் கவருக்குள் வைத்து 'இது எனது அன்புக்காணிக்கை. ஏற்றுக்கொள்ளுங்கள்', என்று அவரிடம் வேண்டிக்கொண்டார். டாக்டர் தம்மீது காட்டிய அன்பைக் கண்டு அந்தச் சமையற்காரர் மனம் நெகிழ்ந்து நின்றார்.

நரசிம்ம ஐயருடன் டாக்டர் பழகிய விதமே தனி. தத்துவ நூல்களைக் கொடுத்து அவரைப் படிக்கச் செய்தார்.

அவருக்கு ஆசனங்கள் சொல்லிக் கொடுத்தார். தமது உடையை அவருக்கு அளித்து அவரைப்போட்டோ எடுத்துத் தமது படத்துடன் மாட்டினர். தாம் எஜமானர் அவர் பணியாளர் என்ற பாகுபாடு எதுவும் இன்றி சமையற்காரரான அந்த அன்பருக்கு எது மகிழ்ச்சி அளிக்குமோ அதைச் செய்ய அவர் கொஞ்சமும் தயங்கியது கிடையாது. பிறரது இன்பத்தில் தமது இன்பத்தைக் கண்டவர் அவர்.

ஹார்மோனியத்தில் அவருக்கு விருப்பம் ஏற்பட்ட காரணத்தால் ஒரு வித்வானிடம் முறையாக ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக்கொண்டார். ஒரு மாதம் தான் பெற்ற பயிற்சிக்கு அந்த வித்துவானுக்கு 200 டாலர்கள் அளித்ததைக் கண்டு அந்த வித்துவான் திகைத்துவிட்டார். தம்மிடம் இருந்ததை அள்ளி அள்ளிப் பிறருக்குக் கொடுப்பதில் அவருக்கு இணை வேறு எவரும் கிடையாது.

பெரும் செல்வச் செழிப்பில் திளைத்த அவர் பலருக்கும் தம்மாலான விதத்தில் உதவினர். உடை கொடுத்தார். பணம் கொடுத்தார். இவரது இனிய உணவை ருசிப்பதற்காகவும், அவர் ஹார்மோனியம் வாசிப்பதைக் கேட்பதற்காகவும் மலேயாவின் பல பாகங்களிலிருந்தும் பலர் அவரைத் தேடி ஓடி வந்தார்கள். சில சமயம் பிச்சைக்காரர்களை டாக்டர் தம் வீட்டிற்குள் அழைத்துச் சென்று அவர்களுக்கு உணவளித்து கொஞ்சம் பணமும் கொடுத்து அனுப்புவார். தம்மிடம் வந்த எவரையும் வெறும் கையுடன் அவர் அனுப்பியதே கிடையாது. அவர் அங்கே பெரிய பதவி எதுவும் வகிக்காவிடினும் மக்களிடையே மிகவும் பிரபலமாக விளங்கினர். மலேயாவிற்கு எந்த இந்தியர் சென்றாலும் 'ஜோஹார் பஹரு'வில் இருந்த டாக்டர் குப்புசுவாமியிடம் அவர்கள் அனுப்பப்பட்டனர்.

செரம்பான், ஜோஹூர் பஹருவில் அவரைத் தெரியாதவர்கள் கிடையாது என்னுமளவிற்கு டாக்டர் குப்புசுவாமி பிரபலமடைந்து விட்டார். அனைவரும் ஏதாவது ஒரு விதத்தில் தங்களுக்குப் பல விதத்திலும் உதவி செய்த டாக்டருக்கு உதவி செய்யப் போட்டி போட்டுக் கொண்டு முன்வந்தனர். ரயில் நிலையங்களில் ஸ்டேஷன் மாஸ்டர்கள் ரயிலை டாக்டருக்காகத் தாமதப்படுத்தினர். தபால் நிலையங்களில் போஸ்ட் மாஸ்டர்கள் டாக்டருக்குரிய தபால்களைத் தயாராய் தனியாய் எடுத்து வைத்திருந்தனர். கரையிலிருந்து புறப்பட்டுச் சென்ற கப்பல்கள் டாக்டரை ஏற்றிக் கொள்வதற்காகத் திரும்பி வந்தன. பாங்க் அதிகாரிகள் அகாலத்திலும் விடுமுறை நாட்களிலும் கூட அவரது செக்குகளுக்குப் பணம் அளிக்க முன்வந்தனர். சுருக்கமாகக் கூறின் அனைவரது உள்ளம் கவர்! கள்வனாக டாக்டர் குப்புசுவாமி மலேயாவில் திகழ்ந்தார்.

---

சிவானந்தரின் அருள்வாக்கு

குருவின் திருநாமத்தை சதா ஜபித்து சதா குருவிற்குத் தொண்டு செய்பவர்களிடம் சித்திகள் பல தாமாகவே வந்து சேருகின்றன.

---

# 4

## டாக்டர் குப்புசுவாமி சுவாமி சிவானந்தர் ஆனார்

சிறு பிராயத்திலிருந்தே குப்புசுவாமியிடம் தெய்வீக அம்சங்கள் வெளிப்பட்டன என்று நாம் பார்த்தோம். தமது பெற்றோரிடமிருந்துதான் அவர் அந்தத் தெய்வீகப் பண்புகளைப் பெற்றார் என்றால் அது மிகையாகாது, சந்தியாவந்தனம் மற்றும் காயத்ரி மந்திர ஜபத்தில் அவர் மிகவும் ஒழுங்காக இருந்தார். தவறாது ஆலயம் செல்வார். சமய உபன்யாசங்கள் மற்றும் பஜனைகளில் தவறாது பங்கு கொண்டார்.

### கேள்வி பிறந்தது

கல்லூரிப் பருவத்திலும் அவர் தமது சமய அனுஷ்டானங்களில் சிறிதும் தவறவில்லை. கீதை, உபநிடதங்கள், பாரதம் முதலியவற்றுடன் தாயுமானவர், ராமலிங்கர், பதினெண் சித்தர்கள் போன்ற தமிழ்ப் பெரியார்களின் நூல்களையும் அவர் ஆழ்ந்து கற்றார். சுவாமி ராமதீர்த்தர்,

யோகி ராமசரகர் போன்ற மகான்களின் நூல்களை அவர் மீண்டும் மீண்டும் படித்தார். யோகாசனம், பிராணாயாமம், தியானம் முதலியவற்றில் அவர் மிகுந்த கவனம் செலுத்தினார். யோக சாஸ்திரங்களுக்கு இணங்க அவர் தமது ஊண் உறக்கத்தை அமைத்துக் கொண்டார்.

மலேயாவில் அவரது ஆன்மநாட்டம் மேலும் பன்மடங்காக அதிகரித்தது. ஹடயோகி கிருஷ்ணாஜி போன்ற பலருடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. ஒரு சில பிரபல தாந்திரிகர்களுடன் அவருக்கு ஏற்பட்ட தொடர்பு மிகவும் முக்கியமானது. தாந்திரிகர்களில் ஒருவர் டாக்டர் குப்புசுவாமிக்கு வெகு தொலைவில் நிகழும் நிகழ்ச்சிகளை அறிய வல்ல வித்தையைக் கற்றுக் கொடுத்தார். சிறிது காலம் அதில் சிரத்தை காட்டிய டாக்டர் குப்புசுவாமி தேவதைகளை அடிமைப்படுத்திப் பெறப்படும் இத்தகைய சித்திகள் நல்லதல்ல என்று முடிவு செய்து அதைப் பூரணமாக ஒதுக்கித் தள்ளினார். சாதாரண சித்திகளால் மேலான ஆன்ம லாபம் எதுவும் கிடைக்காது என்பதும் அவரது கருத்தாகும்.

மனித குலத்துக்குத் தொண்டு, மறைநூல்கல்வி, நல்லாரிணக்கம், தொடர்ந்த ஆன்ம சாதனை — இவை எல்லாமாகச் சேர்ந்து டாக்டர் குப்புசுவாமியிடம் படிப்படியான மாற்றத்தை ஏற்படுத்தின. அவரது மனம் மென்மேலும் தூய்மை பெற்றது. புறநோக்கு அக நோக்காக மாறியமைந்தது.

தன்னைச் சுற்றிலும் உள்ள மக்கள் உடற்பிணி, உள்ளப் பிணி போன்ற ஏதாவதொரு பிணியால் பெரிதும் வருந்தியதைக் கண்டு அவரது மனம் மிகவும் இளகியது. ஏழை எளியோரின் துன்பம் கண்டு அவர் கசிந்துருகினார். சிலர் வாழ்வைக் காட்டிலும் சாவைப் பெரிதும் நாடினர்; சிலர்

சாகாமல் செத்துக் கொண்டிருந்தனர். டாக்டர் இதைக் கண்டு பெரிதும் சிந்தனையிலாழ்ந்தார்.

மலேயாவில் மலேரியா அப்பொழுது படாதபாடு படுத்தியது. கூடவே ஸ்பானிஷ் காய்ச்சலும் சேர்ந்து கொண்டது. எத்தகைய மருத்துவ உதவி அளித்தும் பலர் மரணமடைந்தனர். நேற்று இருந்த பலர் இன்று தம்முடன் இல்லையென்ற பரிதாப நிலையைக் கண்டார் டாக்டர் குப்புசுவாமி. இதுதானா இவ்வுலகத்தின் பெருமை? மரணத்தின் பிடியிலிருந்து மக்களை யாரும் காப்பாற்ற முடியாதா? மரணம் என்பது அவ்வளவு பயங்கரமானதா? மரணத்திற்குப் பின் மனித நிலை என்ன ஆகிறது? எதற்காக இந்த அழுகை, ஓலம், கூக்குரல், ஒப்பாரி, கண்ணீர் எல்லாம் ............ இப்படியாக டாக்டரின் உள்ளம் சிந்தித்தது.

## அவர் பெற்ற பொக்கிஷம்

இந்தத் தருணத்தில் ஒரு நாடோடி சன்னியாசியின் தொடர்பு டாக்டருக்கு ஏற்பட்டது. அந்தத் துறவி திடீரென்று நோய்வாய்ப்படவே டாக்டர் குப்புசுவாமி அந்த சன்னியாசிக்கு மிகுந்த பரிவுடன் மருத்துவச் சிகிச்சை அளித்தார். டாக்டரது தொண்டினைக் கண்டு வியந்த துறவி தம்மிடம் இருந்த ஒரு பெறற்கரிய பொக்கிஷத்தை அவருக்கு அன்பளிப்பாக அளித்தார். கடப்பை சச்சிதானந்த சுவாமிகள் எழுதிய 'ஜீவ பிரம்ம ஐக்ய வேதாந்த ரகசியம்' என்ற ஒப்பற்ற நூலே அது. அந்நூல் டாக்டர் குப்புசுவாமியைப் பெரிதும் கவர்ந்தது. அதைப் படித்தபின் அவருக்கு மானிட வாழ்வின் தன்மை பற்றியும் அதனது இலட்சியம் பற்றியும் திட்ட வட்டமான ஒரு கொள்கை மனதில் பதிந்தது.

அதன்பின் பொருள் நாட்டத்திலிருந்து விடுபட்டு அவரது மனம் அருள் நாட்டத்தில் செல்ல ஆரம்பித்தது.

நாளுக்கு நாள் அது வலுப்பெற்றது. அனாஹதலய யோகம் மற்றும் ஸ்வர சாதனையில் அவர் தமது பயிற்சிகளைத் தீவிரப்படுத்தினார். தியானத்தின் பொழுது யோகி கேட்கும் அனாஹத ஒலியில் மனத்தை ஒருமைப்படுத்துதல் அனாஹ தலய யோகமாகும். பிராணாயாமத்தின் ஒரு பகுதி ஸ்வர சாதனையாகும். இரவு பகல் பாராமல் அவர் இதே சிந்தனை யில் ஆழ்ந்திருந்தார். 1923-ம் வருடம் ஒருநாள் அவருக் குள்ளே அமிழ்ந்திருந்த ஆன்மீக உணர்ச்சிகள் அனைத்தும் ஒருங்கு திரண்டு மேலெழுந்தன. அவருக்கு உலக வாழ்வு கசந்தது. பங்களா வாழ்வு, எடுப்பான உடை, மினுக்கும் நகைகள். அறுசுவை உணவு, பெயர், புகழ், பணம் எல்லாம் கசந்தன. 'இவையெல்லாம் ஒருவனுக்கு நிரந்தரமான உண்மை இன்பத்தை அளிக்குமா?'— திரும்பத் திரும்ப அவரது மனம் இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டி ருந்தது.

'இதற்கு ஒரு முடிவு உண்டா? நிரந்தரமான உண்மை இன்பத்தை அடையும் மார்க்கம் எது?—' அவர் தன்னைத் தானே கேட்டுக் கொண்டார்.

இதே சிந்தனையில் சதா மூழ்கியிருந்த அவரது நா இடைவிடாது 'ஓம் நமசிவாய ஓம் நமசிவாய' என்று முணு முணுத்துக் கொண்டிருந்தது.

உறக்கம் தவிர்த்தார், உணவைத் தவிர்த்தார். ஏதோ ஒரு சக்தி தம்மை ஆட்கொண்டு விட்டதாக அவர் உணர்ந் தார். யாருடனும் எதுவும் பேசவில்லை. அவரது நண்பர்கள் அவரிடம் ஏற்பட்ட இந்தத் திடீர் மாற்றத்தைக் கண்டு திடுக் கிட்டனர். பலரும் அவரைப் பற்றி பலவிதமாக எடை போட்டனர்.

இந்த நிலையில் ஆஸ்பத்திரியில் தம்மால் மேலும் கடமை களைச் செவ்வனே செய்ய முடியாது என்பதை அவர் உணர்ந் தார். எனவே அந்த வேலையை முதலில் துறந்தார். தமது

சேமிப்பில் பெரும் பகுதியை யார்யாருக்கெல்லாமோ எடுத்து வழங்கினார். எஞ்சியிருந்த சிலவற்றை எடுத்துக் கொண்டு மலேயாவை விட்டுப் பாரதம் நோக்கி அவர் கிளம்பினார்.

காசியை நோக்கிக் கர்மவீரர்

கப்பலில் முன்பின் தெரியாத ஒருவர் அவரைக் கூர்ந்து பார்த்தார். "ஆகா! உமது நெற்றியில் பிக்ஷுரேகை ஓடுகிறது" என்று மகிழ்ச்சியுடன் அவர் கூறினார். டாக்டர் குப்புசுவாமி விரைவில் துறவியாக மாறி விடுவார் என்பதை அவர் குறிப்பால் உணர்த்தி விட்டுச் சென்றார்.

கப்பல் சென்னையை அடைந்தது. தமது நண்பர் ஒருவருடைய வீட்டிற்கு டாக்டர் குப்புசுவாமி நேராகச் சென்றார். அந்த சமயத்தில் அந்த நண்பர் எங்கேயோ வெளியே சென்றிருந்தார். அந்த நண்பரது மனைவி கதவைத் திறந்து அவரை வரவேற்றார். டாக்டர் குப்புசுவாமி வீட்டிற்குள் செல்லாமல் வெளியிலேயே நின்றார். வண்டிக் காரன் சாமான்களை அந்த வீட்டிற்குள் பத்திரமாக இறக்கி வைத்தான். அதன்பின் அவர் அந்த அம்மையாரிடம், 'அவர் வந்தால் சொல்லுங்கள். நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்", என்று கூறி அவ்விடத்தை விட்டு அகன்றார்.

அங்கிருந்து அவர் சென்ற சில நிமிடங்களுக்குள் அந்த நண்பர் வீட்டை வந்தடைந்தார். நடந்ததை அறிந்து ஓடோடியும் சென்று டாக்டர் குப்புசுவாமியை இடைமறித்தார். 'ஒரு வேளையாவது என் வீட்டிற்கு வந்து சாப்பிட்டு விட்டுப் போங்கள்', என்று மன்றாடினார். ஆனால் டாக்டர் குப்புசுவாமியோ முன் வைத்த காலைப் பின் வைக்கத் தயாரா யில்லை. நேராக ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று அங்கே தயாராய்க் காத்துக் கொண்டிருந்த ரயிலுக்குள் சென்று அமர்ந்தார்.

ரயில் சிறிது நேரத்தில் புறப்பட்டது. வடக்கு நோக்கி வேகமாக அது ஓடத் தொடங்கியது. ஏதோ ஒரு பெரிய பாரத்தைக் கீழே வைத்தது போல அவர் உணர்ந்தார்.

நேராகக் காசியைச் சென்றடைந்தார். வழியில் எவருடனும் எதுவும் பேசவில்லை. எந்தக் காட்சியிலும் அவர் மனம் லயிக்கவில்லை, 'நான் இப்பொழுதே கடவுளை உணர்ந்தாக வேண்டும்'— இந்த ஒரு எண்ணமே அவர் மனத்தின் மேல் மட்டத்தில் நின்றது.

கங்கையில் ஸ்நானம் செய்தார். விஸ்வநாதர் ஆலயத்துக்குச் சென்றார். இறைவன் முன் தம்மை மறந்து நின்றார். சொல்லொணுத ஒரு உணர்ச்சி அவரை ஆட்கொண்டது.

வாரணுசி என்றால் ஒரு சிறிய கிராமமாயிருக்கும், அங்கே ஏதோ ஒரு மரத்தடியில் அமர்ந்து போவோர் வருவோரிடம் பிச்சையை ஏற்றுக் காலம் தள்ளலாம் என்று எண்ணிய அவர் அது ஒரு பெரிய நகரமாயிருந்தது கண்டு ஏமாற்றமடைந்தார். கையிலோ காசு இல்லை. இரவைக் கழிக்க ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார். நடுக்கும் குளிர். டிசம்பர் மாதக் குளிர் என்றால் வட இந்தியாவில் கேட்கவே வேண்டாம்! அதையெல்லாம் பற்றி அவர் எதுவுமே தெரிந்து கொள்ளாது ரயிலேறி விட்டார். இறைவனிடம் மனம் லயித்திருந்ததால் ஓரளவுக்கு அவரால் அந்தக் குளிரைப் பொறுத்துக்கொள்ள முடிந்தது. இவரது இந்தப் பரிதாப நிலையைக் கண்டு மனம் இரங்கிய யாரோ ஒருவன் ஒரு கம்பளியை அவரிடம் கொடுத்து விட்டுச் சென்றான். இறைவன் தம் மீது கருணை கொண்டு அளித்த பரிசாக அதை அவர் ஏற்றார். கம்பளியைக் கொடுத்த நபர் அவரைப் பண்டரிபுரம் போகுமாறு சொல்லி புனு வரை ரயில் டிக்கட்டும் வாங்கிக் கொடுத்து விட்டுச் சென்றான்.

'புண சென்றடைந்ததும் தம்மிடம் மிச்சமிருந்த சில சில்லரைக் காசுகளையும் அவர் தானமாகக் கொடுத்து விட்டார். தம்மை இறைவனின் திருக்கரங்களில் முழுக்க முழுக்க அவர் ஒப்படைத்து விட்டார். ஊர் விட்டு ஊர் செல்லும் பரிவிராஜகராக அவர் காட்சி தந்தார். நாசிக், பண்டரிபுரம் போன்ற பல இடங்களுக்கு அவர் சென்றார். இடம், பாஷை, மக்கள் — எல்லாமே புதியவை.

அது சரி, பசி வந்த சமயம் எப்படிப் பிச்சை எடுப்பது? பிறருக்கு அள்ளி அள்ளிக் கொடுத்துத்தான் அவருக்குப் பழக்கமே ஒழிய பிறரிடம் எதையும் கேட்டுப் பெற்ற பழக்கம் கிடையாது. ஒரு வீட்டின் முன்னால் நின்று கொண்டு, அருகில் உள்ள ஏதாவது நபரின் காதருகே போய், அடங்கிய குரலில், 'நான் ஒரு மதராஸி, எனக்குப் பசிக்கிறது. கொஞ்சம் உணவு தரமுடியுமா?' என்று கேட்பாராம். அவரது ஆஜானு பாகுவான தோற்றத்தைப் பார்த்து அந்த நபர் ஆச்சரியப் படுவாராம். ஒருதரம் உணவுபெற்ற வீட்டில் மறுதரம் அவர் போக மாட்டார். இவ்விதம் கால் நடையாக இவர் கிராமம் கிராமமாகச் சென்று கொண்டிருந்தார்.

ஒரு சமயம் அவரிடம் இருந்த ஒரு ஜோடி வேஷ்டி களில் ஒன்று மிகவும் கிழிந்து போய் விட்டது. மிச்சமிருந்த ஒரே வேஷ்டியைத் துவைத்து, நதிக் கரையிலேயே உலர்த்தி அதை அணிந்து கொள்வார். இந்தப் பரிதாப நிலையைக் கண்ட ஒரு கிராமத்து மக்கள் கொஞ்சம் பணம் வசூல் செய்து புதிய வேஷ்டிகளை அவருக்கு வாங்கிக் கொடுத்தனர்.

### டாக்டர் துறவியானார்

பரிவிராஜக வாழ்க்கை டாக்டர் குப்புசுவாமிக்குப் பொறுமை, சமதிருஷ்டி போன்ற பல நல்ல குணங்களைப் பெறுவதற்கான ஒரு வாய்ப்பை அளித்தது.

இவ்விதமாக அவர் ஹரித்வாரை அடைந்தார். அங்கே ஒரு தர்மசாலாவிற்குச் சென்று தங்குவதற்கு இடம் கேட்டார். அந்த சத்திரத்துக்காரன் அவருக்கு இடம் தர மறுத்து விட்டான். இவருக்கு அப்பொழுது அவ்வளவாக ஹிந்தி தெரியாத காரணத்தால் அவனுடன் மேலும் தர்க்கம் செய்ய விரும்பாது அங்கிருந்து வெளியேறி கங்கைக் கரையில் ஹரிகி பௌடி என்னும் இடத்தில் பிளாட்பாரத்திலே பொழுதைக் கழித்தார்.

ஹரித்வாரிலிருந்து ரிஷிகேசை நோக்கி நடக்கலானார். வழியில் சற்று ஓய்வு கொள்வதற்காக ஒரு மரத்தடியில் கொஞ்சம் இளைப்பாறினார். அப்பொழுது அவ்வழியே வண்டியில் சென்ற யாரோ ஒரு கனவான் இவரை ஒரு பிச்சைக்காரன் என்று கருதி வண்டிக்குள்ளிருந்து கொண்டே ரூபாய் நாணயத்தை இவர் பக்கம் எறிந்துவிட்டுப் போனான். அதற்கு மேல் அங்கே உட்கார்ந்திருத்தல் நல்லதல்ல என்று கருதிய அவர் அந்த நாணயத்தைக் கொஞ்சமும் திரும்பிப் பாராது ரிஷிகேசை நோக்கி நடக்கலானார்.

ரிஷிகேசை அடைந்த சமயம் இருட்டிவிட்டது. அங்கு தபால் ஆபீஸுக்கு அருகில் இருந்த சரண்தாஸ் சத்திரத்தின் வராந்தாவில் அவர் படுத்து உறங்கினார். மறுநாள் அதிகாலையிலேயே எழுந்திருந்து கங்கையில் நீராடச் சென்றார். ரிஷிகேசத்தில் எங்கு நோக்கினும் ஒரே துறவியராகக் காட்சி அளித்தனர். அவர்களில் ஒரு குறிப்பிட்ட வயதான துறவி டாக்டர் குப்புசுவாமியின் கவனத்தை ஈர்த்தார். அந்தத் துறவியின் பெயர் சுவாமி விசுவானந்தர் என்பதாகும். அவரைக் கண்டதும் டாக்டர் குப்புசுவாமி அவரது பாதங்களில் விழுந்து வணங்கினார். ஏன் அப்படிச் செய்தார் என்பது அவருக்கே தெரியாது. தன் கால்களில் விழுந்து நமஸ்கரித்த டாக்டர் குப்புசுவாமியை அந்தத் துறவி அன்புடன் எழுப்பி அணைத்து ஆசீர்வாதம் செய்தார்.

பின்னர் டாக்டர் குப்புசுவாமி பாபா காலி கம்ளிவாலா சத்திரத்துக்குப் போய் பிட்சை வேண்டினர். அவர் சன்யாசி இல்லையாகையால் பிட்சை கிடையாது என்ற பதில் வந்தது. ஏமாற்றத்துடன் திரும்பி வந்தவரை சுவாமி விசுவானந்தர் எதிரில் கண்டார். சுவாமி விசுவானந்தர் டாக்டர் குப்புசுவாமியை உற்று நோக்கினர். இவரால் விரைவில் உலகம் உய்ய இருக்கிறது என்பதை அந்த மகான் தமது ஞான திருஷ்டியால் கண்டு கொண்டார். அன்றைய தினமே அவருக்கு சுவாமி விசுவானந்தர் சன்யாச தீட்சை அளித்து சுவாமி சிவானந்தர் என்ற பெயரையும் சூட்டினர்.

அந்த நல்ல நாள் ஜூன் 1, 1924 ஆகும்.

டாக்டர் குப்புசுவாமியாக அதுவரை இருந்தவர் அன்று முதல் ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதியாக ஆனர்.

---

## சிவானந்தருடன் ஒருநாள்

ஒரு பக்தர் ஆசிரம நிர்வாகத்தைப் பற்றிக் குரு தேவரிடம் விமரிசனம் செய்து கொண்டிருந்தார்.

"சுவாமிஜி! அதிகமதிகப் பக்தர்கள் ஆசிரமத்திற்கு வருவதால் மென்மேலும் அறைகள் இங்கே தேவைப் படுகின்றன."

"ஆமாம், நீங்கள் சொல்வது ரொம்பவும் சரி. எனக்கும் இங்கே இன்னும் நிறையக் கட்டடங்கள் கட்ட வேண்டும் என்ற விருப்பம் உள்ளது. ஆனல் அதற்குத் தேவையான பணம் உங்கள் சட்டைப் பையில் உள்ளது."

அதைக் கேட்டு அங்கிருந்த அனைவரும் சிரித்து ரசித்தனர்.

# 5

## இளம் துறவியின் கடும் தவம்

### அச்சமில்லா ஆன்மவீரர்

ரிஷிகேசத்தில் சத்திரங்கள் ஏராளம் உள்ளன. சாதுக்களைப் பராமரிப்பதற்காகவே பாபா காலி கம்ளி வாலா போன்ற சான்றோர்கள் நிரந்தரமான நல்ல பல ஏற்பாடுகளைச் செய்து வைத்திருக்கின்றனர். முதலில் பல்வேறு தர்ம சாலாக்களுக்குச் சென்று சுவாமிஜி (இனிமேல் குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரை சுவாமிஜி என்றே சுருக்கமாகக் குறிப்பிடுவோம்) உணவு ஏற்று வந்தார். ஆனால் படிப் படியாக அதற்காகும் நேரத்தைக் குறைத்து சாதனைக்காகும் நேரத்தை அதிகப்படுத்தினார்.

பின்னர் முனிகீரேதியில் இருந்த பிரம்மானந்த ஆசிரமத்துக்கு சுவாமிஜி சென்றார். அங்கிருந்து பார்த்தால் கங்கை நதி மற்றும் இமயமலையின் அழகிய காட்சி கிட்டும். ரிஷிகேசத்திலிருந்து சுமார் 2 மைல் தொலைவில் வடக்கில் அந்த ஆசிரமம் அமைந்திருந்தது. அங்கே இருந்த இரண்டு சிறிய அறைகளில் ஒன்றில் அவர் தங்கித் தவம் புரிந்தார்.

துறவியான பின்னர் பழைய முறை வாழ்விலிருந்து தம்மை மாற்றிக்கொள்ள அவர் பெரிதும் முனைந்தார். ஆனால் மகாத்மாக்களுக்கும் நோயுற்றோருக்கும் மருத்துவச் சிகிச்சை செய்யாமலிருக்க மட்டும் அவரால் இயலவில்லை. தம்மருகில் எவராவது நோயினால் வருந்தினால் போதும், சுவாமிஜி உடனே சென்று அவர்களுக்கான சிகிச்சையைத் தொடங்கி விடுவார். தொண்டு செய்வது என்பது மூச்சு விடுவது, உண்பது, உறங்குவது போல அவருடன் ஒட்டிய ஒரு இயற்கைச் செயலாக மாறிவிட்டது. இத்தகைய தொண்டைத் தொடர்வதற்கு பிரம்மானந்தாசிரமம் அவருக்கு உதவி கரமாக இல்லை. எனவே கங்கையைக் கடந்து அக்கரையி லிருந்த லக்ஷ்மண் ஜூலாவை அடைந்தார். அந்த இடத்தில் இயற்கை அன்னை தனது அழகு அவ்வளவையும் அள்ளிக் கொட்டியிருந்தாள். அந்த இடத்தில் இயற்கையோடி யைந்தவாறே சுவாமிஜி கிராமந்தோறும் பக்தியைப் பரப்பி வந்தார். அங்கே ஒரு பழைய குடில். அதனது கதவு ஜன்னல் எல்லாம் தகர்ந்து காணப்பட்டது. வெகுகாலம் அங்கே யாருமே வசிக்காதது போலத் தென்பட்டது. அதைச் சுற்றி ஒரே புதராக மண்டிக் கிடந்தது. கரையான் புற்றும் ஆங்காங்கே காணப்பட்டது. பகலில் கிடைத்த உணவை உண்டு, மீதி நேரத்தை ஜபம், தியானத்தில் அவர் கழித் தார். இரவில் இலைகளைப் பரப்பி அதன் மீது படுத்துறங் கினார்.

அடிக்கடி அடர்ந்த காடுகளுக்குள் அவர் 'ஓம்' என்று முழங்கியவாறே நெடுந்தூரம் தனியாகச் செல்லுவார், சில இடங்களில் கரடி, புலி போன்ற கொடிய விலங்குகள் எதிர்ப்படும். அவற்றைக் காணுகையில் இவர் இறைவனை நேரில் காண்பது போல எண்ணி அவற்றை வணங்குவார். அவைகளும் இவருக்கு எவ்விதத் தீங்கும் விளைவிக்காமல் அப்பால் சென்றுவிடும்.

சாதுக்களின் தொண்டில் மகான்

லக்ஷ்மண் ஜூலாவில் இருந்த சாதுக்கள் ஆரோக்கியம் குன்றிய நிலையில் அவதிப்படுவதைக் கண்ட சுவாமிஜியின் மனம் இரங்கியது. அவர்களுக்கு மருத்துவ உதவி செய்ய அவர் விரும்பினார். கையில் காசு இல்லை. என் செய்வார்? எதிர்பாராதவிதமாக சுவாமிஜியின் வக்கீல் நண்பர் ஒருவர் 5000 ரூபாயை சுவாமிஜியிடம் கொண்டு வந்து கொடுத்தார். ''பணம் தன்னளவில் மோசம் அல்ல. அதை எப்படி நாம் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்தே அது நல்லதாக வோ அல்லது தீயதாகவோ அமைகிறது. எனவே இறைவனைப் பார்த்து எனது மருத்துவத் தொண்டிற்காக இதை அனுப்பி வைத்திருக்கிறார். இதை ஏற்பது எனது கடமை. இதில் ஒரு பைசாகூட எனது சொந்த உபயோகத்திற்காக எடுத்துக்கொள்ள மாட்டேன்,'' என்று உறுதி கொண்டு அந்தத் தொகையை சுவாமிஜி தபால் அலுவலக வங்கியில் போட்டு வைத்தார். அதிலிருந்து கிடைக்கப்பெற்ற வட்டித் தொகை கொஞ்சம் சேர்ந்ததும் தேவையான மருந்துகளை வாங்கி தீவிர மருத்துவத் தொண்டில் ஈடுபடலானார்.

வெறும் மருந்துகள் மட்டும் போதாவே, அந்த மகாத்மாக்களுக்கு ஊட்டச் சத்துள்ள உணவை அளிக்கும் நோக்கத்துடன் அந்த வட்டிப் பணத்தின் ஒரு பகுதியை மருத்துவச் செலவுக்கும், மறு பகுதியை அவர்களுக்குப் பால், ரொட்டி, பார்லி, தயிர் போன்றவற்றை அளிக்கவும் குருதேவர் சுவாமி சிவானந்தர் பயன்படுத்தினார்.

இவரது தன்னலமற்ற மருத்துவ சேவையை சுவாமி காளிகானந்தா என்ற மகாத்மா கூர்ந்து கவனித்து வந்தார். ஒரு நாள் அவர் இலவச மருந்தகம் ஒன்றை ஆரம்பிப்பது பற்றி குருதேவருடன் பேச்சு நடத்தினார். அதைக் கேட்டதும் குருதேவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை.

விரைவிலேயே 'சத்திய சேவாசிரம மருந்தகம்' உருவெடுத்தது. இது நடந்தது 1925ம் வருடத்திலாகும். லக்ஷ்மண்ஜுலா பாலத்திற்கு வடபுறத்தில் பத்ரி கேதார் சாலையின் முகப்பில் ஒரு சிறு அறையில் அப்பணி துவக்கப் பட்டது. வழிப்போக்கர்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் அதன் மூலம் அரிய மருத்துவ உதவி கிட்டியது.

படிப்படியாக லக்ஷ்மண்ஜுலா சாதுக்களிடையே குருதேவரின் புகழ் பிரபலமடைந்தது. மலர்ந்த இனிய முகம், வேடிக்கையும் விநோதமுமான பேச்சு, இடைவிடாத தன்னலமற்ற தொண்டு – இவை போன்ற நல்ல பல அம்சங்கள் அந்த சாதுக்களின் வட்டாரத்தில் அவரைத் தனிப் படுத்திக் காட்டின.

குருதேவரின் புகழைக் கேள்விப்பட்ட சுவர்க்காசிரமத் தலைவர் அவரை அணுகி சுவர்க்காசிரமத்தில் வந்து தங்கும் படி வேண்டிக் கொண்டார். சுவர்க்காசிரமம் என்பது இப் பொழுது சிவானந்தாச்சிரமம் இருக்கும் பகுதிக்கு எதிர்க் கங்கைக் கரையில் அமைந்திருக்கும் சாதுக்களின் ஒரு பெரிய ஸ்தாபனமாகும். சுவர்க்காசிரமத்தில் குருதேவர் தங்கியிருந்த அறை எண் 83 ஆகும். குருதேவரின் பெருமையை உணர்ந்த சுவர்க்காசிரம நிர்வாகிகள் மற்ற சாதுக்களைப் போல் இவரை ரொட்டிக்கும் பருப்புக்கும் கியூவில் நிற்க வைக்காது தனியாக மதிப்புடன் கவனித்துக் கொண்டனர். இவருக்காக விசேஷமாக தயிர், நெய், பால் போன்றவை அளிக்கப்பட்டன. அனைத்தையும் பெற்றுக் கொண்ட குருதேவர் லக்ஷ்மண்ஜுலா சாதுக்களிடையே அவற்றை விநியோகித்து மகிழ்ச்சி அடைந்தார்.

சுவர்க்காசிரமத்தில் வசித்த சமயத்தில் குருதேவர் கடும் தவத்துக்கு தன்னை உட்படுத்திக்கொண்டார். யோகாசனம், பிராணாயாமம், ஜபம், தியானம், ஹடயோகக்

கிரியைகள், சேவை போன்றவற்றிற்கு இன்னின்ன கால அளவு என்று ஒரு அட்டவணை போட்டு சாதனையில் ஈடு பட்டார். சில சமயங்களில் பனிக்காலத்திலும் கூட ஐஸ் போன்று சில்லிட்ட கங்கை நீரில் முழங்காலளவு ஆழத்தில் நின்று கொண்டு மணிக்கணக்கில் ஜபத்தில் ஈடுபட்டார். உரிய முறையில் செய்யப்பட்ட பிராணாயாமப் பயிற்சிகள் குரு தேவருக்கு அளவற்ற ஆற்றலைக் கொடுத்தன. தமது பிராண சக்தியை நோயாளிகளின் நோயுற்ற உள் பகுதிகளுக்கு மாற்றவும் அவர் தமது ஆற்றலைப் பயன்படுத்தினார். மருந்து கொடுத்த பின் நோயாளிகளின் பாதங்களை இதமாகத் தடவிக் கொடுப்பார். அதன் அடிப்படை நோக்கம் மேற் கூறியது போல தமது பிராணசக்தியை அவர்களிடம் செலுத்தி விரைவில் அவர்களைக் குணப் படுத்துவதற்காகவே யாகும்.

*சுவர்க்காசிரமத்தில் சாதனை*

சுவர்க்காசிரமத்தில் இருக்கையில் குருதேவர் அதிகாலை நான்கு மணிக்கு முன்னதாகவே எழுந்து விடுவார். கங்கை நீரில் இடுப்பளவு ஆழத்தில் நின்று கொண்டு சூரியோதயம் வரை கையில் ஜப மாலையுடன் தவம் செய்வார். சூரிய நமஸ்காரத்திற்குப் பின் நீரிலிருந்து வெளியேறி தியானத்தில் அமர்வார். ஒன்பது மணிக்கு அவருக்காகக் காத்துநிற்கும் நோயாளிகளைக் கவனிப்பார்; பின்னர் பிறருடன் பேச்சைத் தவிர்ப்பதற்காக குறுக்கு வழியாகச் சென்று தமக்குரிய பிட்சையைப் பெற்று வருவார். அப்படிப் போகும்போது கூட ஜபமோ பிராணாயாமமோ செய்து கொண்டிருப்பார். பின்னர் தமக்குக் கிடைத்த விசேஷ உணவுப் பொருள்களை லக்ஷ்மண் ஜூலா சன்னியாசிகளுக்கு வழங்குவார். அதன் பின் தம் குடிலுக்கு வந்து தமது உணவை உண்பார்.

மாலையில் கங்கையைக் கடந்து எதிர்க் கரையில் உள்ள ராமாசிரமம் வாசகசாலைக்குச் சென்று தத்துவநூல் ஆராய்ச்சி

யில் ஈடுபட்டு குறிப்பு எடுத்துக்கொள்ளுவார். கங்கையில் பெரு வெள்ளம் போனால் படகுகள் செல்லமாட்டா. அந்த வேளைகளிலும் கூட லக்ஷ்மண்ஜூலா பாலத்தின் வழியாக நடந்து சென்று வாசக சாலைக்குப் போவதில் அவர் தவற மாட்டார். எப்பொழுதும் அவர் தம்முடன் ஒரு அகராதியை வைத்திருப்பார். கஷ்டமான வார்த்தைகளுக்கு உடனுக்குடன் பொருளைப் பார்த்துக் குறித்துக் கொள்ளுவார். பல்வேறு நூல்களை அவர் படித்த போதிலும் அவர் மிகவும் விரும்பிப் போற்றியவை உபநிடதங்கள், விவேக சூடாமணி, பகவத்கீதை, பாகவதம், யோக வாசிஷ்டம் மற்றும் அவதூத கீதையாகும். ஒரு குறிப்பிட்ட நேரத்தை தமது எண்ணங்களை எழுத்தாக மாற்றுவதற்கு ஒதுக்கினார். ஆனால் எழுதுவதற்கு அவருக்குக் காகிதம் கிடைக்கவில்லை. சாதுக்கள் அதற்காக ரிஷிகேசம் ஊருக்குள் சென்று மூலை முடுக்கெல்லாம் தேடிக் காகிதத் துண்டுகளைச் சேகரித்தனர். கடிதம் வந்த தபால் கவர்களும் பிரிக்கப்பட்டு அவற்றின் உள்பாகம் எழுதுவதற்குப் பயன் படுத்தப்பட்டன.

சில சமயங்களில் எழுதுவதற்கு மை கிடைக்காமல் நெருக்கடி வந்து விடும். மற்றும் சிலவேளைகளில் பேனா இருக்கும். அதில் மையும் இருக்கும். ஆனால் விளக்கு இருக்காது. விளக்கு இருந்தாலும் அதில் எண்ணை இருக்காது. இத்தனை நெருக்கடிக்கடியில் அவர் தம் மனத்தில் உதித்த மேலான கருத்துக்களை மனித குலத்தின் நன்மைக்காகக் குறித்து வைத்தார். அவை பின்னர் நூற்றுக்கணக்கான நூல்களாக மலர்ந்தன.

சுவாமிஜியின் புகழ் மென்மேலும் பரவவே அவரைச் சந்திக்க வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கலாயிற்று. சாதனைக்கான தமது பொன்னான நேரம் வீணாகிறதே என்று கருதிய சுவாமிஜி எவருக்கும் தெரியாமல் கங்கைக் கரைக்குச் சென்று விடுவார். அங்கு ஜன நட

மாட்டமில்லாத பகுதியில் கரைக்கருகே நாற்புறமும் நீர் சூழப்பட்ட இடத்தில் அமைந்துள்ள ஒரு பாறை மீது வெகு நேரம் தியானத்தில் லயித்துவிடுவார். அந்த நாட்களில் அவர் படிப்படியாக தியானத்திற்கான நேரத்தை அதிகரித்துக்கொண்டே வந்தார்.

தமது சாதனைக்கு இடையூறு நேராதிருக்கும் வகையில் சுவாமிஜி 4, 5 நாட்களுக்கான ரேஷனை மொத்தமாகச் சத்திரக்காரரிடமிருந்து வாங்கி வைத்துக் கொள்ளுவார். ரொட்டி காய்ந்து விடும்; எனவே அதைப் பொடி செய்து கங்கை நீருடன் கலந்து அருந்துவார். அதுவும் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான். பின்னர் தியானத்தில் அமர்ந்து விடுவார்.

சில சமயங்களில் உப்பைத் தவிர்ப்பார். குடையும் செருப்புமின்றி கரடுமுரடான கல்பாங்கான பகுதியில் நடப்பார். சில நாட்களில் வேக வைத்த உருளைக் கிழங்கை மட்டும் சாப்பிடுவார். தமது டயரியில் இதை அவர் மீண்டும் மீண்டும் குறிப்பிடுகிறார். நாவடக்கத்தில் அவர் செய்த சாதனை மிகவும் கடுமையானது. அவரது டயரியில் உள்ள கீழ்க்காணும் குறிப்பிலிருந்து இது தெளிவாகிறது.

1. Give up salt
2. Give up sugar
3. Give up spices
4. Give up vegetables
5. Give up chillies
6. Give up tamarind

உடை விஷயத்திலும் சுவாமிஜி மிகவும் கட்டுப்பாடாக இருந்தார். இரண்டே துணிகள், ஒரு போர்வை, கமண்டலம் - இவ்வளவுதான் அவரிடம் இருந்தவை.

ஒரு சமயம் ஒரு பிச்சைக்காரன் குளிரில் நடுங்கிக் கொண் டிருப்பதைக் கண்டு மனமிரங்கி தனது ஒரே போர்வையை யும் அவர் அவனுக்குக் கொடுத்து விட்டார். பின்னர் இவர் குளிரில் நடுங்கிக்கொண்டிருந்ததைக் கண்ட ஒரு வழிப் போக்கன் இவரிடம் ஒரு போர்வையை அளித்துவிட்டுச் சென்றான்.

ஒரு சமயம் சிங்கை மகாராணி குருதேவர் சிவானந் தரைக் காண்பதற்காக ரிஷிகேசத்திற்கு வந்து அங்கே சில நாட்கள் தங்கினாள். தினமும் பழங்கள், விசேஷ தின்பண் டங்கள், பால் என்று அநேகம் பொருள்களை அவள் குருதேவ ருக்கு அனுப்பி வந்தாள். வழக்கம் போல் சுவாமிஜியும் அவற்றைப் பெற்றுக் கொண்டு ஏனையோருக்கு விநியோ கித்து வந்தார். ஒரு நாள் அந்த ராணி சுவர்க்காசிரமம் சாதுக்கள் அனைவருக்கும் ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தாள். விருந்துக்கு முக்கியமாக சுவாமிஜியை எதிர் பார்த்தாள்.

இங்கே குருதேவர் தனது அந்தரங்க சீடரிடம், 'இதோ பார். நான் இந்த அறைக்குள் போகிறேன். நீ வெளியே பூட்டிக்கொள். மூன்று நாட்களுக்குத் திறக்காதே. நான்காம் நாள் காலையில் திற யார் வந்தாலும என்னைப் பற்றி எதுவும் சொல்ல வேண்டாம், என்று உத்தரவிட்டார்.

அங்கே விருந்துக்கு இவரை எதிர்பார்த்து ஏமாந்த ராணி ஒரு தட்டில் உணவை வைத்து இவரது அறைக்கு அனுப்பி வைத்தாள். உணவைக் கொண்டு வந்தவன் அறை பூட்டியிருப்பதைக் கண்டு ஏமாந்து திரும்பிச் சென் றான். மூன்று நாட்கள் அன்ன ஆகாரம் எதுவும் இன்றி தியானத்திலாழ்ந்திருந்தார். நான்காம் நாள் காலையில் சீடன் கதவைத் திறந்த பொழுது முகமலர்ச்சியுடன் அவர் வெளியே வந்தார்.

சுவர்க்காசிரமத்தில் சுவாமிஜி மிகவும் பிரபலமானவ ராக விளங்கினார். அங்கே புதிய யாத்ரிகர் எவர் வந்தாலும் சுவாமிஜியைப் பார்க்காமல் போவது கிடையாது. சுவாமி தபோவன்ஜி, சுவாமி புருஷோத்தமானந்தா: பிரம்மச்சாரி யோகானந்தா, சுவாமி நாராயண்ஜி மகாராஜ், மாதா ஓம்காரேச்வரி, சுவாமி சுயம் ஜோதி, சுவாமி அத்வை தானந்தா, சுவாமி சாந்தி கிரி போன்ற பல மகாத்மாக் களும் அப்போது சுவர்க்காசிரமத்தில் குருதேவருடன் வசித்த மற்ற மகான்கள் ஆவர்.

## சிவானந்தருடன் ஒருநாள்

சரளாதேவி குருதேவரின் சிறந்த பக்தை.

"சுவாமிஜி! மனத்தை அடக்கும் மார்க்கம் ஒன்றைச் சொல்லுங்கள். அதை அடக்கவே முடியாது போல் தோன்றுகிறது" என்று குருதேவரைப் பார்த்துக் கேட்டார். அவரது கணவரும் அப்பொழுது உடன் இருந்தார்.

"ஜபம் செய்யுங்கள். உங்கள் சாதனையில் ஒழுங் காக இருங்கள். கீர்த்தனம் செய்யுங்கள். பயிற்சியினால் தான் மனத்தை அடக்க இயலும். ஒரு ஆன்மீக நாட்குறிப்பை வைத்துக் கொள்ளுங்கள். இப்பொழுது அதை நீங்கள் வைத்துக் கொள்ளவில்லையா? —" குருதேவர் கேட்டார்.

"சுவாமிஜி! என்னிடம் அது உள்ளது." அதைக் கேட்ட குருதேவரின் முகம் மலர்ந்தது.

"ஆனால் அதை உங்களுக்கு அனுப்ப எனக்கு வெட்கமாயிருக்கிறது. காரணம் எனது சாதனை ஒழுங் காக இல்லை."

"நீங்கள் எப்படிச் செய்தாலும் அந்த ஆன்மீக நாட்குறிப்பை எனக்கு அனுப்பி வையுங்கள். அப் பொழுதுதான் மேலும் முன்னேறுவதற்கான வாய்ப்பு உண்டாகும்." — குருதேவர் கூறினார்.

# 6

## தெய்வநெறிக் கழகத்தின் தோற்றமும் தொண்டும்

மலேயாவிலிருந்து தமது தொழில் மற்றும் செல்வ மனைத்தையும் துறந்துவிட்டு அவர் பாரதம் வந்ததன் நோக்கம், மற்றும் சுவர்க்காசிரமத்தில் கடும் தவமியற்றிய தன் நோக்கம் இறைவனை உணர்வதற்கேயாகும். சாதனைக் காலத்தில் ஒரு பொழுதும் சுவாமி சிவானந்தர் தமக்கென ஒரு ஆசிரமத்தை நிறுவவேண்டும் என்று எண்ணியதே கிடையாது.

### சங்கீர்த்தன யோகி

ஆனால் 1930ம் வருடம் சுவர்க்காசிரமத்தில் தவம் செய்த பொழுது உலகோருக்குத் 'தொண்டு செய்யவேண்டும் என்ற தீவிர நாட்டம் அவரைப் பற்றிக் கொண்டது. ஆரம்பத்தில் சுவாமிஜி சங்கீர்த்தனத்தின் மூலமாகவே ஆன்மீகத்தைப் பரப்பினார். வட இந்தியாவில் சீத்தாபுரி, கல்கத்தா, மீரட், ராவல்பிண்டி போன்ற பல இடங்களில் நடந்த சங்கீர்த்தன மாநாடுகளுக்கு சுவாமிஜி தலைமை தாங்கினார். மேடையில் எழுந்து நின்று உணர்ச்சி பூர்வமாக பஜனை செய்கையில்

ஸ்ரீ சைதன்ய மகாப்ரபுவே மறு அவதாரம் எடுத்து வந்தது போலிருக்கும்.

ஆங்கிலம் கற்ற ஒரு மகாத்மா தம்மை மறந்து பஜனை செய்தலைப் பார்த்த நாஸ்திகத்தில் ஊறிய இளைஞர்கள் கூட அவருடன் சேர்ந்து பாடத் தலைப்பட்டனர்.

சுவாமிஜியின் கீர்த்தனைகளில் பல மொழிகளும் பங்கு பெறும். அது ஒரு அவியல் பாஷையில் அமைந்திருக்கும் இதோ ஒரு உதாரணம்.

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரேஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண
கிருஷ்ண ஹரே ஹரே

**Is there not a nobler mission**
**than eating, drinking and sleeping?**
**It is difficult to get a human birth**
**Therefore try your best to realise in this birth.**

  

ஹரே கிருஷ்ண ஹரே ராம ராதே கோவிந்த
சுபே சுபே உடோ சார் பஜே
ஹரே கிருஷ்ண ஹரே ராம ராதே கோவிந்த
ரொட்டி பனுவோ ஹரே கிருஷ்ண போலோ
ஹரே கிருஷ்ண ஹரே ராம ராதே கோவிந்த
சர்க்கா கரோ ஹரே கிருஷ்ண போலோ
ஹரே கிருஷ்ண ஹரே ராம ராதே கோவிந்த

  

உரிய அபிநயத்துடன் சுவாமிஜி பாடுகையில் அந்தந்தக் காட்சிகளை சபையோர் கண்முன் கொண்டு வந்து அப்படியே நிறுத்திவிடுவார்

பல வகைப் பாட்டுக்களுக்கிடையே தாலாட்டுப் பாட்டும் வரும் பஞ்சாபியர் அழும் குழந்தையைச் சமாதானம் செய்ய ஒரு பிரத்தியேக ராகத்தில் பாடுவர். பஞ்சாபில் அவர் சங்கீர்த்தனம் செய்கையில் தெய்வீக நாமாவளியில் இத்தகைய ஒரு மெட்டை அமைத்தார்.

ஜய ஸிய ராம் ஜய ஜய ஸிய ராம்
ஜய ஸிய ராம் ஜய ஜய ஸிய ராம்

இந்த வரிகளைப் பாடுகையில் சுவாமிஜி கற்பனையாக ஒரு தொட்டிலை ஆட்டுவதைப் போல அபிநயித்தார். அத்துடன் நில்லாது கூட்டத்தில் முன் வரிசையில் இருந்த ஒரு சிறுவனைத் தூக்கிக்கொண்டு வந்து மேடையில் இருத்தி

ஜய கோவிந்தம் ஜய கோபால்
கேசவ மாதவ தீனதயாள்

என்று பாட ஆரம்பித்துவிடுவார்.

சங்கீர்த்தனத்துக்கிடையே அவர் உணர்ச்சி பொங்கச் சொற்பொழிவைத் துவங்கிவிடுவார். நடைமுறை சாத்தியமான உதாரணங்களுடன் உயர்ந்த உபநிடதக் கருத்துக்களை அவர் எடுத்து விளக்குகையில் சபையோர் மெய்மறந்து செவிமடுப்பர். ஆத்ம சக்தியுடன் கூடிய சொற்பொழிவாகையால் சுவாமி சிவானந்தரது சொல்லமுதத்தை ஒரு முறை கேட்டவர் தம் வாழ்வில் அதை என்றுமே மறக்க முடியாது.

ஆனந்த குடீரத்தில் சிவானந்தர்

சுவர்க்காசிரமத்தில் உள்ள சாதுக்கள் அவரவர் போக்கில் சாதனையில் ஈடுபட்டு வந்தனர். சிலர் தவம் என்ற பெயரில் உடலை வாட்டி வருத்தினர். சிலர் கஞ்சா, அபின் போன்றவற்றில் அடைக்கலம் புகுந்து சமாதியை நாடினர். சிலர் குரங்குகளுடன் விளையாடிப் பொழுதைக் கழித்தனர். அவர்களையெல்லாம் ஒருங்கு திரட்டி சுவாமிஜி 1933-ம் வருடம் ஆகஸ்டு 24-ம் தேதி சுவர்க்காசிரம் சாது சங்கம் என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தினர். வீணே பொழுதைக் கழித்த பல சாதுக்களைப் பயனுள்ள ஒரு கர்மயோகியர் கூட்டமாக மாற்ற சுவாமிஜி முயன்றார். மக்களுக்குத் தொண்டாற்ற விரும்பிய அவருக்குச் சீடர்களை ஏற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சுவாமிஜியின் சீடர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகியது. இதைக் கண்ணுற்ற சுவர்க்காசிரம நிர்வாகத்தாருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

நிலைமையைப் புரிந்து கொண்ட சுவாமி சிவானந்தர் தமது நான்கு சீடர்களுடன் சுவர்க்காசிரமத்தை விடுத்து கங்கையைக் கடந்து எதிர்க்கரையில் உள்ள ராமாசிரமத்தில் ஒரு அறையில் வந்து தங்கினார். இது நடந்தது 1934 ஜனவரி 17-ம் நாளன்று ஆகும். தாம் அவ்விதம் வருவதற்கு முன் சத்ய சேவாச்ரம மருந்தக நிர்வாகத்தை சுவர்க்காசிரமத்திலிருந்த ஒரு துறவியான சுவாமி ஞானனந்தர் என்பவரிடம் ஒப்படைத்தார். அவரும் பூர்வாசிரமத்தில் டாக்டராக இருந்தவராவார்.

தனிப்பட்ட முறையில் தொண்டினை அவர் ஆரம்பித்த சில நாட்களுக்குள்ளேயே டெஹ்ரி கர்வால் ராஜாவிடமிருந்து ஆசிரமம் கட்டுவதற்கான ஒரு சிறு நிலப்பகுதியைப் பெற்றார். இதற்கிடையில் சுவாமிஜியும் அவரது சீடர்களும் கைவிடப்பட்ட மாட்டுக் கொட்டகை போலக் காட்சி தந்த ஒரு கட்ட

டத்திற்கு தங்கள் ஜாகையை மாற்றினர். அவர்களுக்கு அது அரண்மனை போலக் காட்சி அளித்தது. காரணம் அதில் நான்கு அறைகளிலிருந்தன. சுவாமிஜிக்கு ஒரு அறை, மருத்துவ நிலையமாக மற்றொரு அறை, சீடர்களுக்கு பாக்கி இரண்டு அறைகள் என்று அந்தக் கட்டடம் பயன்படுத்தப் பட்டது. அந்தக் கட்டடத்தை அவர்கள் ஆனந்த குடீரம் என்று அழைத்தனர். கங்கையை ஒட்டி அமைந்துள்ளது இக் கட்டடம். 1934 மார்ச் மாதத்தில் ஆனந்த குடீரம் உருவாயிற்று.

அதை ஒட்டி மேலும் பல மாட்டுக் கொட்டகைகள் கேட்பாரற்றுக் கிடந்ததை அவர்கள் கண்டனர். ஆனால் அவற்றை நெருங்கவே முடியவில்லை. காரணம், ஒரே குப்பை, கூளம், நாற்றம் சகிக்கவில்லை. அதைச் சுத்தப்படுத்தி அவர்கள் பயன்படுத்தினர்.

ஆரம்பத்தில் சுவாமிஜி தாமே வரவு செலவுகளைக் கவனித்தார். சீடர்களுடன் அவரும் சேர்ந்து ஆன்மீகப் பிரசுரங்களை தபாலில் அனுப்புவார். யாராவது கொஞ்சம் தொகை கொடுத்தால் உடனே ஒரு துண்டுப் பிரசுரம் தயாராகி விடும். சரியான சாப்பாடு கிட்டாத காலத்தில் ஆனந்த குடீரத்தில் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் ஆன்மீகப் பிரச்சாரப் பணி மும்முரமாக நடந்து கொண்டிருக்கும். படிப்படியாக மேலும் பக்தர்கள் அந்தக் குழுவில் சேர்ந்தனர். அனைத்தையும் இறைவனது பிரஸாதமாக அவர் ஏற்றார்.

1936-ம் வருடம் ஜனவரி 13-ம் தேதியன்று 'தெய்வ நெறி டிரஸ்ட்' அம்பாலாவில் உதயமாயிற்று. அந்த டிரஸ்ட் இயக்கம் ஆற்றிய நற்றொண்டினால் ஈர்க்கப் கப்பட்ட பலர் அதில் சேர்ந்து பணிபுரிய விரும்பினர். ஆனால் டிரஸ்ட் சட்டப்படி பதினொரு பேருக்கு மேல் உறுப்பினராக இருக்க முடியாது என்ற காரணத்தால் தெய்வ நெறியில்

பங்கு பெற விழைந்த பல்லோரையும் சேர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் குருதேவர் தெய்வ நெறிக் கழகத்தைத் தோற்றுவித்தார். Divine Life Society என்ற பெயரில் அது 1939 ஏப்ரல் 16ம் தேதியன்று லாகூரில் ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.

குருதேவரைக் காணோம்

1940ம் ஆண்டு வாக்கில் ஆனந்த குடீரத்தில் பக்தர்கள் கூட்டம் கணிசமான அளவில் அதிகரித்தது. அதற்கேற்ப வேலையும் அதிகரித்தது. தொடர்ந்து பத்து வருடங்கள் இடைவிடாது சுற்றுப் பிரயாணம், சங்கீர்த்தனங்கள், சொற் பொழிவுகள், மற்றும் மருத்துவத் தொண்டு செய்த குரு தேவர் சுவாமி சிவானந்தர் தனிமையையும் அமைதியையும் பெரிதும் விரும்பினர். 1941ம் வருடம் பிப்ரவரி மாதம் 18ம் தேதி –திடீரென்று குருதேவரை ஆசிரமத்தில் காணவில்லை.

பத்து நாட்களுக்கு முன்னர்தான் இரண்டு மூத்த சீடர் களை ஏதோ வேலையின் நிமித்தம் குருதேவர் லாகூருக்கு அனுப்பியிருந்தார். அது அவ்வளவு முக்கியமான வேலையு மல்ல. மீதம் இருந்த பத்துப் பேரில் பாதிக்கு மேல் புது முகங்கள்.

குருதேவர் எழுதி வைத்திருந்த கடிதத்தில் தனக்கு மிகவும் அவசரமாக ஓய்வு தேவைப்பட்டது என்று குறிப் பிட்டிருந்தார். ஆசிரமத்துக்கு அடுத்த தலைவர் மற்றும் நிர்வாகிகளின் பெயர்களையும் அதில் குறிப்பிட்டிருந்தார். பாங்க் மற்றும் தபால் நிலையத்துக்கும் கணக்கு வழக்குகள் மாற்றம் குறித்தும் தகவல் தெரிவித்திருந்தார். புதிய மாற்றங்களுக்கு முற்றிலும் ஆதரவு தந்து ஒத்துழைக்கும் படி அவர் தமது சீடர்களிடம் அதில் வேண்டுகோளும் விடுத் திருந்தார்.

குருதேவரைக் காணவில்லை என்றதும் சீடர்கள் அங்குமிங்கும் ஓடி அவரைத் தேடலானார்கள். நதிக்கரை, காடுகள், மலைக்குகைகள், அருகிலிருந்த கிராமங்கள், நகரங்கள் எங்கும் தேடி அலைந்தார்கள். குருதேவர் இருக்குமிடத்தைப்பற்றிய தகவல் கொடுப்பவருக்கு தகுந்த சன்மானம் அளிக்கப்படும் என்றும் 'ஆசிரமத்திற்குத் தயவு செய்து திரும்பி வந்து எங்களை ஆசீர்வதியுங்கள்' என்று குருதேவருக்கே ஒரு வேண்டுகோள் விடுத்து நோட்டீஸ் அச்சிட்டும் விநியோகித்தனர்.

விசாரித்துப் பார்த்ததில் குருதேவர் காணமற் போன அன்று காலையில் தபால் நிலையத்திற்குச் சென்று 2 ரூபாய் கேட்டு வாங்கிக் கொண்டதாகவும், அப்பொழுது உடுத்தியிருந்த வெறும் வேட்டி, துண்டுடன் மட்டுமே காணப்பட்டதாகவும் காலில் செருப்பு இன்றி, தமது பேனா, கண்ணாடி போன்றவற்றைக்கூட எடுத்துக் கொள்ளவில்லை என்றும் தெரிய வந்தது. மதியம் அனைவரும் உணவு அருந்திக் கொஞ்சம் கண்ணயர்ந்திருந்த வேளையில் அவர் சென்று விட்டதாகத் தெரிந்தது.

ரிஷிகேசம் சுங்கச் சாவடி அருகே அவரைப் பார்த்ததாகச் சிலர் சொன்னார்கள். குருதேவரோ யாருடனும் பேசவில்லை. ரிஷிகேஷ் ஹரித்வார் சாலையில் உள்ள சத்திய நாராயணர் ஆலயத்தில் குருதேவர் ஒரு இரவைக் கழித்தார். அடுத்த இரவை ஹரித்வாரில் கங்கைக் கரையில் படித்துறையில் கழித்தார். மூன்றும் நாள் கங்கைக் கரை வழியாக நடந்து கங்கல் அருகில் உள்ள ஜகதீஷ்புரி என்ற கிராமத்தில் ஒரு மரத்தடியில் அமர்ந்து ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும் சமயத்தில் கிராமத்தவர்கள் அவரை இன்னார் என்று அடையாளம் கண்டு கொண்டார்கள். அவர்களில் ஒருவர் குருதேவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று உபசரித்தார். தொடர்ந்து மேலும் பத்து தினங்கள் அவர் எங்கெல்லாமோ சென்றார். குருதேவர் ஆசிரமத்தை

விட்டுச் சென்ற பதினான்காம் நாளன்று ஜக்தீஷ்புரி பிரமுகரின் காரில் ஆசிரமம் திரும்பி வந்து சேர்ந்தார். அதன் பின்னர் விரைவிலேயே சீடர்கள் குருதேவருக்காக நிலத்தடிக் குகை ஒன்றை அமைத்துக் கொடுத்தார்கள். அதைக் குருதேவர் 'கைவல்ய குகை' என்று பெயரிட்டு தியானத்திற்குப் பயன்படுத்தினார்.

படிப்படியாக பக்தர்களின் பேருதவியால் ஆசிரமம் விரிவடைந்து கொண்டிருந்தது. இறையருள் அனைத்தை யும் நடத்தி வைக்கிறது என்று குருதேவர் சாட்சி மாத்திர மாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.

1950ம் ஆண்டு குருதேவர் அகில பாரத யாத்திரையை மேற்கொண்டார். லட்சக் கணக்கான பக்தர்கள் அவரது அருள் மொழிகளைக் கேட்டு ஆனந்தித்தனர். பல வருடங்கள் கழிந்தும் அந்த யாத்திரையின் போது ஒரு சில நிமிடங் களே அவரைக் காணவும் அவரது சொற்பொழிவைக் கேட் கவும் கொடுத்து வைத்த பக்தர்கள் பலர் இன்றும் அவரது ஆஜானுபாகுவான தோற்றத்தையும், மலர்ந்த திருமுகத் தையும், உணர்ச்சி மிக்க அருள் மொழிகளையும் நினைவு கூறு கின்றனர் என்றால் மகானின் தரிசன மகிமையை என் னென்பது!

*சிவானந்தர் கண்ட 'Give' ஆனந்தம்*

குருதேவரின் அகில இந்திய யாத்திரை அவரது தெய்வ நெறி இயக்கத்திற்குப் பேருதவியாக அமைந்தது. புதிய சீடர்களும், பக்தர்களும் எண்ணிக்கையில் பெருகினர். ஆசிரமத் தபால் நிலையத்தின் பணியும் பன்மடங்காகப் பெருகியது. ஆசிரமத்தின் வருவாயும் அதிகரித்தது. எங்கிருந்தெல்லாமோ பக்தர்கள் காணிக்கைகளை ஆசிரமத் திற்கு அனுப்பினர். குருதேவர் வந்தது அனைத்தையும் வாரி வாரி வழங்கினார். இவர் வாரி வழங்கியதற்குப்

பன்மடங்கு அதிகமாகப் பொருள்கள் அங்கே வந்து குவிந்தன. ஆசிரமத்துக்குப் பக்தர்கள் அளித்த பணத்தை நல்ல பல திட்டங்களில் குருதேவர் பயன்படுத்தினர்.

தமது சொந்த அனுபவத்தின் மூலம் ஒரு துறவிக்குத் தேவையானவை உணவு, மருத்துவ உதவி, சிறந்ததொரு நூல் நிலையம் என்பதைக் குருதேவர் உணர்ந்து கொண்டார். ஆசிரமத்தில் இந்த மூன்று அடிப்படைத் தேவைகளையும் நன்முறையே அளிப்பதில் அவர் மிகவும் அக்கறை காட்டினர்.

குருதேவரின் திருக்கரங்களிலிருந்து சீடர்கள் ஏதாவது புதிது புதிதாகப் பொருள்களைப் பெருமல் எந்த நாளும் கழிந்ததில்லை. பக்தர்கள் பொருள்களைக் கூடை கூடையாகக் கொண்டு வந்து குருதேவரின் திருவடிகளில் சமர்ப்பித்துக் கொண்டே இருப்பர். குருதேவரும் அவற்றை அப்படியே அள்ளி அள்ளி பக்தர்களுக்கும் சீடர்களுக்கும் வழங்கிக் கொண்டேயிருப்பார். சிவானந்த ஆசிரமம் சென்று குருதேவரைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் இந்தக் கூற்றின் உண்மையை அறிவார்கள். சில நாட்களில் குருதேவர் தாமே ரொட்டி, பருப்பு, சாதம் போன்றவற்றை உணவு சமயத்தில் சீடர்களுக்குப் பரிமாறுவார். 'ரொட்டி பகவான்', 'டால் (பருப்பு) பகவான்' என்று ஒவ்வொரு சீடரிடத்திலும் அவர் அன்புடன் கேட்டுப் பரிமாறியது காணற்கரிய காட்சியாகும். தம்மிடமிருந்ததைக் கொடுத்துக் கொடுத்து இன்பத்தைக் கண்டவர் என்பதைக் குறிப்பிடும் வகையில் கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார் அவரை அன்புடன் 'கிவ் ஆனந்தர்' (Givananda) என்றழைக்கிருர்.

அகண்டகீர்த்தன் ... அகண்ட 'கிச்சன்'

ஒரு சமயம் ஒரு அயல்நாட்டுப் பிரமுகர் ஆசிரம பஜனை அறையில் இரவு கீர்த்தனத்தில் பங்குகொண்டு விட்டு

ஆசிரம சமையலறைப் பக்கம் சென்றார். இரவு வெகு நேர மாகியும் சமையலறை அடுப்பு எரிந்து கொண்டிருந்ததைக் கண்டு அதிசயித்த அவர் குருதேவரை நோக்கி, 'சுவாமிஜி' உங்களது அற்புதமான மேற்பார்வையில் எல்லா காரியங் களும் ஒழுங்காக நடக்கின்றன! மேலே அகண்ட கீர்த்தன், கீழே அகண்ட கிச்சன் (Kitchen) என்று வேடிக்கையாகக் கூறினார்.

'நீங்கள் கூறுவது ரொம்பவும் சரி. அகண்ட கீர்த்தன்' அகண்ட கிச்சன் இரண்டிலுமே எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. பிந்தையது இன்றி முந்தையது நடக்காது. அகண்ட் பூரி, அகண்ட் சாய், அகண்ட் பால் பழங்கள் ஆகிய வற்றால் இங்குள்ள பக்தர்களையும் பணியாட்களையும் நான் கவனித்துக் கொள்ளுவதால்தான் உலகெங்கும் பரந்து பணியாற்றும் தெய்வநெறிக் கழகத்தின் பணிகள் இவ்வளவு பரந்து விரிந்துள்ளன, என்று குருதேவர் மிக முக்கியமான தொரு கருத்தை வேடிக்கையாகக் குறிப்பிட்டார்.

தமது சீடர்களின் உடல்நலத்தில் குருதேவர் மிகுந்த கவனம் செலுத்தினார். இது பற்றி ஒரு சமயம் அவர், 'பணம் இருக்கிறதோ இல்லையோ, உங்கள் உடலை ஒழுங் காகப் பேண வேண்டும். உங்கள் உடலை நீங்கள் நன்கு பேணவிட்டால், அன்னை துர்க்கையை நீங்கள் சரிவர வழிபட வில்லை என்று பொருள். உண்மையில் சிறந்த துர்கா பூஜை என்பது இந்த உடலை நன்கு போஷித்து, இறை வழி பாட்டில் இதை நன்முறையே ஈடுபடுத்துவதேயாகும்' என்று குறிப்பிட்டார். இப்படிச் சொல்லிக் கொண்டிருந்த போதே சுவர்க்காசிமத்தில் தமது முந்தைய தவ வாழ்க் கையை அவர் நினைவு கூர்ந்தார்.

''சுவர்க்காசிரமத்தில் நான் இருந்த நாட்களில் எண்ணெயைத் தொட்டதே கிடையாது. இப்பொழுது இங்கே எத்தனையோ வகை ஆயில்கள் உள்ளன, அதிகம் வேலை

செய்கையில் உடலில் உள்ள செல்கள் ஒவ்வொன்றும் அதிக அசைவின் காரணமாக பெரும் உஷ்ணத்தை அடைகின்றன. சுவர்க்காசிரமத்தில் நான் வெறும் தரையில் படுத்து உறங்கினேன். இங்கே இப்பொழுது ஒரு படுக்கை இருக்கிறது. ஆனால் எந்த சுகத்துக்கும் எவரும் எப்பொழுதும் அடிமைப்பட்டு விடக்கூடாது. திதிக்ஷையைப் பழகுவதன் பொருட்டு நான் சில சமயங்களில் சுவற்றில் போய் உடலை உரசிக் கொள்வேன்.

நீங்கள் அனைவரும் மூளை உழைப்பாளிகள். உடல் உழைப்பாளிகள். போஷாக்கான உணவு உட்கொள்ள வேண்டும். உடல் நல்லாரோக்கியத்தில் இருந்தால் தானே நம்மால் பிறருக்குத் தொண்டாற்ற முடியும். உடலை ஒரு போதும் புறக்கணிக்காதீர்கள். ஆனால் அதே வேளையில் உடலுக்கு அடிமைகளாகவும் ஆகி விடாதீர்கள்."

சாதனை என்று சொல்லி உடலை வருத்திய ஒரு சில சிஷ்யர்களைக் கருத்தில் கொண்டு குருதேவர் மேற் கூறிய அறிவுரையை அருளினார்.

### பாதபூஜையும் பாதுகா பூஜையும்

எந்த நிலையிலும் எதற்கும் குருதேவர் அடிமைப் பட்டது கிடையாது. வைராக்கியத்தின் மிக உன்னத நிலையை அவரிடம் எப்பொழுதும் காண முடிந்தது அகங்காரத்திற்கும் ஆணவத்திற்கும் உட்படாது அவர் தம்மைப் பாதுகாத்துக் கொண்ட விதமே தனி பக்தர்கள் அவ்வப்பொழுது மிகுந்த பொருட் செலவில் பாத பூஜை செய்வர். பாத பூஜை சமயங்களில் அவர் கண்களை மூடி மோன நிலையில் ஆழ்ந்திருப்பார். அது மட்டுமல்ல, பாத பூஜை முடிந்த பிறகு குருதேவர் தமது தனி அறைக்குள் சென்று செருப்பு அல்லது துடைப்பக் கட்டையால் தம்மை படார் படாரென்று அடித்துக் கொள்ளுவார். அதாவது

பாத பூஜை மற்றும் பூமாலையை அணிவித்த சமயத்தில் மனம் எந்த நிலைக்கு உள்ளாயிற்றோ, அதே நிலை செருப்படியால் ஏற்படுகிறதா என்பதைப் பரிசோதித்துப் பார்க்கவே அவர் அப்படிச் செய்தார். ஆன்ம பரிசோதனையில் அவர் தம்மை மிகவும் கடுமையான பரீட்சைகளுக்கு உட்படுத்திக் கொண்டார்.

சிவானந்த ஆசிரமம் அதிசயிக்கத் தக்க விதத்தில் வளர்ச்சி அடைந்தது. அருகிலுள்ள மற்றொரு பெரிய ஆசிரமமான கைலாச ஆசிரமத்தைச் சேர்ந்த ஸ்ரீ சுவாமி விஷ்ணு தேவானந்தா அது பற்றிக் குறிப்பிடுகையில், 'சில வருடங்களுக்கு முன் இந்த இடம் அடர்ந்த காடாக இருந்தது. அங்கே புலிகள் அலைந்து திரிந்தன. சிவானந்தர் காட்டை நாடாக மாற்றி விட்டார்', என்று கூறினார்.

எதற்கும் தயார்

பாரதத்தில் மட்டுமல்லாமல் அயல் நாடுகளிலும் தெய்வ நெறிக் கழகத்தின் கிளைகள் ஆங்காங்கே எழுந்தன. அது பற்றிக் குருதேவர் ஒருமுறை தம் பக்தர்களிடம், "இந்த உலகில் எதிர்பாராதது என்று எதுவுமே கிடையாது. நடப்பது அனைத்தும் இறைவனின் திட்டப்படியே யாகும். அயல் நாடுகளில் ஸ்பீகல் பர்க், கரீனா போன்ற ஆசிரமத்துக்கு வந்து சென்ற பக்தர்களும், எடித் என்னா, லூயி பிரிஸ்பேசர், ஹாரி டிக்மென் போன்ற இங்கே வராத பக்தர்களும் தெய்வ நெறி இயக்கத்திற்காக எவ்வளவு அற்புதமாகப் பாடுபடுகிறார்கள். நாமெல்லோரும் நமது பூர்வ ஜன்மங்களிலும் கூட இத்தகைய ஆன்மீகப் பிரச்சாரத்தில் ஒன்றாக ஈடுபட்டிருக்க வேண்டும். அதனால்தான் இவ்வளவு குறுகிய காலத்தில் இத்தனை பிரம்மாண்டமான முறையில் ஆசிரமம் வளர்ச்சி அடைந்திருக்கிறது. முன்பு விட்டதை இப்பொழுது நாம் தொடர்கிறோம்." என்று

தெய்வ நெறிக் கழகத்தின் அதிசய வளர்ச்சிக்கான காரணத்தைக் குறிப்பிட்டார்.

சிவானந்தாசிரமம் மற்றும் தெய்வ நெறிக் கழகம் வியத்தகு முறையில் வளர்ச்சியடைந்தன. ஆனால் குரு தேவர் அவற்றிற்கும் தமக்கும் எந்தவிதப் பற்றோ பாசமோ கொள்ளாது இருந்தார். "இப்பொழுதே இங்குள்ள எல்லாரும் என்னை விட்டுப் போய்விடினும் கூட இங்குள்ள சத்திரத்திலோ அல்லது ஏதாவது வீடுகளிலோ நான் பிச்சையேற்று உண்பேன். என்னிடம் வரும் சில நோயாளி களுக்கு என்னாலான சிகிச்சை செய்வேன். எனது பக்தர் எவராவது அச்சிட விரும்பினால் எனது கட்டுரைகள் சில வற்றை அவரிடம் கொடுப்பேன். மீதி நேரம் எல்லாம் தீவிர சாதனையில் ஈடுபடுவேன். மாதம் 200 அல்லது 300 ரூபாய் வந்தால் கூடப் போதும். நன்கு உழைக்கும் ஒன்றிரண்டு சாதகர்களை வைத்துக்கொண்டு இத்தனை காரியங்களையும் சிறிய அளவில் செய்து வருவேன். லட்சம் அல்லது கோடிக் கணக்கில் பணம் வந்தால் மென்மேலும் ஸ்தாபனத்தை விருத்தி செய்யவும் தயங்க மாட்டேன். எந்த நிலைமைக்கும் நான் தயார். எனவே எப்பொழுதும் நான் அமைதியுட னிருக்கிறேன். நீங்களும் பொருள்களிடம் பற்றற்று இருக்க முயல வேண்டும்,'' என்று குருதேவர் தம்து பற்றற்ற உயர்ந்த நிலையை ஒரு சிறிது பக்தர்களுக்குச் சுட்டிக் காட்டினார்.

## எல்லாம் இறைவன் செயல்

குருதேவர் சுவாமி சிவானந்தரிடம் காணப்பட்ட பல தெய்வீகக் குணங்களுள் இந்த வைராக்கியம் அல்லது பற்றின்மையே சிறந்ததாக அமைகிறது. தாமரையிலைத் தண்ணீர் போல அவர் ஜகத்தொடும் கூடி வாழ்ந்தார். உலகத்தை அவர் மனப்பூர்வமாகத் துறந்தார். உலகோர் அனைவரும் அவர் பின்னால் சென்றனர். கீதையில் கண்ண

பிரான் இரண்டாம் அத்தியாயத்தில் விளக்கிக் கூறும் 'ஸ்திதப் பிரக்ஞனு'க்குரிய இலக்கணங்கள் அனைத்தும் ஒருங்கே குருதேவரிடம் காணப்பட்டன.

ஒரு முறை ஸ்காட்லாந்திலிருந்து குருதேவரைத் தரிசிக்கவந்த மேயோ என்பவர் அவரிடம், ''சுவாமிஜி திடீரென்று உங்களைச் சிலர் தாக்க வந்தால் அவர்களிடமிருந்து உங்களைக் காத்துக் கொள்ள நீங்கள் முயல்வீர்களா ?, அப்பொழுது என்ன செய்வீர்கள்?', என்று கேட்டார். ''நான் சும்மா இருந்து விடுவேன். நான் என்னை இறைவனிடம் பூரணமாக ஒப்படைத்து விட்டேன். அவன் விரும்பியது நடக்கும்'', என்று குருதேவர் பதில் சொன்னார். அதைக் கேட்ட அந்த பக்தர், 'இவ்விதம் உங்கள் வாழ்வில் ஏதாவது நிகழ்ச்சி நடந்தது உண்டா?'' என்று மீண்டும் கேட்டார்.

''ஒன்றல்ல, பல நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. மூன்று வருடங்களுக்கு முன் ஆசிரம விசுவநாதர் ஆலயத்திலிருந்து 4000 ரூபாய் பெறுமான வெள்ளிப் பாத்திரங்கள் களவு போயின. திருடனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அனேக ஆசிரமங்களில் துப்பாக்கி ஏந்திய காவலர்கள் உண்டு. ஆனால் நான் அத்தகைய காவலர் யாரையும் இங்கே வைத்துக் கொள்ள மறுத்துவிட்டேன். ஏதோ கொஞ்சம் நல்ல காரியம் செய்வதற்காக கடவுள் இந்த ஆசிரமத்தை எனக்குக் கொடுத்திருக்கிறார். இதைப் பாதுகாப்பது அவரது பொறுப்பு'', என்றார்.

1947ம் வருடம் ஜனவரி மாதம் ஆசிரமம் ஒரு பயங்கரமான தீவிபத்துக்குள்ளானது. கட்டடம், கால்நடை, புத்தகங்கள் எனப் பல வகையில் பெரும் நஷ்டம் ஏற்பட்டது. ஆசிரமத்திலுள்ள ஏனையோர் அது குறித்து பெரிதும் அதிர்ச்சிக்குள்ளாயினர். ஆனால் குருதேவரோ ஒன்றுமே நடக்காததுபோல மலர்ந்த முகத்துடன் வந்த விருந்தினரை வரவேற்ற வண்ணமிருந்தார்.

துன்பம் தனக்கு — இன்பம் பிறருக்கு

1949ம் வருடம் டிசம்பர் மாதத்தில் ஆசிரமத்துக்கு விஜயம் செய்த பிரமுகர் ஒருவரைத் தம் குடிருக்குள் அழைத்துச் சென்று குருதேவர் ஒவ்வொரு பகுதியாகக் காண்பித்தார். அந்தக் கட்டடத்திலிருந்த அறைகளைப் பார்த்துவிட்டு அந்த பக்தர், ''சுவாமிஜி! நீங்கள் இங்கேயா வசிக்கிறீர்கள்? சரியான காற்றோட்டம் கூட இல்லாமல் இது ஒரு சிறைக்கூடம் போலல்லவா காட்சியளிக்கிறது. சூரிய ஒளி அறைக்குள் வருவதற்கு ஆலோசிக்கிறதே. ஏதோ நடுப்பகலில் மட்டும் கொஞ்சம் வெளிச்சம் இருக்கிறது. இவை அறைகளல்ல, குகைகள். குகைகூட இதைவிடப் பெரியதாக இருக்கும். நீங்கள் இங்கிருந்துகொண்டா இத்தனை வேலைகளையும் செய்கிறீர்கள்! புத்தகங்களை வைக்கவே இடம் போதவில்லையே, ஒரு அறையிலிருந்து இன்னொரு அறைக்குப் போவதானால் அலமாரி, நாற்காலி, மேஜை ஆகியவற்றின் மீது இடிக்காமல் போக முடியாது, அவ்வளவு இட நெருக்கடி! படுக்கை அறையின் சுவர்கள் ஈரமாக இருக்கின்றனவே. நீங்கள் எப்படி இங்கே வருடக் கணக்கில் வசிக்கிறீர்கள் என்பது எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது. என் போன்றவர்களால் ஆறுமாதம் கூட இதில் தங்க முடியாது. வேறு ஏதாவது சௌகரியமான அறைக்கு நீங்கள் போகக் கூடாதா, சுவாமிஜி?'', என்று தம் மனத்தில் இருந்ததை வெளியிட்டார். அதைக் கேட்ட சுவாமிஜி, 'எனக்கு இந்த இடம் ரொம்ப சௌகரியமாயிருக்கிறது' என்றார். ஆச்சரியத்துடனேயே அந்த நபர் குருதேவரை வணங்கி விடை பெற்றார்.

ஆனால் மற்றவர்களது உடல் நலம் மற்றும் சௌகரியங்கள் குறித்து குருதேவர் மிகவும் கவனமாயிருந்தார். விருந்தினர்கள் தங்குவதற்கு நவீன முறையில் பல கட்டடங்களைக் கட்டுவித்தார். வெகு தூரத்திலிருந்து தங்களது சேமிப்பு முழுவதையும் செலவழித்துத் தம்மைக் காணவரும் பக்தர்

களுக்கு அத்தகைய வசதிகளைச் செய்து கொடுப்பது தம் முடைய கடமை என்று அவர் கருதினர். அவர்களுக்கு ரொட்டி, ஜாம், வெண்ணெய், பாலேடு போன்ற உணவுப் பொருள்களையும் ஆப்பிள் போன்ற பழங்களையும் அனுப்பு வார். நியூயார்க், மாண்டிவிடியோ, பாரீஸ், லண்டன், மெல்போர்ன் போன்ற உலகின் பல பகுதிகளிலிருந்தும் வந்துள்ள பக்தர்கள் ஒரு சில நாட்களில் ஆசிரம நடை முறையைப் பின்பற்றுதல் இயலாது என்பதை அறிந்த குருதேவர் அவர்களுக்காகப் பிரத்தியேகமாக அருகாமை யிலுள்ள காட்டுப் பகுதிகளில் ஆன்மீக முகாம் நடத்தி அதில் பங்கு கொள்வார். கங்கையில் படகுக் கீர்த்தனம், இசைக் கச்சேரிகள், யோகத் திரைப்படங்கள், விசேஷ விருந்துகள் போன்றவற்றிற்கும் ஏற்பாடு செய்வார்.

விருந்தினரை வரவேற்று உபசரிப்பதில் குருதேவர் விசேஷ கவனம் செலுத்தினர். அவரைப் பொறுத்தமட்டில் விருந்தினரே கடவுள், அவர்களை நன்கு உபசரிப்பதே உண்மைச் சமயமாகும். அவரை எவராவது மாலை ஐந்து மணிக்கு வந்து சந்திக்கிறேன் என்று சொல்லியிருந்தால் 4-45 மணிக்கே குருதேவர் அவரை வரவேற்கத் தயாராய் விடுவார். 'விருந்தினரைக் காக்க வைத்தல் தகாது' என்பது அவரது கொள்கை. தான் ஒரு மகாத்மா, தம்மைப் பார்க்க வருபவர்கள் மணிக்கணக்காகக் காத்து நிற்க வேண்டும் என்ற எண்ணம் அவரிடம் கொஞ்சமும் கிடை யாது.

கடமை தவறாத கர்மவீரர்

தமது அன்றாட அலுவல்களில் விநாடி தவறாத ஒழுங்குப் பாட்டைக் குருதேவர் கடைப்பிடித்து வந்தார். உடல் நலமில்லாத போதும் கூட அவர் அதில் பிசக மாட்டார். ஒரு சமயம் 1952ம் வருடம் பனி காலத்தில் வாத நோயால்

குருதேவர் மிகவும் அவஸ்தைப்பட்டார். இருக்கையிலிருந்து நகரக்கூடாது என்று டாக்டர்கள் கூறி விட்டனர். அதையும் மீறி தமது குடீரிலிருந்து படிகளில் கைகளாலும் கால்களாலும் தவழ்ந்து தவழ்ந்து ஏறி பச்சைக் குழந்தையைப் போல ஊர்ந்து சென்று அலுவலக வேலையில் ஈடுபடலானார். அதைக்கண்ட பக்தர்கள் மனமிரங்கினர். மற்றவர்கள் அதிசயித்து நின்றனர்.

எந்த நிலைமையிலும் அவர் செய்த மக்கட் தொண்டு தடைப்பட்டதே கிடையாது. 1954ல் குருதேவர் டைபாய்டுக் காய்ச்சலினால் வருந்திய சமயத்திலும் கூட தனது சீடர்களின் உதவியுடன் தான் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து வந்தார்.

மலைமுகட்டில் அடர்ந்த பனி படர்ந்த பனிகாலத்து அதிகாலை நேரமாகட்டும் அல்லது மேகங்கள் செறிந்த கொட்டும் மழைக் காலமாகட்டும் — காலை 6 மணியிலிருந்து 7மணிக்குள் குறித்த நேரத்தில் குருதேவர் தமது அலுவலகத்திற்கு வரத்தவறியது கிடையாது. அப்பொழுது அலுவலகத்திற்கு வேறு யாருமே வந்திருக்க மாட்டார்கள். அலுவலகத்திற்கு குருதேவர் கிளம்பி விட்டார் என்ற தகவல் தெரிந்ததும் ஏனையோர் அவசரம் அவசரமாக அங்கே ஆஜராய் விடுவர்.

*சிவானந்தருடன் ஒரு நாள்*

" இந்தக் காட்சி ஒரு பெரிய நகரின் ஹைகோர்ட்டைப் போலவோ அல்லது ஒரு சுறுசுறுப்பான துறைமுகத்தைப் போலவோ இருக்கிறது." என்று குருதேவர் தமது பக்தர்களுடன் அலுவலகத்தில் பணிபுரிந்ததைப் பற்றி ஜெர்மனியைச் சேர்ந்த பேராசிரியர் ஆர். ஆர். ரீகர் என்பவர் தம் கருத்தைக் கூறுகிறார். குருதேவர் தம் அலுவலகத்தில் எந்த முறையில் சதாவதானியாக (பல செயல்களை

ஒரே சமயத்தில் திறம்படச் செய்பவராக) திகழ்ந்தார் என்பது பற்றி அவர் அரிய விதத்தில் விளக்குகிறார்.

"ஒரே சமயத்தில் ஆயிரம் காரியங்களைக் கவனிக்க அவரால் முடிகிறது. பிரார்த்தனை கீர்த்தனத்துடன் அவர் தமது அலுவலகச் செயல்களைத் தொடங்குகிறார். பின் பல பைல்களில் கையெழுத்திடுகிறார். கடிதங்களைப் பார்வையிடுகிறார். ஆசிரம வரவு செலவுக் கணக்குப் பட்டியலை அக்கௌண்டன்ட் கொண்டுவந்து அவரிடம் காண்பிக்கிறார். காகிதம் மற்றும் தானியங்கி அச்சு இயந்திரம் வாங்கப் பணம் வேண்டும் என்று அச்சக மானேஜர் அவரிடம் விண்ணப்பிக்கிறார். கட்டடப் பொறுப்பில் உள்ள ஒரு வயதான சுவாமி ஆசிரமத்தில் புதிதாகக் கட்டி முடிக்கப்பட்ட ஒரு பெரிய விருந்தினர் விடுதியைத் திறந்து வைக்க வேண்டுமென்று அவரிடம் வேண்டிக் கொள்கிறார். இத்தனைக்கிடையில் செக்குகள் மற்றும் போஸ்டல் ஆர்டர்களில் குருதேவரின் கையெழுத்தை எப்பொழுது பெறலாம் என்று உரிய தருணத்தை எதிர்பார்த்து ஒரு மூலையில் காஷியர் காத்து நிற்கிறார். குருதேவருக்கு அருகில் ஒரு மேஜையில் அன்று அனுப்பப்பட வேண்டிய புத்தகக் கட்டுக்கள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. அதை ஒவ்வொன்றாக எடுத்து குருதேவர் முகவரியைச் சரிபார்க்கிறார்.

இடையிலே ஒரு பக்தரை ஏதாவது ஒரு நாமாவளி பாடுமாறு அவர் கேட்டுக் கொள்கிறார். சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து வந்திருக்கும் ஒரு பேராசிரியரைச் சில நிமிடங்கள் சொற்பொழிவாற்றுமாறு கேட்டுக் கொள்கிறார். சந்தடி மிக்க கடைத் தெருவைப் போல கையிலே பைல்கள், பேப்பர் கட்டுக்களுடன் அங்குமிங்கும் சீடர்கள் ஓடுகிறார்கள். பல டைப்ரைட்டிங் இயந்திரங்கள் டப்டப் என்று பெருத்த ஒலியை எழுப்பிக் கொண்டிருக்கின்றன. இளம் பிரம்மச்சாரிகள் கையில் டீ, காபி, பழம் மற்றும்

பிஸ்கட் தட்டுக்களுடன் வந்திருப்போரை உபசரிக்கின்றனர். வெகு தூரத்திலிருந்து வந்துள்ள பக்தர்கள் குருதேவரை அணுகி ஆசீர்வாதம் பெறுவதற்கு முயலுகிறார்கள். ஹரித்வார், ரிஷிகேசில் உள்ள சாது மகாத்மாக்கள் தங்களது பத்ரி, கேதார் மற்றும் கயிலாய யாத்திரைக்குப் பண உதவி வேண்டி அவரிடம் விண்ணப்பம் செய்கின்றனர். ஒரு சீடர் தமக்கு மந்திர தீட்சை அளிக்க வேண்டுமென்று அவரிடம் கேட்க, மற்றொருவர் தமது புத்தகத்தில் குருதேவரின் கையெழுத்திற்காகப் பேனாவை அவரிடம் நீட்டுகிறார்.

தமக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்க அவர் ஆசீர்வாதம் செய்ய வேண்டுமென்று வெகுநாளாகக் குழந்தைப் பேறு அற்ற ஒரு பெண்மணி குருதேவரை நமஸ்கரித்து வேண்டு கிறாள். சத்சங்க அறைக்கு வெளியே குரங்குகளும் நாய்களும் தங்களுக்குள் சண்டையிட்டுப் பெருத்த சத்தத்தை எழுப்பு கின்றன.

டெல்லியிலிருந்து வந்துள்ள ஒரு மாணவர் குழுவிற்கு குருதேவர் வேதாந்தத்தைப் பற்றி சுருக்கமாக எடுத் துரைக்கிறார். ஒரு மகாத்மாவை உத்தர காசி சென்று தீவிர தியானத்தில் ஈடுபடுமாறும், ஒரு இளைஞனை மலேயா போய் ஆன்மீகத்தைப் பரப்புமாறும் அவர் கேட்டுக் கொள் கிறார்.

ஆசிரமவாசிகள் சிலரிடையே உள்ள தகராறை அவர் சுமுகமாகத் தீர்த்து வைக்கிறார். உடனே அங்கிருந்த ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் பக்கம் திரும்பி அண்மையில் நடந்த ஒரு ரயில் விபத்து பற்றி விசாரிக்கிறார். யமுனையின் வெள்ளச் சீர்ழிவைப் பற்றி பாசன எஞ்சினீயர் எடுத்துக் கூறுகிறார். குஜராத்தில் உள்ள ஒரு டாக்டருக்கு கண் சிகிச்சை முகாம் நடத்துவது பற்றியும், கல்கத்தாவிலுள்ள ஒரு பக்தருக்கு அகில இந்திய தெய்வ நெறி மாநாட்டை ஏற்பாடு செய்யும்

படியும் கடிதங்கள் எழுதுகிறார். ஒரு பெண் சீடரைப் பாட்டு ஒன்று பாடுமாறும், வாலிபர் ஒருவரை ஆசனம் செய்து காண்பிக்குமாறும் கேட்டுக் கொள்கிறார். தன்னைச் சுற்றி அமர்ந்திருப்பவர்களிடம் வேடிக்கையும் விநோதமுமாகப் பேசுகிறார். எல்லோரும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார்கள். அவர்களுக்கு மாலைகளை எடுத்துக் கொடுக்கிறார். குருதேவரின் மேஜையின் மீது வகை வகையான பொருள்கள் வந்து குவிகின்றன. சுவிட்சர்லாந்திலிருந்து வந்திருக்கும் ஒரு பத்திரிகை நிருபர் மேல் நாட்டு மக்களுக்கு அறவுரை வழங்குமாறு கேட்டுக் கொண்டு அதற்காகத் குருதேவரிடம் தம்மிடம் உள்ள டேப் ரிகார்டரைச் சரி செய்கிறார்.

திடீரென்று சுவாமிஜி தம் கடிகாரத்தைப் பார்க்கிறார். நேரம் ஆகிவிட்டது போலும். உடனே ஒரு சிறு பிரார்த்தனையுடன் அலுவலக வேலையை முடித்து விட்டு எழுந்து தம் குடிலுக்குத் திரும்ப முனைகிறார்.

ஆபீஸ் ரூமை விட்டு வெளியே வந்ததும் பஞ்சாபிலிருந்து வந்துள்ள ஒரு மாணவர் குழு குருதேவரின் பாதங்களில் விழுந்து வணங்குகின்றது. மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர் அவர்களை வரவேற்றார். அவருக்குப் பிடித்தமான, Dont' smoke Govinda......' என்பதை மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார். குருதேவருடன் மாணவர்கள் பல போட்டோப் படங்கள் எடுத்துக்கொள்கிறார்கள். குடிலுக்குத் திரும்பும் வழியில் சுவர்க்காசிரமத்தில் உள்ள ஒரு நோயாளிக்குப் பால் கொடுக்க வேண்டும் என்றும், ரிஷிகேசத்தில் உள்ள ஒரு புற்று நோயாளிக்கு உடனடியாக ஒரு போர்வையை அனுப்ப வேண்டும் என்றும் தமது சீடர்களுக்கு உத்தரவிடுகிறார். இந்த முறையில் தம் குடிலுக்குத் திரும்பும் வரையில் சுவாமிஜி ஒரு விநாடிப் பொழுதையும் வீணாக்காது பல செயல்களை ஒரே சமயத்தில் அற்புதமான முறையில் செய்து முடிக்கிறார்.

குருதேவருடன் ஒரு காலைப் பொழுதில் தாம் கண்ட வற்றை மேற்கண்டவாறு அந்த பக்தர் நமக்கு அப்படியே படம் பிடித்துக் காட்டுகிருர். காலை அலுவல் நேரத்திற்குப் பின் எவராவது ஒரு பக்தர் நடத்தும் பாதபூஜை குரு தேவரின் குடீரில் நிகழும். அடிக்கடி 'பண்டாரா' எனப்படும் பொது சிறப்பு விருந்து நடக்கும். அதில் குருதேவரும் அனைவருடனும் அமர்ந்து உட்கொள்வார். விருந்தின் போது அனைவரையும் உபசரித்த வண்ணம் வேடிக்கையாக வேதாந் தத்தைப் புகட்டுவார்.

ஆசிரமத்தில் இரவு சத்சங்கம் அலுவலக அறையில் நடந்த காலை சத்சங்கத்தைக் காட்டிலும் மிக நேர்த்தியான தாக இருக்கும். பாட்டு, நாடகம், மறைநூல்களிலிருந்து வாசித்தல், மகான்களின் உபன்யாசங்கள், பஜனை, கீர்த்தனம் போன்ற பல அம்சங்கள் இரவு சத்சங்கத்தில் இடம்பெறும். எந்த நிகழ்ச்சியாயிருந்தாலும் அங்கே குருதேவரின் சாந் நித்தியம்தான் அனைத்திலும் முக்கியமானது. அனைத்திலும் நடுநாயகம் அவரே.

*சத்சங்கத்தில் சிவானந்தர்*

சிவானந்தாசிரமத்தில் இரவு சத்சங்கத்தில் பங்கு கொள்ளுவது என்பது அனைவருக்கும் ஒரு தனி ஆனந்தத்தை அளிக்கும். இன்றும் ஆசிரமத்தில் குருதேவர் இருந்த நாளைப் போலவே தினந்தோறும் சத்சங்கம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. குருதேவர் தமது ஜீவிய காலத்தில் சத்சங்கத்திற்கு மிகுந்த முக்கியத்துவம்] அளித்து வந்தார். ஒரு நாள் கூட அவர் சத்சங்கத்திற்கு வராமல் இருந்தது கிடையாது. உடல் நலம் குன்றி நடக்க முடியாத நிலையி லும் கூட சக்கர நாற்காலியில் அமர்ந்து வந்து சத்சங்கத் தில் பங்கு கொள்வார். சத்சங்க அறையில் அமரமுடிய வில்லை என்ருல் படுத்துக் கொள்வார். எந்த நிலையிலும்

சத்சங்கத்தில் பங்குகொண்டேயாகவேண்டும் என்று சத்சங் கத்தின் முக்கியத்துவத்தை மக்களுக்குத் தம் செயலால் புகட்டிய மாபெரும் மகாத்மா நம் குருதேவர்.

இதோ ஆசிரமத்தில் ஒரு நாள் நடந்த இரவு சத்சங்கத்தைப் பற்றிய ஒரு தத்ரூப வர்ணனை:

‘‘1962ம் வருடம் மே மாதம் 23ம் தேதி புதன்கிழமை. சூரியன் அஸ்தமித்துவிட்டான். இன்னும் சந்திரோதயம் ஆகவில்லை. ஆகா! ஆனந்த குடீரத்திலிருந்து ஒரு பேரொளி வெளிக்கிளம்புகிறதே, ஆமாம். குருதேவர் தமது குடீரத்தை விட்டு சத்சங்கத்தில் பங்கு கொள்வதற்காகக் கிளம்புகிறார். என்ன தேஜோமயமான சரீரம்! எப்பொழுதும் ஆனந்த மயமான வதனம். குழந்தையைப் போன்ற களங்கமற்ற சிரிப்பு. கங்கையை ஒட்டிய அவரது குடீரிலிருந்து அவர் கிளம்பும் காட்சியைக் கண்டு ஆனந்திக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் குடீரை ஒட்டிய ரோட்டுப் பகுதியில் தயாராக ஒரு பக்தர் கூட்டம் வெகு நேரம் காத்து நிற்கிறது. குருதேவரைக் கண்டவுடன் அந்தக் குழுவிலுள்ள அனைவரும் கரம் குவித்து குருதேவரை நமஸ்கரிக்கின்றார்கள். திருத்தணி யிலிருந்து வந்துள்ள பக்தர் குழாத்தினர் ‘முருகா, முருகா’ என்று குரல் எழுப்புகின்றனர். அதை அன்புடன் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் குருதேவரும் ‘முருகா, முருகா, ஓம் சரவண பவாய நம:’ என்று மெய் மறந்து கூறுகிறார்.

இரு புறத்திலும் இரண்டு சீடர்கள் தாங்கிப் பிடிக்க குருதேவர் மெதுவாகச் சாலையில் நடக்கிறார். பக்தர் கூட்டமும் பின் தொடர்கிறது. வைர விழா அறைக்கு முன்புறம் உள்ள திறந்த வெளி அரங்கில் ஹார்மோனியம், தபலாவுடன் கூடிய கீர்த்தனம் நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. நல்ல ஒளி விளக்குகள் போடப்பட்டு அந்த இடம் ஒளிமயமாகத் திகழ்கிறது பார்வையாளர்கள், பக்தர்கள், ஆசிரமவாசிகள் போன்ற பலரும் அங்கே அமர்ந்திருக் கின்றனர், ஒருபுறம் பெண்கள்; மறுபுறம் ஆண்கள்.

கீழே கங்கை நதி அமைதியாக ஓடிக் கொண்டிருக்கிறது. கண்களை மூடி மனத்தை ஒருமைப்படுத்தினால் அதிலிருந்து ஓங்கார நாதம் எழுவதைக் கேட்கலாம், எதிர்க் கரையில் உள்ள கீதாபவனம், சுவர்க்காசிரமத்திலிருந்து ஆலய மணி டாண், டாண் என்று ஒலிக்கிறது. பின் புறம் இமயமலை ஓங்கி உயர்ந்து நிற்கிறது. என்ன கம்பீரமான தோற்றம்! இரவு நேரத்தில் அது காட்டும் கருமை நிறம் நமக்குக் கறுப்பு நிறக் கண்ணனை நினைவூட்டுகிறது. ஆனந்த குடீரத்தின் ஆனந்த ஊற்றாகிய குருதேவர் அனைவரிடத்தும் குதூகலமாகப் பேசிக்கொண்டே சத்சங்க இடத்தை அடைகிறார்.

தமக்கென்று போடப்பட்டிருக்கும் ஒரு சாய்வு நாற்காலியில் குருதேவர் அமர்கிறார், அங்கிருந்து அவர் அனைவரையும், அனைவரும் அவரையும் காணமுடியும். அவருக்கு நேர் எதிர்புறத்தில் அலங்கரிக்கப்பட்ட கிருஷ்ண பகவானின் படம் வைக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரம சன்னியாசி ஒருவர் ஸ்ரீசூக்தத்தை முதலில் பாராயணம் செய்கிறார். பக்தர்கள் குருதேவரின் பாதங்களில் ரூபாய் நோட்டுக்களைக் காணிக்கையாக சமர்ப்பித்து விட்டு தங்கள் இடங்களில் சென்று அமர்கின்றனர். ஆசிரமத்தில் மகாலக்ஷ்மியின் அருள் நிரம்பி இருந்தது.

ஸ்ரீ சூக்த பாராயணத்திற்குப் பின், குருதேவர் சுப்பாராவ் என்ற கண் பார்வையற்ற ஒரு கீதைப் பேரறிஞரைப் பேசுவதற்காக அழைக்கிறார். அவரும் ஒரு சில கீதா சுலோகங்களைச் சொல்லி விளக்கம் சொல்கிறார். அதற்குப் பிறகு ரேடியோப் பாடகரான பால் என்பவரைப் பாடுமாறு கேட்டுக் கொள்கிறார். அவர் துளசிதாசரின் பஜனைப் பாடல் ஒன்றை மிக இனிமையான குரலில் பாடுகிறார். அப்பொழுது ஒரு பக்தர் குருதேவருக்கு அருகில் வந்து அவரது பாதங்களைத் தொடமுனைகிறார். "தொந்தரவு

செய்ய வேண்டாம். மெதுவாக, மெதுவாக" என்று குரு தேவர் அந்த அன்பரிடம் கூறுகிறார், பல வருடங்கள் இடைவிடாது செய்த கடும் தவத்தால் குருதேவரது உடல் கொஞ்சம் அழுத்தினாலும் மிகுந்த வலி கண்டது.

இரவு சத்சங்கத்தில் ஆசிரமத்தில் பொதுவாக ஞாயிற்றுக்கிழமைகளில் சூரிய பகவானும், திங்களில் சிவபிரானும், செவ்வாயன்று குமரப் பெருமானும், புதனன்று கிருஷ்ணரும், வியாழனன்று தத்தாத்ரேயரும், வெள்ளியன்று தேவியும், சனியன்று ஹனுமானும் விசேஷமாக வழிபடப்பட்டனர். ஸ்ரீராமநவமி, ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி, கிறிஸ்துமஸ், நவராத்திரி போன்ற விசேஷ தினங் களில் அந்தந்த மூர்த்திகளுக்கு சிறப்பு வழிபாடு நடக்கும்,

ஒரு அயல் நாட்டவர் வந்தார். குருதேவர் அவரை, 'ஓம் நமோ நாராயணாய' என்று சொல்லி வரவேற்றார்,

'எங்கிருந்து வருகிறீர்கள்?'

'வியன்னாவிலிருந்து', என்றார் அந்த அன்பர். உடனே அவருக்குப் புத்தகங்கள் மற்றும் பத்திரிகைகளைக் குருதேவர் கொடுத்தார்.

இதற்குள் பால் துளசிதாஸ் பஜனையைப்பாடி முடித்தார். அதையடுத்துக் கீர்த்தனம், ஆரத்திக்குப்பின் பிரஸாதம் வழங்கப்பட்டது. குருதேவரிடமிருந்து நேரடியாகப் பெறு வதற்காக இப்பொழுது பலர் அவரைச் சூழ்ந்து கொள் கின்றனர். அவர்களில் ஒருவர் ஒரு தத்துவப் பேராசிரியர். 'சங்கருக்குச் சமமான மேனாட்டு ஞானிகள் உண்டா?' என்று அவரிடம் குருதேவர் கேட்டார். அவர் சிறிது ஆலோசிக்கவும் குருதேவரே, 'எக்கார்ட், இல்லையா! சில கிறிஸ்துவ. தத்துவவாதிகளும் உண்டு' என்று பதில் சொல்லிவிட்டு 'நீங்கள் இதற்குள் துறைத் தலைவராகி யிருக்க வேண்டும், சனிக்கு எதிர் வீட்டில் பிருஹஸ்பதி

இருக்கிறர் போலும்', என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார். இது வெறும் வேடிக்கை அல்ல. ஜாதகங்களையும், கைரேகைகளையும் நம்பிக் காலத்தை வீணக்கும் நபர்களுக்குக் குருதேவர் இங்கு ஒரு பாடம் புகட்டுகிறர்.

அடுத்து ஒரு சமஸ்கிருதப் பேராசிரியரின் மீது குருதேவரின் பார்வை பட்டது. அவர் குவாலியரிலிருந்து வந்திருந்தார். குருதேவருடைய பிரம்மச்சரியம் பற்றிய புத்தகம் தன்னை எவ்வாறு மாற்றியமைத்தது என்பதை அவர் எடுத்துக் கூறினர். உடனே குருதேவர் ஆசிரமத்தின் புதிய வெளியீடான 'மனத்தை அடக்குதல்' என்ற ஆங்கில நூலை அவருக்கு அளித்தார். தம்மிடம் ஆராய்ச்சி செய்யும் ஒரு பி. எச்டி. மாணவருக்கு அது மிகவும் உதவும் என்று கூறி அவர் அதைப் பெற்றுக் கொண்டார்.

'நீங்கள் எனது பேராசிரியரா அல்லது மாணவரா? குருதேவர் அவரைப் பார்த்துக் கேட்டார்,

'நீங்கள்தான் எனக்குப் பேராசிரியர். நான் உங்கள் மாணவன்'—பேராசிரியர் கூறினர்;

'நீங்கள் துறைத் தலைவர் இல்லையா?'

'அங்கே. இங்கு அல்ல!'

குருதேவர் எழுந்து விட்டார். உடனே பக்தர்கள் ஒதுங்கி நின்று அவருக்குப் போவதற்கு வழி விட்டனர். அப்பொழுது ஒரு அன்பர் 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கும் திறம் அரிது', என்று தாயுமானவரின் ஒரு சில வரிகளைச் சொன்னர். அதைக் கேட்ட குருதேவர், 'அது சரிதான். அமைதியாக இருங்கள். ஆனல் உங்கள் கைகள் வேலை செய்து கொண்டிருக்கட்டும். மனத்தைக் கடவுளிடமும், கைகளை வேலையிடத்தும் கொடுங்கள். 'முக மேம் ராம் - கர் மேம் காம்'—நாவில் அவன் நாமம், கையில் நம்

வேலை. உள்ளே அமைதி வெளியே செயல். உலக நாடகத்தைச் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருங்கள்,'' என்று அறிவுரை கூறினர்.

மெதுவாகப் பிரார்த்தனை சுலோகங்களை வாயில் முணு முணுத்தவாறே குருதேவர் தமது குடிலை நோக்கி நடக்கிருர். குடிலின் வாயில் வரை பக்தர்கள் அவரைப் பின் தொடர்கின்றனர். தமது குடிலின் வாயிலில் நின்று கொண்டு குருதேவர் அனைவரையும் நோக்கிக் கரம் குவித்து நமஸ்காரம் செய்கிருர். பல்வேறு சமயங்களின் மறை நூல்களிலிருந்து சில பகுதிகளைப் பிரார்த்தனையாகச் சொல்லுகிருர். அனைவரும் அவரை வணங்குகின்றனர். குருதேவர் தமது குடிலுக்குள் நுழைகிருர். அப்பொழுது அவரது மனமானது நடந்த அனைத்து நிகழ்ச்சிகளிலிருந்தும் விடுபட்டு அந்தர்முகமாயிற்று என்பதை அவரது முகத் தோற்றம் எடுத்துக்காட்டியது. அமைதி. அமைதி. இறைவனுடன் ஒன்றித்த பேரானந்தம்.

*குருதேவர் பாடிய கீர்த்தனங்களில் சில*

இரவு சத்சங்கத்தில் மற்ற எல்லா நிகழ்ச்சிகளுக்கும் பிறகு குருதேவர் ஒரு சில கீர்த்தனங்களைப் பாடி விட்டு மஹா மந்திரம், மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம், சாந்தி பாடத்துடன் சத்சங்கத்தை நிறைவு செய்வார்.

சிறந்த ஆன்மீகக் கருத்துக்களைக் கொண்ட சில கீர்த்தனங்கள் அவருக்கு மிகவும் பிடித்தவை. அவற்றில் ஒரு சில கீழே தரப்படுகின்றன.

Serve love give purify meditate realise
Be good Do good Be kind Be compassionate
Enquire 'who am I?, know the self and be free.
Adapt adjust Accommodate!
Bear insult. Bear injury, highest sadhana.

ஸ்ரீ ராம் ஜய ராம் ஜய ஜய ராம்
ஸ்ரீ ராம் ஜய ராம் ஜய ஜய ராம்

● ● ●

Excel in service
Expand in love
Advance in knowledge
This is Synthetic Yoga

● ● ●

Start the day with God
End the day with God
Fill the day with God
Live the day with God.

'Song of A little', 'Song of Eighteen 'ities' என்ற ஆங்கிலப் பாடல்களையும் அவர் அடிக்கடி பாடுவார்.

### The Song of A little

ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ணா ஹரே கிருஷ்ணா
கிருஷ்ணா கிருஷ்ணா ஹரே ஹரே

Eat a little, drink a little
Talk a little, sleep a little
Do asan a little, pranayam a little
Do vichar a little, meditate a little.
(ஹரே ராம......)

## Song of Eighteen 'Ities

Serenity, regularity, absence of vanity
Sincerity, simplicity, veracity.
Equanimity, fixity, non-irritability
Adaptability, humility, tenacity.
Integrity, nobility, magnanimity,
Charity, generosity, purity
practise daily these eighteen ities.
You will soon attain Immortality.
Mr. so and so is a false non entity
You will abide in Infinity and Eternity
You will behold Unity in diversity
You can not attain this in the University
Sri Ram Jaya Ram Jaya Jaya Ram
Sri Ram Jaya Ram Jaya Jaya Ram.

ஆசிரமத்தில் நடந்த வைர விழா நாடக நிகழ்ச்சிகளின் போது குருதேவர் அங்கே கூடியிருந்த சாதகர்கள், பெரியோர்கள், பக்தர்கள் மற்றும் குழந்தைகள் அனைவரையும் அதிசயித்திலாழ்த்தும் வண்ணம் தேவதூதனைப்போல மேடையில் திறம்பட நடித்துக்காண்பித்தார். மற்றொரு முறை மதுரையைச் சேர்ந்த சுபத்திராபாய் என்பவர் ஆசிரம சத்சங்கத்தில் தமது கதாகாலக்ஷேபத்தைப் பண்ணி முடித்தார். உடனே குருதேவர் தமது இருக்கையிலிருந்து மெதுவாக எழுந்து மேடைக்குச் சென்று பரம்பரை உபன்யாசகர் போல பக்த நந்தனார் சரித்திரத்தை கதா காலக்ஷேபம் செய்து அனைவரையும் பரவசத்தில் ஆழ்த்தினார்.

சன்னியாசியின் ஆசிரமத்தில் பாட்டு, நாடகம் முதலிய அம்சங்களைச் சேர்த்ததற்கு சிலர் ஸ்ரீகுருதேவரைக் குறை

கூறினர். அவர்களுக்குக் குருதேவர் உரிய முறையில் பதிலளித்தார். "லௌகிக மக்கள் நினைப்பதுபோல இசை என்பது வெறும் பொழுது போக்கல்ல. இசை என்பது ஒரு யோகம். அது பக்தி யோகம் அல்லது சங்கீர்த்தன யோகம். இசையின் மூலமாகவே தியாகராஜர், மீரா, சூர்தாஸ் போன்றோர் இறைவனை உணர்ந்திருக்கின்றனர். இத்தகைய தலைசிறந்த பக்தர்களது தெய்வீகப் பாடல்களை சத்சங்கத்தில் நாம் பாடுகிறோம். இறைவன் நாமம் மனதைத் தூய்மையாக்குகிறது. பெரும்பான்மை ஜனங்களுக்கு சங்கீர்த்தன யோகமே சாலச் சிறந்தது. பக்தி, ஸத்வம், தூய்மை, மன ஒருமைப்பாடு ஆகியவற்றை அது மக்களிடம் வளர்க்கிறது. புரிவதற்கு கடினமான பிரம்மஸூத்திரம், உபநிடதம் ஆகியவற்றைப்பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டபின் இத்தகைய இனிய பாடல்கள் மனதிற்கு அரிய ஓய்வையும் ஆனந்தத்தையும் அளிக்கின்றன. சங்கீர்த்தனம் மக்களின் மனதை உயர்த்தி அதை இறைவனுக்கு அருகில் கொணர்கிறது. தங்களது அன்றுடக் கடின உழைப்பிற்குப் பின் இனிய இசையைக் கேட்டு ஓய்வு பெறுவதற்காகவென்றே பலர் சத்சங்கத்திற்கு வருகின்றனர். மன உளைச்சல் மற்றும் மனக் கோளாறுகளுடன் ஆசிரமத்துக்கு வரும் அநேகர் இனிய இசையால் பெரும் பலனடைகின்றனர். அவர்கள் புத்துயிர் பெற்று திரும்பிச் செல்லுகின்றனர். தொடர்ச்சியாக மக்களால் சொற்பொழிவுகளை ஆர்வத்துடன் கேட்க முடியாது. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவர்களது மன ஒருமைப்பாடு சிதறி விடுகிறது. இதைப் போக்க உதவுவதே கீர்த்தனம். அவர்களுக்கு உற்சாகமளித்து மீண்டும் சொற்பொழிவுகளைக் கேட்க அது அவர்களைத் தயார் செய்கிறது. ஆன்மாவிற்கும் மனதிற்கும் நரம்புகளுக்கும் இசை ஒரு அரிய டானிக் ஆகும். இசை, நடனம், நாடகம், நையாண்டி, கச்சேரி போன்றவை மற்ற எந்த ஆன்மீக மேடையிலும் தேவையற்றதாகக் கருதப்படலாம் —ஆனால் குருதேவரைப் பொறுத்தமட்டில் இவையெல்லாம் நலிந்த மனதிற்குப் புத்துணர்ச்சி ஊட்டவும், கவலைகளால் வருந்துவோர்க்கு

மகிழ்ச்சியை அளிக்க உதவும் சாதனங்களாகவும் அமைந்தன.

*சமரஸத் தந்தை சிவானந்தர்*

ஒரு முறை சிவானந்தாசிரமத்தில் மூன்று நாட்கள் வெகு விமரிசையாக ஒரு சர்வ சமய மாநாடு நடந்தது. பல சமயங்களிலிருந்தும் சுமார் 200 பிரதிநிதிகள் அதில் கலந்துகொண்டனர், காலம் சென்ற ஸர்.ஸி.பி. ராமஸ்வாமி ஐயர் அதைத் தொடங்கி வைத்தார். வேற்றுமையில் ஒற்றுமையை அம்மாநாடு வலியுறுத்தியது. அதில் குருதேவர் அனைத்து மத ஆச்சாரியர்களையும் பாராட்டும் வகையில் ஒரு ஆங்கிலப்பாடலைப்பாடி சர்வசமய சமரசத்தை மிக அழகாக வலியுறுத்தினர்.

குருதேவர் எல்லா சமயங்களையும் ஒன்று போல நேசித்தார். ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், சீக்கியர், யூதர், பார்சி போன்ற பல சமய பக்தர்களும் அவரிடம் ஒரே விதமான அன்பைப் பெற்றனர். ஆசிரமத்தின் ஆரம்ப நாட்களில் சில ஆசிரமவாசிகளிடையே வேற்றுமை மனோபாவம் நிலவுவதைக் குருதேவர் கண்டார். தமது ஆன்மபலத்தால் அதை அவர் சரிப்படுத்தி அவர்களை நல்வழிப்படுத்தினர்.

ஒரு சமயம் குருதேவர் ஒரு கிறிஸ்துவ பக்தரை ஆசிரம உணவுக் கூடத்திற்கு அழைத்துச் சென்று காட்டினர். உடனே அங்கு உணவருந்திக்கொண்டிருந்த சில ஆசார ஹிந்துக்கள் உணவருந்தாது பாதியில் வெளியேறினர். அதை அறிந்த குருதேவர் அந்தக் கிறிஸ்துவ அன்பரை நேராகச் சமையலறைக்குள்ளேயே கூட்டிச் சென்று அங்கே அவருக்குப் பாயைப் போட்டு உட்காரச் செய்து இலை போட்டு தாமே உணவு பரிமாறி சாப்பிடச் செய்தார், அதன் பின் ஆசிரமவாசிகள் எவரும் எவ்வித மறுப்பையும் காட்டவில்லை. மற்றொரு சமயம் ஆசிரமகோவில்

கட்டட வேலையை மேற்பார்வை செய்துகொண்டிருந்த முஸ்லிம் சூபர்வைசருக்கு உணவு அனுப்ப வேண்டி நேரிட்டது. சமையலறை மேலாளர் இலையில் சாதத்தை வைத்து மண் குவளையில் சாம்பாரை வைத்து அவருக்கு அனுப்பினார். அதை அறிந்த குருதேவர் அடுத்தநாள் எல்லோருக்கும் தட்டில் அனுப்ப ஏற்பாடு செய்தார். உணவு விடுதி மேலாளரிடம் அவர், 'கடவுள் ஒருவனது பக்தியைப் பார்க்கின்றாரே தவிர குலத்தையோ கோத்திரத்தையோ கேட்பதில்லை', என்று அறிவுரை கூறினார்.

## அனைவருக்கும் அடைக்கலம் அளித்த அண்ணல்

சிவானந்தாசிரமம் ஒரு சிறிய உலகம் போன்று காட்சி தந்தது. 'இதை ஆசிரமம் என்பதைக் காட்டிலும் புகலிடம் என்று கூறுவதே மிகவும் பொருந்தும்' என்று குருதேவரே ஒரு முறை வேடிக்கையாகக் குறிப்பிட்டார். அது வேடிக்கை மட்டுமல்ல, முழுக்க முழுக்க உண்மையுமாகும். யார் தன்னை அண்டி வந்தாலும் மறுப்புக் கூறாது அவர்களுக்கு அடைக்கலம் அளித்த அண்ணல் குருதேவர். அவர்கள் யார், எங்கிருந்து வருகிறார்கள் என்று கூட குருதேவர் கேட்க மாட்டார். 'பாவம், நான் அவர்களை ஏற்க மறுத்து விட்டால் அவர்கள் எங்கே போவார்கள்?', என்று சொல்லி ஏற்றுக் கொள்ளுவார்.

ஒரு சமயம் ஆசிரமத்தின் நிதி நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. ஏற்கனவே ஆசிரமத்தில் பணி புரிபவர்களுக்கே உணவு அளிப்பது பெரும்பாடாக இருந்தது. ஆசிரமவாசிகள் வெளிச் சத்திரங்களுக்குச் சென்று உணவு ஏற்க வேண்டிய இக்கட்டான சூழ்நிலை உருவாகியது. இந்த நிலையில் யாரோ ஒருவர் ஆசிரமத்தில் தங்குவதற்குத் தன்னை அனுமதிக்கும்படி குருதேவரிடம் வேண்டினார். குருதேவரும் உடனே அதற்குச் சம்மதித்தார். இதை அறிந்த ஆசிரமச் செயலாளர் ஆசிரமத்தின் இக்

கட்டான நிலைமையை அவரிடம் விளக்கியதும் குருதேவர். 'இவர் இங்கு வருவதற்கு முன்னரேயே இறைவன் இவருக்கான உணவையும் அனுப்பிவிட்டார்', என்று பதில் சொல்லி சமாதானம் செய்தார். அவ்வளவு பரந்த உள்ளம் அவருடையது. எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் ஒருவர் சிவானந்தாசிரமத்தில்தங்கலாம்,எந்தக் காரணத்தை ஒட்டி அந்த நபர் ஆசிரமத்துக்கு வந்திருந்தாலும், ஆசிரமத்தில் இருந்தவரையில் யோகம், பக்தி, தொண்டு, ஆசனம் முதலான பலவற்றிலும் குருதேவர் அவருக்குப் பயிற்சி அளிப்பார்.

ஒரு சமயம் வழிதவறிச் சென்ற இளம் பெண் ஒருத்தி கர்ப்பமான நிலையில் ஆசிரமத்துக்கு வந்து குருதேவரை அடைக்கலம் புகுந்தாள். தனது பரிதாப நிலையை அவரிடம் விளக்கிய அவள் கங்கையில் விழுந்து உயிர்த்தியாகம் செய்வதற்குமுன் குருதேவரது தரிசனத்தைப் பெறுவதற்காக தான் அங்கே வந்ததாகக் கூறினாள். மேற்கொண்டு எதுவும் கேட்காமல் குருதேவர் ஆசிரமத்தில் இருந்த பெண் சன்யாசி ஒருவரது மேற்பார்வையில் அவளை இருக்கச் செய்தார். அந்தப் பெண்ணின் பிரசவத்திற்கும் குருதேவரே ஏற்பாடு செய்து, அவள் பெற்ற குழந்தையை குழந்தை இல்லாத ஒரு பணக்காரத் தம்பதியருக்கு சுவீகாரமாகக் கொடுத்து, அவளுக்கும் நல்வாழ்வுவாழ வழி காட்டி அருளினார். இது போன்ற எத்தனை எத்தனையோ பேர் குருதேவரை அண்டி புத்தொளியும் மகிழ்ச்சியும் மிக்க புன்ர் வாழ்வு பெற்றார்கள்.

டாக்டர்கள், வக்கீல்கள், அம்பாஸடர்கள், மந்திரிகள், படித்தவர்கள், படிக்காதவர்கள், இளைஞர்கள், முதியோர்கள். ஆண்கள், பெண்கள் என்று அனைவருமே குருதேவரை அணுகி அமைதியையும் ஆனந்தத்தையும் நாடினர்.

அமைதியான சூழ்நிலையில் கங்கைக் கரையில் இமயமலையின் மடியில் குருதேவரின் மேற்பார்வையில்

பிரம்மாண்டமான ஆன்மீகப் பணி வியத்தகு முறையில் அன்றும் நடைபெற்றது, இன்றும் நடைபெற்று வருகிறது. விசுவநாத மந்திரில் தினமும் மூன்று கால பூஜை நடக்கும் சிவராத்திரி அன்று நடக்கும் விசேஷ பூஜையில் குருதேவரும் கலந்து கொண்டு பண்ணும் பூஜை காண்போர் கருத்தைக் கவரும். அதற்குக் கீழ்புறத்தில் அகண்ட மஹா மந்திரம் நடக்கும் பஜனை ஹால். அடுத்து யோக வேதாந்த அச்சுக் கூடம் பல நவீன அச்சு இயந்திரங்களிடன் லட்சக் கணக்கில் குருதேவரின் நூல்களை அச்சிட்டு அவர் ஆரம்பித்த ஞான யக்ஞத்தை உலகெங்கும் பரப்பி வருகிறது. அதற்கு அருகில் ஒரு அரிய வாசகசாலை உள்ளது. ஆயிரமாயிரம் நூல்கள் அதில் உள்ளன. அதற்கும் பக்கத்தில்தான் குருதேவரின் சமாதி கம்பீரமாகக் காட்சி தருகிறது. மேலும் மேலும் பிரம்மாண்டமான கட்டடங்கள் பல பெருகி வருகின்றன. சிவானந்தா ஆயுர்வேத மருந்தகம் சியவனப்ராசம், பற்பொடி, பிரம்மி அம்லா தைலம் போன்ற பல மருந்துகளைத் தயார் செய்து உலகெங்கும் மருத்துவ உதவி புரிகிறது. ஸ்டுடியோ, கட்டிடப் பிரிவு, தகவல் தொடர்புப் பிரிவு, வரவு செலவு அலுவலகம், சிவானந்தா வெளியீட்டு அலுவலகம், விருந்தினர் விடுதி, அன்ன க்ஷேத்திரம் போன்ற ஆசிரமத்தின் பல பிரிவுகளில் தன்னலமற்ற சாதகர்கள் இடைவிடாது ஞான யக்ஞப் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவரவர் திறமையை உணர்ந்து அவரவருக்கேற்ற பணியில் ஈடுபடுத்தி அனைவரையும் தெய்வீகத் திருத்தொண்டில் ஈடுபடுத்திய பெருமை குருதேவரைச் சாரும்.

இத்தனை பெருமைக்குரிய குருதேவரைப் பற்றி ஒருவர் பக்தி பூர்வமாகப் பாடுகிருர். இது ஒரு அருமையான ஹிந்திப் பாடல்:

கங்கா கிநாரே மேரா டேரா—ரே
கங்கா கிநாரே மேரா டேரா
சல் சல் சல் சல் கங்கா சலத் ஹை
பஹுத் சுசீத சமீரா (கங்கா கிநாரே......—)

ஆனந்த்குடீர் மேம் வாஸ ஹமாரா
பக்த ஆனந்த குடீரா
தாஸாயத் ஸங்கத் சுவாமி சிவானந்த
குருவர பூஜன் ஆயா ரே (கங்கா கிநாரே .........)

ஸுந்தர வதன் ஸுமதுர வசன்
போலத் சிவானந்த மேரா
தேசோம் தேசோம் ஸே பக்த ஜன் ஆயே
மிலத் ஸ்வாமி யோகீ தீரா ரே
(கங்கா கிநாரே — ... —

ஜகமேம் ஞான கீ கங்கா பஹாயீ
மானவ ஜீவன் திவ்ய பனுயா
சுவாமி சிவானந்த சரண் கமல் மேம்
ராம ப்ரேம ஜகாயா ரே (கங்கா கிநாரே.........)

---

## சிவானந்தருடன் ஒரு நாள்

மன அமைதியை நாடி தான் காஷ்மீர் போக விரும்புவதாக சுவாமி எஸ். குருதேவரிடம் தெரிவித்தார்,

"மன அமைதி வேண்டுமானுல் ஜபம் செய்யுங்கள். மன அமைதி ஜபம் செய்வதனுல் வருகிறதா அல்லது காஷ்மீர் போவதாலா?"—குருதேவர் அவரைப் பார்த்துச் சொன்னுர்.

இருப்பினும், பின்னர் குருதேவர் அவருக்கு காஷ்மீர் போவதற்கு அனுமதி அளித்தார்.

---

# 7

## அதிசய முறையில் ஆசிரம நிர்வாகம்

குறுகிய காலத்தில் வியக்கத்தக்க விதத்தில் சிவானந்த ஆசிரமம் விரிவடைந்தது போலவே ஆசிரமத்துக்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் ஆசிரம விவகாரங்களும் பெருகிக் கொண்டே சென்றன. அனைத்தும் இறையருளாலேயே என்று பரிபூரணமாக நம்பிய குருதேவர் தம்மை இறைவன் கையில் உள்ள ஒரு கருவியாகவே சதா கருதிச் செயல்பட்டு வந்தார். ஒரு ஸ்தாபனத்தை லௌகிகத்தில் ஈடுபாடு உள்ள ஒரு நபர் நிர்வாகம் செய்வதற்கும், ஒரு ஞானி நிர்வகிப்பதற்கும் இடையில் பெருத்த வேறுபாடு உண்டு.

தான் ஒருபெரிய மடத்தின் தலைவர் என்ற கர்வம் குருதேவரிடம் கொஞ்சமும் கிடையாது. தொண்டருள் தன்னையும் ஒரு தொண்டனாகவே அவர் கருதினார். எல்லா மடங்களிலும் காலையும் மாலையும் சீடர்கள் தலைவரது அறைக்குச் சென்று அவரை நமஸ்காரம் செய்யவேண்டும். சிவானந்தாசிரமத்தில் இந்த சட்ட திட்டம் எதுவும் கிடையாது. தனக்கென்று ஒரு விசேஷ ஆசனம் கூட அவர் வைத்திருந்தது கிடையாது. பஜனை அறையில் அனை

வருடனும் சமமாகவே அவரும் விரிப்பின் மீது அமர்வார். உடல் மிகவும் தளர்ந்து போன நிலையில்தான் அவர் ஒரு சாய்வு நாற்காலியைப் பயன் படுத்தினார்.

*அனைவரையும் அரவணைத்தார்*

ஆசிரம ஊழியர்களிடம் அவர் அன்புடனும் ஆதரவுடனும் நடந்து கொண்ட விதம் அலாதியானது. வேலைக்காரப் பையன்களைக் கூட அவர் நமஸ்காரம் செய்வார், அவர்களுக்குப் பால், பழங்கள், டீ எல்லாம் கொடுப்பார். கை நிறையச் சம்பளமும் கொடுப்பார். வேலைக்காரப் பையன்களைப் பார்த்தால் பெரிய ஆபீஸர்கள் போல தோற்றமளிப்பார்கள். மற்ற ஆசிரமவாசிகளுக்கு உள்ள வசதிகள் அனைத்தும் பணி புரியும் பையன்களுக்கும் உண்டு.

ஒருநாள் லாகூரிலிருந்து வந்திருந்த ஒரு கனவானுடன் குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். உடன் சில சீடர்களும் இருந்தார்கள். திடீரென்று சுவாமிஜி வெளியே செல்லும் சுகாதார அதிகாரியை உள்ளே கூப்பிடும் படிச் சொன்னார். குருதேவர் காட்டிய இடத்தில் சீடர்கள் பார்த்தார்கள். எந்த அதிகாரியையும் அங்கே காணோம். சுவாமிஜி தூரத்தில் அழுக்குடையுடன் நின்று கொண்டிருந்த ஆசிரமத் தோட்டியைச் சுட்டிக் காட்டினார். அவனைத் தான் அவர் மிகவும் மதிப்புடன் சுகாதார அதிகாரி என்று குறிப்பிட்டார். அவனை சீடர் குருதேவரிடம் அழைத்து வந்தார். "ஓஜி! கக்கூஸை நீங்கள் மூன்று நாட்களாகக் கழுவவில்லை போலிருக்கிறதே. தயவு செய்து இன்று செய்து விடுங்கள்,' என்றார் குருதேவர். பின்னர் சீடர்கள் பக்கம் திரும்பி. 'ஓம், கோவிந்தஜி, அவனுக்கு நாலணாக் கொடுங்கள். ஓம், விஸ்வேஸ்வர், அவனுக்கு ஒரு ஆரஞ்சுப் பழம் கொடுங்கள்,' என்றார். அவற்றைப் பெற்றுக்கொண்ட அந்த 'சுகாதார அதிகாரி' உடனே குருதேவர் சொன்ன வேலையைச் செய்து முடித்தார்.

ஆசிரமத்தில் சம்பள ஊழியர்கள், நிஷ்காம சேவை செய்பவர்கள் என இருவகையினர் உண்டு. தங்கள் உடைமைகள் அனைத்தையும் துறந்து விட்டு கர்மயோகமாகக் குருதேவருக்குப் பணிவிடை செய்பவர்களே பிந்திய பிரிவினராவர்.

ஒரு நாள் ஆசிரம ஊழியர் ஒருவர் சைக்கிளில் வந்து கொண்டிருந்தார். அப்பொழுது குருதேவர் தமது குடீரிலிருந்து கிளம்பி வெளியே வருவதைக் கண்டு அவர் சைக்கிளை நிறுத்திக் கீழே இறங்கி வேட்டியைச் சரிசெய்து துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு பணிவுடன் குருதேவரை வணங்கி நின்றார். அதைக் கண்ட குருதேவர் சிரித்துக்கொண்டே, 'ஓஜி! இந்தப் பாவனைகள் எல்லாம் எனக்குத் தேவையில்லை, அன்பும் அடக்கமும் இருப்பது இதயத்திலாகும் பெரியோர்களிடம் உண்மையான அன்பும் பணிவும் நாம் கொண்டு விளங்க வேண்டும். அது எனக்குப் பார்த்தவுடனேயே தெரியும். மானஸீகமாக அவை இருந்தால் போதும். ரிஷிகேசத்திற்குப் போய் சாமான் வாங்க இந்த வெயிலில் நீங்கள் போகிறீர்கள் இல்லையா? உங்களுக்குத் தேவையானதை எடுத்துக் கொள்ளத் தயங்க வேண்டாம். இப்பொழுது ஒரு குளிர் பானமும், அரை மணி நேரம் கழித்து ஒரு சூடான பானமும் சாப்பிடுங்கள். கடைத் தெருவில் ஒரு சில பழங்களையும் வாங்கிச் சாப்பிடுங்கள். அதற்கெல்லாம் பில் கூடக் கொடுக்கத் தேவையில்லை. உடலை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளத் தேவையானவற்றைச் செய்து கொள்ளுவதற்கு உங்களுக்குப் பூரண உரிமை உண்டு'', என்று கூறினார். இத்தகைய சுதந்திரம் ஆசிரமத்தில் அனைவருக்கும் உண்டு. இதைத் தவறாகச் சிலர் பயன்படுத்தியதும் உண்டு. அவர்களை உடனுக்குடன் குருதேவர் மன்னித்து விடுவார். அத்தகைய நிகழ்ச்சிகளை அவர் மறந்தும் விடுவார். மன்னித்தல், மறத்தல் இரண்டையும் அவர் தம் வாழ்வில் செய்து காட்டினார். ஆசிரம செயலாளச்

பதவியிலிருந்த ஒரு சிலரே பணத்தைக் கையாடல் செய்த தாகத் தெரிய வந்த பொழுதும் கூட குருதேவர், 'அப் படியா! அவர் அப்படிச் செய்திருக்கமாட்டாரே! சரி; போனால் போகட்டும். பாவம் அவருக்கு பணம் தேவைப் பட்டது போலும்! இறைவனே அவரது வடிவில் வந்து எடுத்துக் கொண்டு போயிருக்கிறார். மேற்கொண்டு காரியத் தைக் கவனியுங்கள்', என்று சொல்லி அவற்றை அப்படியே மறந்து விடுவார்.

எவரெவரிடம் எந்தெந்தத் திறமைகள் இருக்கின்றன என்பதை அறிந்து அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில் குருதேவருக்கு இணை அவர்தான். ஒவ்வொருவரது குணத் தையும் தன்மையையும் அறிந்து அதற்கேற்ப குருதேவர் அவரிடம் பழகுவார். தம்மை அண்டிய அன்பர்களின் அறிவு, ஆற்றலை முழுமையாக அவர் பயன்படுத்திக் கொள்வார். யாரையும் அவர் அதட்டி அதிகாரம் செய்ததே கிடையாது. இதமாகச் சொல்லி காரியம் செய்யவைப்பார். ஆசிரமவாசி களிடம் யோகிராஜ், விரக்த மகாத்மா, கர்மயோகி, ஞான யோகி, என்று பலவாருகப் பெயரிட்டு அழைத்து அவர்களது கடமைகளை ஆற்றச் செய்வார். அனைவரும், 'சரி சுவாமிஜி, சரி சுவாமிஜி' என்று சொல்லித் தம் கடமைகளை உடனுக் குடன் முடித்து விடுவர்.

### எல்லாப் பணியும் இறைப் பணியே

கடினமாக உழைப்பவர்கள்பால் குருதேவர் தனிப் பரிவு காட்டுவார். எவராவது அளவுக்கு அதிகமாக உழைப்பதைக் கண்டால் உடனே ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி அவரிடம் கேட்டுக் கொள்ளுவார். "பிறரிடமிருந்து அதிக வேலை வாங்க உங்களுக்குத் தெரிய வேண்டும். பிறரிடம் வேலை வாங்குவது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல. அதற்கு உங்களது ஆணவம் கொஞ்சம் குறைந்து பணிவு அதிகரிக்க வேண்டும். அவர்

களை மதித்துப் புகழ வேண்டும். அதில் உங்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லையே. அவர்களுடன் நீங்களும் ஒன்றித்து விட வேண்டும்,'' என்பார் குருதேவர்.

ஆசிரமத்தில் எந்த வேலையையும் செய்ய குருதேவர் தயங்க மாட்டார். சில சமயங்களில் குருதேவர் கங்கையிலிருந்து வாளிகளில் நீர் சுமந்து சமையலறைக்குக் கொண்டு செல்வார். சில வேளைகளில் சத்சங்க அறையில் ஜமுக்காளம் விரிப்பார், அல்லது தியான வகுப்புக்கான மணியை அவரே அடிப்பார். விருந்தினர்களுக்கு உணவைத் தட்டுக்களில் அவரே கொண்டு சென்று கொடுப்பார். வேலையில் 'இது உயர்ந்தது, அது இழிந்தது' என்று பாகுபாடே பார்க்கக் கூடாது என்று அடிக்கடி சீடர்களிடம் சொல்வதை அவர் தாமே செய்து காண்பித்தார். 'டன் கணக்கான பேச்சைக் காட்டிலும் அவுன்ஸ் அளவு செயல் சிறந்தது' என்பது அவரது கொள்கை.

ஆசிரமத்தில் விசுவநாதர் ஆலயக் கட்டட வேலை நடந்து கொண்டிருந்தது. அதை மேற்பார்வை செய்ய குருதேவர் சென்றார். திடீரென்று துண்டை எடுத்து தலையில் சுற்றிக் கட்டினார். தட்டுக்களில் மண்ணை அள்ளி தலையில் எடுத்துக் கொண்டு மற்ற கூலியாட்களுடன் சேர்ந்து கட்டட வேலையில் ஈடுபட்டார். அவர்களுடன் மகிழ்ச்சியாகப் பேசினார். அந்தப் பணியாட்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். அவர்களைவிட குருதேவர் அவர்கள் மத்தியில் பெற்ற இன்பம் அளவு கடந்தது. 'எந்த வேலையும் புனிதமானதே. அதிலும் ஆலயத்திருப்பணி என்றால் மிகவும் புனிதமானது', என்று சொல்லி குருதேவர் அஸ்திவாரத்தைப் பலப்படுத்தும் காரியத்தில் ஈடுபடலானார்.

குருதேவர் எந்தக் காரியத்தையும் 'பின்னால் பார்த்துக் கொள்ளலாம்' என்று ஒத்திப் போட்டதே கிடையாது. உடனே செய்க, முயன்று பார்க்கவும் (Do it now, Try it

now) என்று பொருள்படும் DIN, TIN என்ற வார்த்தைகளை அவர் அடிக்கடி பயன்படுத்துவார். பக்தர்கள் அவருக் கெழுதும் கடிதங்களுக்கு உடனுக்குடன் குருதேவர் பதில் அனுப்பிவிடுவார். எவ்வளவு காரியங்கள் குவிந்திருந்தாலும் அவற்றைப் பதறாமல் குருதேவர் செய்வார். அமைதி, அடக்கம் இரண்டினுடைய உறைவிடமாக அவர் விளங் கினார்.

குழந்தைகளானாலும் குருதேவர் அவர்களை 'நீங்கள், வாருங்கள்,' என்றே மரியாதையாக அழைப்பார். அவர் களையும் அன்புடன் நமஸ்காரம் செய்வார். சத்சங்கத்தில் குழந்தைகள் பாடினாலோ, பேசினாலோ உடனே அவர்களை உற்சாகப்படுத்தும் விதத்தில் பட்டங்களும், பரிசுகளும் கொடுத்து மகிழ்விப்பார். எத்தனையோ பேர் ஆசிரமத்தில் எங்கெங்கோ விதவிதமான பணிகளில் ஈடுபட்டிருந்தாலும் எங்கு தவறு நடக்கிறது என்பதை உடனுக்குடன் கண்டு அவர் அவற்றைச் சரி செய்து விடுவார்.

ஒரு குறிப்பிட்ட ஆசிரமவாசி சிறிது காலம் ஆசிரமத் துக்குத் தொண்டு செய்து விட்டுப் பின்னர் சோம்பேறியாக இருக்க முற்பட்டார். அதைக் கண்ட சுவாமிஜி அவரிடம் கோபம் கொள்ளவுமில்லை. ஆசிரமத்தை விட்டுப் போகச் சொல்லவுமில்லை. "அவர் ஆசிரமத்துக்குச் செய்திருக்கும் சேவைக்கு நான் அவருக்கு நான்கு அல்லது ஐந்து ஜன்மங் களுக்கு ஆதரவு அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று குருதேவர் தமது நன்றியைத் தெரிவித்தார். தினைத் துணை நன்றி செயினும் பனைத் துணையாகக் கொள்வர் பயன் தெரிவார் என்ற குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்தவர் குருதேவர்.

ஆசிரம நிர்வாகம் அதுவாகவே நடந்தது என்று சொன்னால் அது மிகையாகாது. புத்தகம் எழுதுதல்,

தியானம், மற்றும் தொண்டு செய்தல், விருந்தினரை வரவேற்றல், சத்சங்கத்தை நடத்துதல்......... இவற்றில் குருதேவர் ஈடுபட்டார். கடவுள் ஆசிரமத்துக்கு வேண்டியவற்றை யார் யார் மூலமாகவோ அனுப்பி வந்தார். அச்சகத்திலோ, ஆசிரமத்திலோ, மருந்தகத்திலோ, ஆஸ்பத்திரியிலோ எவராவது விலகிவிட்டாலோ அல்லது மரணமடைந்தாலோ உடனுக்குடன் இறையருளால் திறமை மிக்க நபர்கள் கிட்டிவிடுவர்.

இறைவன் கொடுத்தார்

ஒரு சமயம் அடுத்த நாள் ஆசிரமம் நடத்துவதே இயலாது என்னுமளவுக்கு நிதி நிலைமை மிகவும் மோசமாகியது. செயலாளர் குருதேவரிடம் வந்து நிலைமையை எடுத்துக் கூறிக்கொண்டிருந்தார். அதைக் கேட்ட குருதேவர், 'அப்படியா கவலையே படாதீர்கள்; இத்தனையையும் ஏற்படுத்திக் கொடுத்த இறைவனுக்கு எல்லாம் தெரியும். எது நடக்கவேண்டுமோ அது நடக்கும். நீங்கள் வீணாகக் கவலைப்படாதீர்கள். பழைய நிலைக்குப் போவதற்கு நான் தயார். நீங்களும் தயாராயிருங்கள். ரிஷிகேசத்தில் உள்ள பல்வேறு சத்திரங்களுக்கு நாம் பல குழுக்களாகப் பிரிந்து சென்று பிச்சை யேற்றுக் காலத்தைக் கழித்து விடலாம். ஏற்பாடு செய்யுங்கள்', என்று அவர் சொல்லிக் கொண்டிருந்த வேளையில் தபால்காரர் அன்றையத் தபால் கடிதங்களை செயலாளரிடம் கொடுத்துவிட்டுப் போனார். செயலாளர் ஒவ்வொரு தபாலாகப் பிரித்துப் படித்தவர் திடீரென்று ஒரு தபாலைப் பிரித்ததும் மகிழ்ச்சியால் துள்ளினார். 'சுவாமிஜி! இறைவன் நம் பிரச்சினையைத் தீர்த்து விட்டார். இதோ ஒரு பக்தர் அவராகவே ஒரு பெரும் தொகைக்கு செக் அனுப்பியிருக்கிறார்', என்று முகம் மலரக் கூறினார். அதைக் கேட்ட சுவாமிஜியிடம் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை. ''அப்படியா, எல்லாம் இறை

அருள்'', என்று சொல்லி தமது காரியத்தில் மூழ்ந்து விட்டார். 'பட்டாபிஷேகம் உனக்கே' என்ற போதும், 'காட்டிற்குப் போ' என்ற போதும் ஒரே நிலையில் அன்றலர்ந்த செந்தாமரையினும் அழகாக எந்தவிதக் கலக்கமுமின்றி மலர்ந்திருந்த ஸ்ரீராமபிரானின் முக நிலையை குருதேவரது அந்த சமமான மனநிலை ஒத்திருந்தது. இதுபோன்ற நிகழ்ச்சிகள் ஆசிரமத்தில் அவ்வப்பொழுது நிகழும்.

ஒரு முறை சில இஞ்சினியர்கள் ஆசிரமத்துக்கு வந்து குருதேவரைத் தரிசித்தனர். குருதேவர் அவர்களை அழைத்துச் சென்று ஆசிரமக் கட்டிடங்களைக் காட்டினார். 'சுவாமிஜி, இதையெல்லாம் உங்களால் எப்படிக் கட்ட முடிந்தது?'' என்று கேட்டார் அவர்களுள் ஒருவர். "இல்லற பக்தர்களிடம் பணம் இருக்கிறது. ஆசிரமத்தால் பயனடைந்த பலர் நன்கொடை வழங்குகிறார்கள், ஆனால் அது எப்பொழுது கிடைக்கும் என்று திட்டவட்டமாகத் தெரியாத காரணத்தால் வரைபடமோ பெரிய திட்டங்களோ இன்றி ஏதோ தெரிந்த அளவில் கட்டுகிறோம். தேவைக்குப் போதுமான பணம் வருகிறது. ஆனால் செலவும் அதிகம். ஆசிரமம் எப்பொழுதும் 'சுமார் ஒன்றரை இலட்ச ரூபாயில் கடனில் இருக்கும்.' என்றார் குருதேவர். உடனே மற்றொரு பக்தர், 'சுவாமிஜி உங்களது சீடர்கள் சிலரை ஆப்பிரிக்காவிற்கு அனுப்பினால் அங்கே நிறையப் பணம் வசூலாகுமே', என்றார் அதற்குக் குருதேவர், 'நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் என்னிடம் அதிகமான சீடர்கள் கிடையாது. இருக்கும் சிலருக்கு வேலை இங்கேயே சரியாக இருக்கிறது'' என்று பதில் கூறினார்.

பல சமயங்களில் குருதேவரின் பக்தர்கள் அவரிடம் பணம் சேர்ப்பதற்காக யாத்திரையை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொள்வார்கள். 'அதுதான் என்னால் இயலாத ஒன்று, என்று உடனே அவர் பதில் சொல்லிவிடுவார். சிலர்

சில கட்டுப்பாடுகளைக் கூறி பணம் கொடுக்க முன் வருவர். அவற்றை சுவாமிஜி ஏற்க மறுத்துவிடுவார். எந்த நிலையிலும் தாம் கொண்ட கொள்கையிலிருந்து அவர் சிறிதும் பிசகினது கிடையாது. மற்றொரு அன்பர் வந்தார். ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஆசிரமத்தில் இருந்தது அவருக்குப் பிடிக்கவில்லை, பெண்களுக்காகத் தனியாக ஒரு ஸ்தாபனம் ஆரம்பிக்க குருதேவர் முன் வந்தால் பெரும் தொகையை அளிக்கத் தாம் முன் வருவதாக அவர் கூறினார். அதையும் குருதேவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை. 'பெண்கள் இல்லாத இடம் எது?', என்றார் குருதேவர் மற்றொரு அன்பர் ஆசிரமத்துக்குக் கார் கொடுக்க முன் வந்தார். 'வேண்டாம். அது வந்து விட்டால் இங்குள்ளவர்களைச் சோம்பேறியாக்கிவிடும்' என்று சொல்லி மறுத்து விட்டார். மற்றும் சிலர் குருதேவருக்கு சிம்லா, மசூரி போன்ற மலைவாசஸ்தலங்களில் அழகான பங்களாக்கள் கட்டித் தருவதற்கு முன் வந்தனர். 'எனக்கு கங்கைக்கரையில் உள்ள இந்தப் பழைய குடிசே போதும்', என்று திருப்தியுடன் குருதேவர் பதில் அளித்தார்.

## அன்பு எனும் ஆயுதம்

ஒரு சமயம் ஆசிரம அச்சகத்தில் வேலைப் பளுவின் காரணமாக வெளியிலுள்ள ஒரு அச்சகத்தாரிடம் புத்தகம் அச்சடிக்கக் கொடுத்திருந்தார்கள். அவர்கள் போட்ட பில் பணம் பல மடங்கு அதிகம் என்பதைக் கண்டு ஆசிரமவாசிகள் திடுக்கிட்டனர். அவர்கள் அந்த அச்சகத்தாருக்குத் தக்க விதத்தில் பாடம் புகட்ட வேண்டுமென்று குருதேவரிடம் கூறினர். அதைக்கேட்ட குருதேவர், 'எதற்காக இவ்வளவு பதறுகிறீர்கள்? அதிகமாகப் பணத்தைப் பெற்றவர்கள் அவர்களது உருவில் விளங்கும் நீங்களே என்று எண்ணுங்கள். அமைதிக்கும் ஆனந்தத்துக்கும் அடிப்படைக் காரணம் இதுவே' என்று சொல்லி அந்த விஷயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்.

சமயம் நேரிட்ட பொழுது சுவாமிஜி எதிர்த்துப் போராடவும் தயங்கியதில்லை. ஒரு முறை ஒரு ஆசிரமவாசி ஆசிரமப் பணத்தைக் கையாடல் செய்துவிட்டு திடீரென்று காணுமல் போய் விட்டார். அந்த நபர் மீது கோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்வதா வேண்டாமா என்று ஆசிரமத்தார் தயங்கி நின்ற சமயம் குருதேவர், 'எதற்காக இந்தத் தயக்கம்? எது முறையோ அதைச் செய்யுங்கள். கோர்ட்டுக்குப் போவதற்கு நான் அஞ்சவில்லை. மதிப்பு, அவமதிப்பு இரண்டையும் நாம் சமமாக நோக்க வேண்டும்' என்று சொல்லி அவர்களது கடமையை அவர்களுக்கு நினைவூட்டினுர். தவறு செய்தவர் இவர் ஒருவர் மட்டுமல்ல. அவரைப் போன்று எத்தனையோ பேர் தவறிழைத்தபொழுது குருதேவர் பெருந்தன்மையுடன். 'தவறு யார்தான் செய்யவில்லை. தவறுகளே செய்யாது பெரியவர்கள் ஆனது எவராவது உண்டா? படிப்படியாக அவர்களே திருத்திவிடுவார்கள்!' என்று சொல்லி பெரும்பாலும் மன்னித்துவிடுவார். தவறு பெரியதாயிருப்பின் கடைசி ஆயுதமாக வேறு வழியின்றி மிகுந்த சினம் கொண்டவர் போல வெளியில் காட்டிக்கொண்டு ஒரு சிலரை ஆசிரமத்தை விட்டு அவர் வெளியேற்றவும் தயங்கியதில்லை.

பாபிகளின் புகலிடம்

தீய குணம் உள்ளவர்களைத் திருத்தி அமைப்பதில ஆரம்பத்திலிருந்தே சுவாமிஜி தனிக் கவனம் செலுத்தினுர். ஆசிரமத்திலிருந்த ஒரு இளைஞன் ஒரு ஆசிரமச் சொத்தை எடுத்து விற்றுவிட்டான். அவன் பொதுவாகவே அடங்காத சுபாவம் உடையவன். சுவாமிஜி அவனை வெளியே அனுப்பாது, 'நான் இத்தகையவனுக்குத் தொண்டு செய்து அவனைக் காலப் போக்கில் திருத்தி அமைக்க வேண்டும்,' என்று சொல்லி ஆசிரமத்தில் தொடர்ந்து தங்க அனுமதி கொடுத்தார். சென்னையிலுள்ள ஒரு பக்தருக்கு அவர் வெகு நாட்களுக்கு முன்னுல் எழுதிய ஒரு கடிதத்தில், 'என்னை

நிந்தித்து, அவதூறு பேசி, வைது, தூற்றுபவர்களையே என்னைச் சுற்றிலும் இருக்க நான் விரும்புகிறேன். அவர்களுக்குத் தொண்டு செய்யவும், பயிற்சி அளிக்கவும், அவர்களை மாற்றி அமைத்து மேலோர்களாக்கவும் நான் விரும்புகிறேன்,'' என்று குறிப்பிடுகிறார்.

'குண்டர்களைப் பற்றிய என் கருத்து' என்ற தலைப்பைக் கொண்ட ஒரு பாடலில் அவர், 'நல்லவர்களிடம் ஏற்கனவே நல்ல குணங்கள் இருக்கின்றன. குண்டர்களைத்தான் திருத்தி நான் நல்லவர்களாக ஆக்க வேண்டும். அதுவே எனது சிறப்பான வேலையாகும்', என்று எழுதுகிறார்.

'பாபத்தை வெறுங்கள், பாபியை அல்ல' என்று குருதேவர் அடிக்கடி குறிப்பிடுவார், 'ஒவ்வொருவரிடத்தும் பிறர் அறியாத சில ரகசியமான பாபங்கள் உள்ளன' என்பதை உணர்ந்தவர் அவர். பல பாபிகளைத் தெரிந்தே அவர் தமது ஆசிரமத்தில் இருக்க அனுமதித்தார். அவர்களுள் பலரை மகான்களாக மாற்றியும் அமைத்தார். தீயவர்களை ஆசிரமத்தில் அனுமதிக்கக் கூடாது என்று சிலர் வாதாடிய பொழுது, அவர், ''நான் அவர்களை இங்கே அனுமதிக்காவிடில் அவர்கள் எங்கே போவார்கள்? உலகத்தவர் ஒதுக்கியதால்தானே, அந்த உலகம் லாயக்கில்லை என்று அவர்கள் மிகுந்த நம்பிக்கையுடன் இங்கே வந்திருக்கிறார்கள். இங்கே நானும் வெறுத்தொதுக்கினால் அவர்களுக்குப் புகலிடம் ஏது? ஆசிரமத்தில் அவர்கள் பாபம் செய்வதற்கான வாய்ப்புகள் குறைவு. நான் திரும்பவும் உலகத்துக்குள் அவர்களை அனுப்பினால் அவர்களால் உலகத்தவருக்கு மேலும் பல சொல்லொணாத் தீங்குகள் ஏற்படும்'' என்று சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்தினார்.

## எல்லோரும் நல்லவரே

'இன்றைய பாபி நாளைய மகாத்மா' — இது குருதேவரின் மற்றொரு முக்கியமான கருத்து. கயவர்களை நூதன

மான முறையில் போற்றி பாராட்டுவதன் மூலம் அவர்களை அவர் மகான்களாக மாற்றி அமைத்தார். கயவனைப் பலர் முன்னிலையில் மகான் என்று பாராட்டி தன்னைப் பற்றி அவனே நாணமடையச் செய்வார். படிப்படியாக அவன் கயமைக் குணத்தை விடுத்து நல்லவனாக மாறி அமைவான். அடிக்கடி சீறி விழும் ஒருவனைக் குருதேவர், 'உங்களைப் போல சாந்தமூர்த்தியைக் காண்பது அரிது' என்று மற்றவர் முன்னிலையில் பாராட்டுவார். அடுத்த முறை சீறி விழ அவன் வெட்கப்படுவான். சோம்பேறியை சுறுசுறுப்பானவன் என்று கூறி மறைமுகமாக அவனது குறையைச் சுட்டிக்காட்டுவார். இதுதான் சிவானந்தரது பிரத்தியேகமான முறையாகும். மனதின் அடித்தளத்தில் அவர் அனைவரையுமே பாராட்டினார், காரணம், அனைவரையும் — அனைத்தையுமே — அவர் இறை சொருபமாகக் கண்டு வணங்கினார். 'அனைத்திலும் ஆண்டவனைப் பார்,' என்பது அவரது முக்கியமான போதனை மட்டுமல்ல, அதன் அடிப்படையிலேயே வாழ்ந்து காட்டிய பெருமையும் அவரைச் சாரும்.

ஆசிரமத்தில் பல சீடர்கள் நேரம் கிடைத்தபோதெல்லாம் தங்கள் அறைகளிலேயே டைப் அடித்தல், மொழி பெயர்த்தல், புரூப் திருத்துதல், பாக்கெட் போடுதல், கடிதங்களுக்குப் பதில் எழுதுதல் போன்ற ஆசிரம வேலைகளைச் செய்வர். இது அவர்களது ஜபம், தியானம், பிராணுயாமம், ஸ்வாத்யாயம் போன்ற சாதனைக்கு அப்பாற்பட்ட நேரத்திலாகும். இவையெல்லாம் மிக அமைதியாக நடக்கும். ஆசிரமத்திற்குப் புதிதாகச் சென்று பார்க்கும் எவருக்கும் ஆசிரமத்திலே வேலை எதுவுமே நடக்காதது போன்றும், ஆசிரமவாசிகள் அனைவரும் உறங்கி நேரத்தை வீணுக்குவது போன்றும் தோன்றும்.

இத்தகைய எண்ணம் கொண்டிருந்தார் கார்காரே என்ற விக்ரம் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவர். அவர் ஆசிரமத்தில் சில நாட்கள் தங்கிச் செல்லும் நோக்கத்

துடன் வந்திருந்தார். இத்தகைய சோம்பேறி ஆசிரம வாசிகளால் உலகத்துக்கு என்ன நன்மை ஏற்படப்போகிறது என்று முடிவு கட்டிய அவர் தமது கருத்துக்களைத் தொகுத்து ஒரு நீண்ட கடிதமாக எழுதி குருதேவரிடம் நேரிலேயே கொடுத்தார். "சுவாமிஜி! நீங்கள் செய்யும் மக்கட் தொண்டை நான் பெரிதும் பாராட்டுகிறேன். உங்கள் புத்தகங்களைப் படித்துப் பயனடைந்தவன் நான். உங்கள் ஆசிரமத்தில் பயனுள்ள பல காரியங்கள் நடக்கின்றன. சத்சங்கம், பஜனை, கீர்த்தனம் எல்லாமே என் மனதிற்கு மிகவும் பிடித்திருக்கின்றன. ஆனாலும் எனக்கு ஒரு ஐயம். உங்கள் ஆசிரமத்திலுள்ள பலர் உருப்படியாக எதுவும் செய்வதாகத் தெரியவில்லை, இத்தகையவர்களால் சமுதாயத்திற்கு என்ன நன்மை? ஏதோ கொஞ்சம் சாதனை செய்வதன் மூலம் அவர்கள் தங்களுக்குக் கொஞ்சம் நன்மை செய்து கொள்ளலாமே ஒழிய பரந்த உலகிற்கு அவர்களால் என்ன நன்மை? என் மனத்தைக் குடையும் இந்த ஐயத்தைத் தயவு செய்து தீர்த்து அருளவும்". இது அவரது கடிதச் சுருக்கம். குரு தேவர் அதைப் பெற்றுக் கொண்டு பதில் ஏதும் சொல்லவில்லை. பேராசிரியர் மேலும் சில நாட்கள் ஆசிரமத்தில் தங்கினார். அவர் கடிதம் கொடுத்த நான்காவது நாள் அன்று ஆசிரமச் செயலாளர் மூலம் குருதேவர் ஒரு நீண்ட பதில் கடிதத்தை பேராசிரியருக்குக் கொடுத்தனுப்பினார்.

"வயலை உழும் உழவன், நோயாளியைக் கவனிக்கும் டாக்டர், கட்டடம் கட்டும் என்ஜினீயர், பாடம் புகட்டும் பேராசிரியர், சமையல் சமைக்கும் பெண்மணி, நாட்டுக்காகப் பாடுபடும் தியாக புருஷன், தெருவைச் சுத்தம் செய்யும் தோட்டி, காரை ஓட்டும் டிரைவர்—இப்படி இறைவனது படைப்பில் பல படித்தரத்தில் உள்ள அனைவருமே தங்களது கருமத்தைவிடாது கடமையைப் புறக்கணியாது இறைவனை உணர முடியும்.

நீங்கள் கேட்ட கேள்வி கேட்கப்பட வேண்டியதுதான். ஆசிரமவாசிகள் அனைவருமே ஏதாவது ஒரு விதத்தில் சமூகத்திற்குத் தொண்டு செய்து கொண்டிருக்கிறார்கள். ஆன்மீகப் பண்பாட்டைக் காப்பதற்காக அவர்கள் செய்யும் பணி மற்றத் துறைகளில் செய்யப்படும் பணிக்கு எந்த விதத்திலும் குறைந்தது அல்ல உண்மையில் அரசியலி லிருந்து முக்கியத்துவம் ஆன்மீகத்துக்கு மாற்றப்படுமே யானால் நமது நாடு வெகு விரைவில் சகல துறைகளிலும் முன்னேற்றமடையும், சமுதாயத்திற்குத் துறவியர் ஆற்றும் தொண்டு மற்றெல்லாரும் ஆற்றும் தொண்டினைக் காட்டிலும் அதிக மதிப்பும் பலனும் உடையதாகும்.

ஆசிரமத்தில் எவருமே சும்மா இருப்பதில்லை. தெய்வ நெறிக் கழகம் மனித சமுதாயத்திற்கு ஆற்றும் தொண்டில் ஒவ்வொருவரும் பங்கு கொள்கிறார்கள். தன்னலமற்ற தொண்டு என்பது ஆசிரமவாசிகளின் அன்றாட வாழ்வில் ஒரு முக்கிய அம்சமாகும்.எவரெவர் எந்தெந்த நிலையில் இருந்தாலும் அந்த நிலையில் இருந்து கொண்டே அவர் தனக்கும் சமூகத்துக்கும் இறைவனுக்கும் தொண்டு செய்ய லாம்.''

குருதேவர் பதிலைப் படித்த பேராசிரியர் தமது கருத்தை மாற்றிக் கொண்டார். ஒரு புறம் கார்காரேயைப் போன்ற வர்கள் துறவியர் கூட சமூக சேவையில் ஈடுபட வேண்டும் என்று வற்புறுத்த, மறுபுறம் சில சன்யாசிகள் துறவியர் எந்தவித வேலையுமே செய்யக்கூடாது, வெறும் தியானம் ஜபத்தில் மட்டுமே ஈடுபட வேண்டும் என்ற எண்ணம் கொண்டு விளங்கினர். குருதேவர் இந்த இரண்டுக்கும் இடையில் ஒரு அழகான பக்தி மார்க்கத்தை வலியுறுத்தி சம்பூர்ண யோகத்தை வலியுறுத்தினார்.

### மானவ சேவையே மாதவ சேவை

சிலர் ஆசிரமத்தின் பிரசார முறையைப் பற்றிக் குறை கூறியதுண்டு. அதற்குக் குருதேவர், பிரச்சாரத்தை சுய

நலத்துக்குப் பயன்படுத்துவது தான்தவறு. ஆன்மீக விஷயத்துக்கு அதைப் பயன்படுத்துவதில் தவறு எதுவும் கிடையாது. நான் இவ்வளவு பிரச்சாரம் பண்ணியதால்தான் லட்சக்கணக்கான பேர் எனது நூல்களால் பலனடைந்திருக்கிறார்கள். விளம்பரம் இன்றி ஐந்து பேருக்கு என்றால் விளம்பரத்துடன் ஐந்து லட்சம் பேருக்குத் தொண்டு செய்ய முடியும்,'' என்று விளக்கம் கொடுத்தார்.

சிவானந்தாசிரமம் முனிகீரேதி பகுதியில் குழந்தைகளின் நலனுக்காக ஒரு பிரைமரி பள்ளியை வெகு நாட்களாக நன்முறையே நடத்திவந்தது. இப்பொழுது அரசிடம் அது ஒப்படைக்கப்பட்டுவிட்டது. தினமும் இரவில் நடக்கும் சத்சங்கத்தில் சுற்று வட்டாரத்தில் உள்ள மக்கள் பங்கேற்றுப் பயனடைகின்றனர். உள்ளூர் இளைஞர்களுக்கு ஆசிரமத்தில் உள்ள அச்சகம் மருந்தகம் போன்றவை வேலை வாய்ப்பு அளிக்கின்றன. மருத்துவத் துறையில் ஆசிரமம் அப்பகுதி மக்களுக்கு மேலான உதவிகளைச் செய்கிறது. நவீன வசதிகளைக்கொண்ட ஆசிரம ஆஸ்பத்திரி மக்களுக்குச் செய்யும் தொண்டு குறிப்பிடத்தக்கதாகும். அந்த வட்டாரத்தில் கண் கோளாறுகள் மிக அதிகம். உரிய மருத்துவ உதவியின்றி அநேகர் கண் பார்வையையே இழந்ததுமுண்டு. குருதேவர் அதை மனதில் கொண்டு பிரபல கண் டாக்டரான சுவாமி ஹிருதயானந்த மாதாஜியின் அற்புதமான மேற்பார்வையில் உன்னதமான ஒரு கண் ஆஸ்பத்திரியையும் ஆசிரமத்தில் தொடங்கிப் பல்லாயிரக்கணக்கானோருக்கு கண் ஒளி தந்தார்.

தொழுநோயாளர்களுக்கு ஆசிரமம் செய்யும் மகத்தான உதவியையும் மறக்க முடியாது. ஆசிரமத் தொழு நோய் மருந்தகம் ஆசிரம வட்டாரத்தில் உள்ள நோயாளிகளுக்கு நன்முறையே உதவி செய்து வருகிறது.

இவை தவிர ஆங்காங்கே மருத்துவ முகாம்கள் நடத்தவும் குருதேவர் ஏற்பாடு செய்தார். கண் முகாம்கள், பல் முகாம்கள், பெண்கள் மற்றும் குழந்தைகள் மருத்துவ முகாம்கள் போன்ற பல்வேறு மருத்துவ முகாம்கள் ஆசிரமத்துக்கு அவ்வப்பொழுது விஜயம் செய்யும் பிரபலமான டாக்டர்களின் உதவியுடன் நடத்தப்பட்டன. அந்த சமயங்களில் ஆசிரமத்தில் உள்ள பல அறைகள் ஆஸ்பத்திரி வார்டுகளாகக் காட்சி தரும்.

மருத்துவ முகாம்கள் வெற்றிகரமாக நடத்தப்பட வேண்டுமானால் எப்படிப் பிரச்சாரம் செய்ய வேண்டும் என்பதை தன்னுடன் இருந்த ஒரு இளம் டாக்டரிடம் குருதேவர் மிக அழகாக இதேச விளக்குகிறார்;

'' அதிக மக்கள் மருத்துவ முகாம்களுக்கு ஏன் வருவதில்லை என்று நான் சிந்தித்துப் பார்த்தேன். பறைசாற்றுவது, நோட்டீஸ் விநியோகிப்பதைத் தவிர தீவிரமான பிரச்சாரமும் செய்ய வேண்டும். நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்றால் ரிஷிகேசத்துக்குச் சென்று ஜன நெருக்கம் மிகுந்த ஒரு சந்திப்பில் நின்று கொண்டு கண் பாதுகாப்பு பற்றியும் கண் பார்வையைப் பெறும் விதம் பற்றியும் ஒரு சொற்பொழிவாற்ற வேண்டும். அது மக்களை உங்கள்பால் ஈர்க்கும் விதத்தில் அமைய வேண்டும். மக்களின் நம்பிக்கைக்கு உரியவர்களாக நீங்கள் ஆகிவிட வேண்டும்.

இதில் நீங்கள் வெட்கப்படக்கூடாது. 'என்னிடம் வாருங்கள். உங்களது கண்பார்வையை நான் மீட்டுத் தருகிறேன். புதிய பார்வை உங்களுக்கு நிச்சயம் கிட்டும். நான் பத்துப் பேருக்கு காட்ராக்ட் ஆபரேஷன் செய்து குணப்படுத்தியிருக்கிறேன். யானையைப் பார்க்க முடியாதிருந்தவர்கள் இப்பொழுது ஊசிக்குள் நூலைக் கோர்க்கிறார்கள்'' என்று ஆணித்தரமாகச் சொல்லுங்கள். இதை வெறும் தற்புகழ்ச்சி என்று எண்ணாதீர்கள் ஆபரேஷன்

செய்வதைப் பற்றிய சில சிலேடுகளைத் தயார் செய்து வைத்துக்கொள்ளுங்கள். எப்படி ஒரு நோயாளி ஆபரேஷனுக்கு முன் கம்பு ஊன்றித் தட்டுத் தடுமாறி ஆஸ்பத்திரிக்கு வந்தான், எப்படி நீங்கள் ஆபரேஷன் செய்தீர்கள். ஆபரேஷனுக்குப் பிறகு எவ்வளவு மகிழ்ச்சியுடன் அதே நோயாளி கம்பு எதுவும் இன்றி ராஜா போல நடந்து சென்றான் என்பதைப் போன்ற காட்சிகளை சிலேடு போட்டுக் காட்டுங்கள். பாமர மக்களுக்கு இதைப் பார்த்ததும் ஒரு நம்பிக்கை ஏற்படும்.

இப்படியெல்லாம் செய்தால் வெறும் தற்புகழ்ச்சி என்று பிறர் உங்களைப் பற்றி ஏதாவது சொல்வார்களே என அஞ்சவேண்டாம். பிறர் உங்களைப்பற்றி எது சொன்னாலும் அதைக் காதிலே போட்டுக்கொள்ளாதீர்கள். மக்கட் தொண்டு செய்ய விரும்புபவர்கள் பிறரது புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் பொருட்படுத்தமாட்டார்கள். தொண்டரின் குறிக்கோள் தொண்டு செய்வது ஒன்றே, புதிது புதிதாக தொண்டு செய்யும் விதங்களைக் கண்டுபிடியுங்கள். இது பலாத்காரமான நிஷ்காமகர்மயோகமாகும். இதுவே எனது முறையாகும்''

தனது ஊரில ஒரு ஆசிரமம் துவங்கவேண்டும் என்று விருப்பம் தெரிவித்த ஒரு பக்தருக்குக் குருதேவர் கீழ்க் கண்டவாறு அறிவுரை கூறினர்,

''செயலின் அடிப்படை ஆன்மீகமாயிருக்க வேண்டும். அனைத்துச் செயல்களும் ஆன்ம வளர்ச்சிக்கு உறுதுணையாயமைய வேண்டும். வெறும் சமூகசேவை மட்டும் போதாது. சமூக ஸ்தாபனங்கள் ஏராளம் உள்ளன. ஆன்மீகம் இன்றி அவற்றால் உருப்படியான காரியம் எதையும் செய்ய முடியாது. அவை வெறும் இயந்திரமயமான தொழிற்சாலைகளுக்கு நிகரே. எங்கும் இறைவன் நாமம் ஒலிக்க வேண்டும். அந்தச் சூழலிலே அன்பு,அறம், பண்பு, பரிவு,

தூய்மை தொண்டு முதலானவை கமழவேண்டும். பூஜை, வழிபாடு, அகண்ட கீர்த்தனம், கீதை, ராமாயணச் சொற்பொழிவுகள் நிகழ வேண்டும். இப்படியிருந்தால் எந்த ஒரு ஸ்தாபனமும் நாளடைவில் விரிவடைந்து, பிரம்மாண்டமானதொரு கேந்திரமாக நிச்சயம் மாறிவிடும்."

குருதேவர் ஆசிரமத்தை மேற்சொன்ன முறையில்தான் பல்லாண்டுகள் திறம்பட நடத்தினார். தம்மால் செய்ய முடியாததை அவர் ஒருபோதும் சொன்னதே கிடையாது. சொன்னதைச் செய்தார். செய்ததைச் சொன்னார். அது தான் குருதேவரின் தனிப்பெருமையாகும்.

## சிவானந்தருடன் ஒரு நாள்

ஒரு வேதாந்தி, ஒரு பக்தன் இருவரும் ஆசிரமத்தில் ஒரே அறையில் வசித்து வந்தனர். உரக்கக் கீர்த்தனம் செய்வதில் பக்தனுக்கு மிகவும் விருப்பம் உண்டு! அது அமைதியை விரும்பும் வேதாந்தி அன்பருக்கு இடையூறாயிருந்தது. குருதேவரிடம் வேதாந்தி இந்த விஷயத்தைப் பற்றிப் புகார் செய்தார்.

இரண்டு பேர் கூறியதையும் கேட்ட குருதேவர், அதிகமான சப்தம் பிறருக்குத் தொல்லையாகத்தான் இருக்கும். அடங்கிய குரலிலும் கீர்த்தனம் செய்யலாம்' என்றார். அதை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை அவரே செய்து காண்பித்து விட்டு பக்தரிடம், "இது உமது நண்பரைப் பாதிக்காது. உரக்கக் கீர்த்தனம் செய்ய வேண்டுமென்றால், கோவிலுக்குப் பின்புறத்திலோ அல்லது ஏதாவது தனியிடத்திலோ செய்யலாம்", என்றார்.

வேதாந்தியை நோக்கி, "மௌனத்தையும் தனிமையையும் நீங்கள் விரும்பினால் தத்தாத்ரேயர் கோவிலில் சில மணி நேரம் இருங்கள். உண்மையான நாட்டம் ஒருவரிடம் இருக்குமானால் கீர்த்தனம் மற்றும் தியானம் பயில தனியிடம் கிட்டும். சூழ்நிலையைப்பற்றி எவரும் குறை கூறக்கூடாது. உள் உலகத்தை நீங்களே சிருஷ்டியுங்கள். அதில் அமைதியுடனிருங்கள்" என்று குருதேவர் அறிவுரை கூறினார்.

# 8

## குருதேவர் செய்த ஞான யஜ்ஞம்

'ஆன்மீக அறிவைப் பரப்புதல்' (Dissemination of spiritual knowledge) - இதுதான் குருதேவர் ஸ்தாபித்த தெய்வநெறிக் கழகத்தின் இலட்சியமாகும். கொடுத்தல் என்பது சுவாமி சிவானந்தரிடம் இயற்கையிலேயே ஊறிய ஒரு குணமாகும். பத்தமடையில் குழந்தையாயிருக்கையில் தாய் தனக்குத் தின்னக் கொடுத்ததை மற்றப் பையன்களுக்குக் கொடுத்து விடுவார். பள்ளியிலும் கல்லூரியிலும் தமது சக மாணவர்களுக்கு பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார். மருத்துவக் கல்லூரியில் படிக்கையில் 'அம்புரோஷியா' பத்திரிகையின் மூலம் மக்களுக்கு மருத்துவ அறிவைக் கொடுத்தார். மலேயாவில் நோயாளிகளுக்கு மருத்துவ உதவியைக் கொடுத்தார். பொருள் வேண்டியவர்களுக்குப் பொருளை வாரிக் கொடுத்தார். இவ்விதம் தன்னிடம் இருந்த அனைத்தையும் பிறருக்குக் கொடுப்பதில் மகிழ்ச்சி அடைந்தார். இந்தக் கொடுத்தலில் இன்பம்காணும் தன்மையானது துறவி ஆன பின்பு அவரிடம் பன்மடங்கு அதிகரித்தது.

### தானத்தில் சிறந்தது ஞானதானம்

ஆன்மீகப் பயிற்சிகளாலும் கடும் தவத்தாலும் தியானத்தாலும் அவருக்குள்ளிருந்த ஆன்ம ஞானம் பீறிட்டெழுந்த

பொழுது, அந்த ஞானத்தை அவர் அவ்வப்பொழுது எழுதித் தொகுத்து வைத்தார். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்', என்ற பரந்த மனப்பான்மையில் தான் பெற்ற ஞானத்தை உலகோருக்கு வாரி வாரிக் கொடுத்தார். உலகெங்கும் பிரசித்தமான குருதேவரின் 'இருபது முக்கிய ஆன்மீக போதனைகள்', 'நாற்பது நல்லுரைகள்', 'சாதன தத்துவம்' போன்ற வெளியீடுகள் இந்த விதத்தில் உருவானவையேயாகும்.

சுவாமிஜியை சுவர்க்காசிரமத்தில் சந்தித்த யாத்ரிகர்கள் தங்கள் தங்கள் ஊர் திரும்பியதும் அவருடன் தொடர்பு கொண்டனர். அவரது வெளியீடுகளைப் படித்தவர்கள் மேலும் விளக்கங்கள் வேண்டி அவருக்குக் கடிதங்கள் எழுதலாயினர் குருதேவரும் தமக்கு வந்த கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதி விடுவார். 'உடனடி பதில்' என்பது குருதேவரிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பல அம்சங்களுள் ஒன்ருகும்.

மற்ற தானங்களைக் காட்டிலும் ஞான தானம் மிகச் சிறப்பு வாய்ந்தது ஆகும். இதைப் பற்றிக் குருதேவர், "பசித்தவருக்கு உணவு கொடுத்தால் சிறிது நேரத்துக்குள் அவர்களுக்கு மீண்டும் பசி எடுக்க ஆரம்பிக்கும். உடையற்றவருக்கு உடை கொடுத்தால் விரைவில் அவர்களுக்குப் பழைய நிலை ஏற்பட்டு விடும். பணம் அற்ருேருக்குப் பணம் கொடுத்தால் அது செலவழிந்ததும் மீண்டும் பணத்துக்கான தேவை ஏற்படும். ஆனல் ஞானத்தை எல்லோருக்கும் கொடுங்கள். யார் யாருக்கு எதெது வேண்டுமோ அந்தனைத்தையும் நீங்கள் அவர்களுக்குக் கொடுத்தவர்கள் ஆவீர்கள்", என்று கூறியிருக்கிருர். இதனுல் தான் பெறற்கரிய ஞானத்தை அவர் அள்ளி அள்ளி அனைவருக்கும் கொடுத்தார்.

ஞானத்தில் சிறந்தது ஆன்ம ஞானம்தானே! தமது ஆன்மீக அனுபவங்களை சுவாமி சிவானந்தர் உரை

பாடல்கள், சொற்பொழிவுகள், கடிதங்கள், கட்டுரைகள் மற்றும் புத்தகங்கள் மூலம் எங்கும் பரப்பினார். இதில் பேச்சு மேடையை விட அவர் அச்சகத்தை அதிகமாகப் பயன் படுத்தினார். கேட்டது விரைவில் மறந்து போகும். ஆனால் அச்சிட்ட விஷயம் என்றும் இருக்குமல்லவா?

சுவர்க்காசிரமத்தில் சுவாமிஜி இருந்த சமயத்தில் மீரட்டிலிருந்து வெளியான சுதர்சன், சங்கீர்த்தன், ஸ்வதர்மம் போன்ற பத்திரிகைகளுக்கு கட்டுரைகளை அனுப்பி வெளியிட்டு வந்தார். கோரக்பூரில் உள்ள கீதா பிரஸ் வெளியீடுகளான கல்யாண் மற்றும் கல்யாண கல்பதருவிலும் அவரது கட்டுரைகள் வெளியாயின. அவை தவிர எண்ணற்ற ஏனைய பலவற்றுக்கும் அவர் தம் கட்டுரைகளை அனுப்பி வந்தார்.

ஒரு பத்திரிகை ஆசிரியர் ஒரு கட்டுரையைக் கேட்டால், சுவாமிஜி நான்கு ஐந்து கட்டுரைகளை அனுப்பி விடுவார். ''அவை வெளியிடப்படாவிடினும் கூட ஆசிரியர் குழுவில் உள்ள சிலராவது அதைப் படிப்பார்களல்லவா? ஒருவர் படித்தால்கூட எனக்குத் திருப்தியே. ஆசிரியர்கள் விரும்பினால் அவற்றில் ஏதாவது ஒன்றை வெளியிடுவர், அந்த அளவுக்குப் பொது மக்களுக்கு நன்மை உண்டா கட்டும்', என்று தம் செயலுக்கு அவர் விளக்கம் கூறுவார்.

அவர்களும் திருந்தட்டுமே!

சுவாமிஜியின் கட்டுரைகள் வெளியான சில பத்திரிகை களில் சில ஆபாச விஷயங்களும் இருந்ததைக் குறிப்பிட்டு சிலர், 'தரம் குறைந்த விளம்பரங்களுடன் கூடிய பத்திரிகை களுக்கு சுவாமிஜி எதற்காக தம் கட்டுரைகளை அனுப்பு கிறார்?,' என்று கண்டனம் எழுப்பினர். அதற்கு சுவாமிஜி ''இந்த மாதிரிப் பத்திரிகைகளுக்குத்தான் நான் முதலில் என் கட்டுரைகளை அனுப்புவேன். புலன் வழி விஷயங்களைப்

படித்து மாசுற்ற மனங்கள் இத்தகைய ஆன்மீக விஷயங்களைப் படித்து சுத்தமடையும். ஒரே தராசில் ஆன்மீக விஷயத்தையும் காமச் சுவையையும் எடை போட்டுப் பார்க்கும் வாசகர்கள் விரைவிலேயே ஆன்மீக விஷயத்தின் அருமை பெருமையை உணர்ந்து கொள்வார்கள். அவர்கள் நல்ல ஆன்மீகவாதிகளாக மாறிவிடுவார்கள். ஆன்மீக விஷயங்கள் வரும் பகுதிகளைத் தனியாகச் சேகரித்து அவர்கள் வைத்துக் கொள்ளுவார்கள். நேரம் கிடைக்கும் போதெல்லாம் அவற்றை மீண்டும் படிப்பார்கள். நாஸ்திகர்களையும் நம்பிக்கை அற்றவர்களையும்தான் நான் மாற்றி அமைக்க வேண்டும், மற்றவர்களிடம் ஏற்கனவே சமய நம்பிக்கை இருக்கிறது. அவர்களை மாற்றுவதில் அவ்வளவாகக் கஷ்டம் கிடையாது', என்று அழகாகப் பதில் சொல்லுவார்!

சென்னையிலிருந்து வெளியான My Magazine of India என்ற ஒரு பத்திரிகை வாசகர்களிடையே மிகவும் பிரபலமாயிருந்தது. காரணம் அதில் சினிமா விஷயங்களும் விளம்பரங்களும் அதிகம். இந்தியாவில் மட்டுமல்லாது, இலங்கை, பர்மா, மலேயா போன்ற நாடுகளிலும் அது பெருமளவில் விற்கப்பட்டது. இந்தப் பத்திரிகைக்கு சுவாமிஜி தமது கட்டுரைகளை அனுப்பி வந்தார். 1931 லிருந்து அதில் குருதேவரின் படைப்புகள் வெளிவரத் தொடங்கியது முதல் ஆயிரக்கணக்கில் அன்பர்கள் குருதேவரைப் பற்றி அறிந்து அவரிடம் தொடர்பு கொள்ளலாயினர்.

மனம் திறந்து தங்கள் குறைகளையும் குற்றங்களையும், தொல்லைகளையும் துன்பங்களையும் அன்பர்கள் குருதேவர் முன் சமர்ப்பித்தனர். குருதேவரும் உடனுக்குடன் அவர்களுக்கு உதவியை நல்கினார். தனது பரிதாப நிலையைப் பற்றி எழுதிய ஒரு பக்தருக்குக் குருதேவர் ஆறுதல் சொல்லி கடைசியில், "ஒளி மயமான எதிர்காலம் உங்களுக்குக் காத்திருக்கிறது. கவலை வேண்டாம். இங்கே வாருங்கள்,

என்னுடன் தங்குங்கள், உங்களுக்கு என்னாலான உதவியும் தொண்டும் செய்து நான் உங்களை ஒரு பெரிய யோகியாக ஆக்கி விடுகிறேன்', என்று பதில் எழுதினார். 'குருதேவரின் அன்பான வரவேற்பை நான் வாழ்நாள் முழுவதும் மறக்க வேயில்லை'', என்று கூறுகிறார் அந்த நண்பர். அனைவரையும் மனம் திறந்து வரவேற்று உபசரிப்பதில் குருதேவருக்கு இணை அவர்தான்.

## அவரது கடிதங்கள் செய்த அற்புதம்

சுவாமிஜியின் கடிதங்கள் எளிமையாகவும் சுருக்கமாகவும் படிப்பவர் மனதில் பதியும்படியாகவும் இருக்கும். சுவாமிஜியின் முதல் சந்திப்பே காய்ந்த நிலத்தில் குளிர்ந்த நீர் விழுந்ததைப் போல குளிர்ச்சியாக இருக்கும் என்பது சொந்த அனுபவமாகும். அவரது ஒவ்வொரு கடிதமும் ஒரு ஆன்மீகத் தூண்டுகோலாக இருக்கும், 'அன்புக்குரிய அமர ஆத்மனே', 'ஆசீர்வதிக்கப்பட்ட அழியாத ஆத்மனே', 'வணக்கத்துக்குரிய ஆத்மனே,' 'புகழ்மிக்க அமர ஆன்மாவே'— என்று இத்தகைய சொற்றொடர்களாலேயே அவர் பக்தர்களை அழைப்பார், 'நீங்கள் அழியும் இந்த உடல் அல்ல, அழியாத அமர ஆத்மன்' என்று கடிதத்தில் எடுத்த எடுப்பிலேயே அவர் பக்தருக்கு நினைவுபடுத்துவார். கடிதத்தின் முடிவில் 'உங்கள் சொந்த ஆத்மன், சிவானந்தா' என்று குறிப்பிடுவார். 'நீங்களும் நானும் ஒன்றுதான், வேறல்ல, உங்களை பரிபூரணமாக என்னிடம் ஒப்படையுங்கள்' என்பது அதன் பொருள்.

எந்தக் கடிதத்துக்கும் குருதேவர் பதில் எழுதாமலிருந்தது கிடையாது. இந்த விதத்தில் உலகெங்கிலுமுள்ள ஒவ்வொரு சீடரிடத்திலும் அவரது கடிதங்கள் கட்டுக் கட்டாகக் குவிந்தன. சிலரிடம் ஆயிரக்கணக்கில் அவை குவிந்து கிடக்கும். தங்கள் வாழ்க்கையில் எழுந்த சிக்கல்களைத் தீர்க்கும் விதத்தில்உரிய சமயத்தில் அவ்வப்பொழுது குருதேவ

ரிடமிருந்து பதில்கள் வந்து உதவின என்று பலரும் பெருமையாகக் குறிப்பிடுவர்.

'சுவாமி சிவானந்தரிடமிருந்து கடிதம் வந்த நாளெல்லாம் நல்ல நாளே', 'குருதேவரிடமிருந்து கடிதம் பெறும் போதெல்லாம் என் மனம் மற்ருெரு உயர் உலகில் இருப்பது போல நான் உணர்வேன்', 'சுவாமிஜியின் ஒவ்வொரு கடிதமும் எனக்கு மென்மேலும் ஆன்மீக சக்தியை அளிக்கின்றது.' — இப்படி பலரும்பலவிதமாக உணர்ந்தனர். தினந்தோறும் தமது எண்ணற்ற பக்தர்களுக்கு அனுப்பப்படும் கடிதங்கள், பாக்கெட்டுகளை குருதேவர் தாமே முகவரியைச் சரிபார்க்கும் சமயத்தில் அந்த பக்தர்களுடன் மானஸீகமாகத் தொடர்பு கொண்டு தமது அருள் சக்தியை அனுப்பிவந்தார் என்று கூடச் சொல்லலாம்.

'My Magazine' பத்திரிகையை நடத்திய அன்பர் பி.கே. விநாயகம் சுவாமிஜிக்கு ஒரு டைப்ரைட்டரும், நகல் எடுக்கும் இயந்திரமும் பரிசாக அளித்தார். அதில்தான் 'ஆரண்ய சம்பாஷணைகளை' குருதேவர் நகல் எடுத்து அனுப்பினுர். அவற்றைத் தம்மிடம் வருவோர்க்கெல்லாம் இலவசமாகக் குருதேவர் விநியோகித்தார்.

குருதேவருக்கு கடிதம் எழுதிய பக்தர்கள் சிறு சிறு காணிக்கைகளையும் ஆசிரமத்துக்கு அனுப்பி வந்தனர். குருதேவரும் உடனுக்குடன் அவற்றின் உதவியுடன் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு வந்தார். தமது அகில இந்திய யாத்திரையின் போது லட்சக்கணக்கில் அவர் ஆன்மீக வெளியீடுகளை இலவசமாக பக்தர்களுக்கு விநியோகித்தார். ஆசிரமத்தில் 'இலவச வெளியீட்டுத் துறை' என்ற ஒரு தனிப் பிரிவே செயல்பட ஆரம்பித்தது. 1940ல் ஆரம்பிக்கப் பட்ட இந்தப் பிரிவு அந்த நாளில் தபால் செலவுக்காக ரூ. இரண்டு அனுப்புபவர்களுக்கு வருடம் முழுவதும் ஆசிரம

இலவச வெளியீடுகளை அனுப்பி வந்தது. இந்த அடிப்படையில்தான் தெய்வ நெறிக் கழகத்தின் மாத வெளியீடான The Divine Life என்ற பத்திரிகை 1938ல் தோன்றியது. அந்தப் பத்திரிகையின் முதல் இதழுக்கு அளித்த வாழ்த்துச் செய்தியில்,

"இன்று உலகில் ஒரு சில ஆன்மீகப் பத்திரிகைகளே உள்ளன. பல உயர்தரமான பத்திரிகைகள் இன்று வெளிவரவேண்டும். அப்பொழுதுதான் எங்கும் ஆன்மீகக் கருத்துக்களைப் பரப்ப முடியும். மக்கள் நல்ல கருத்துக்களுக்காகவும், மகாத்மாக்களின் சத்சங்கத்துக்காகவும் காத்து நிற்கின்றனர். பணம், பதவிக்குப் பின்னால் ஓடி ஓடி இவ்வுலகம் களைத்து விட்டது. எங்கும் எதிலும் மக்கள் அமைதியைக் காணாது திகைக்கின்றனர். அவர்கள் மகாத்மாக்களை நாடி ஓடி வருகின்றனர். பல மேனாட்டவர்கள் குருமார்களை நாடித் தேடி பாரதத்துக்கு வந்த வண்ணமிருக்கின்றனர். முனிவர், ரிஷிகள், மகான்கள் அனைவருடையவும் ஆசீர்வாதம் உங்கள் மீது மலர்வதாக", என்று ஆன்மீகப் பத்திரிகைகளின் முக்கியத்துவம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

நஷ்டமடைந்தாலும் பரவாயில்லை

தம்மைத் தரிசிக்க வந்த அனைவருக்கும் குருதேவர் ஆசிரமத்தின் மாத இதழை இலவசமாகக் கொடுத்து வந்த தன் விளைவாக அது நஷ்டத்தில் இயங்கத் தலைப்பட்டது. அதைக் கண்ட பக்தர் ஒருவர் ஆசிரமத்தின் பொதுவான நிதிநிலைமை திருந்தும் வரை அந்தப் பத்திரிகையை நிறுத்தி வைத்தால் என்ன என்ற யோசனையைக் குருதேவரிடம் வெளியிட்டார். அதைக் கேட்ட குருதேவர்,

"எவ்வளவு நஷ்டமடைந்தாலும் ஆரம்பித்த ஒரு பத்திரிகையை நிறுத்த நான் விரும்பமாட்டேன். உண்மையில் மேலும் சிலவற்றை ஆரம்பிக்க நான் உத்தேசித்துள்ளேன்.

ஆரம்பத்தில் கொஞ்சம் நஷ்டம் வந்தாலும் அதைப் பொருட் படுத்தக் கூடாது. பொதுமக்களுக்கு நாம் எவ்வளவு அறிவை அளிக்கிறோம் என்பதுதான் முக்கியம். நமக்கு எப்பொழுது தேவையோ அப்பொழுது கடவுள் பணம் கொடுப்பார். நமது கடமை இடைவிடாது பணிபுரிவதே யாகும். இன்று நமக்கு மாதம் பதினாயிரம் ரூபாய் வருகிறது என்றால் அது இறைவனது அருளினாலேயாகும். இது பத்து வருடமாக நாம் செய்து வரும் தொண்டின் விளைவேயாகும். இப்பொழுது நாம் செய்யும் செயலின் பலன் இன்னும் பத்து வருடங்களுக்குப் பின்னர் தெரியும். இப்பொழுது பணம் இங்கு வந்து பொழிகிறது. பிற்காலத்தில் கடல் மடை போல தங்கம் இங்கே வந்து கொட்டும்'', என்றார்.

இன்று அவரது வாக்கு அப்படியே பலிக்கிறது. குரு தேவர் தாம் சொன்னதுபோலவே மேலும் ஐந்து பத்திரிகை களை ஆரம்பித்தார். 1949 ஜனவரியில் ஆரம்பிக்கப்பட்ட 'தெய்வீக வாழ்க்கை சந்தாதாரர் இணைப்பு' (The Divine Life Membership supplement) என்றும் 1951 ஜூலையில் ஆரம்பிக்கப்பட்ட 'யோக வேதாந்த' என்ற ஹிந்தி மாத இதழும் 1951 செப்டம்பரில் ஆரம்பமான தெய்வீக வாழ்க்கை ஆரணியப் பல்கலைக் கழக வாராந்தர இதழும் (Divine Life forest University Weekly) மற்றும் ஆரோக்கியமும் நீண்ட ஆயுளும் (Health and Long life) என்ற இதழும் 1951 ஜனவரியில் ஆரம்பிக்கபட்ட Branch Gazette என்பன இவற் றில் அடங்கும் இவற்றில் குருதேவர் மிகவும் விரும்பிப் போற் றியது 'Weekly' யே யாகும். 'வாராவாரம் மக்களுக்குப் புத்துணர்ச்சியூட்டுகிறது இது,' என்பார் குருதேவர்.

ஞான யஜ்ஞம் விரிவடையத் தொடங்கியதும் ஆசிரமத் துக்குச் சொந்தமாக ஒரு அச்சகம் தேவை என்பதை ஆசிரமத்தார் உணர்ந்தனர். ஒரு பக்தர் சில அச்சு இயந்

திரங்களை அன்பளிப்பாகக் கொடுத்தார். 1951 செப். 20ம் தேதி ஆசிரம அச்சகம் உருவானது. ஆனால் அது காலால் மிதித்து அடிக்க வேண்டிய டிரெடில் மிஷின் ஆனதால் குறைந்த அளவிலேயே பிரதிகளை அச்சடிக்க முடிந்தது. பின்னர் படிப்படியாக புதிய பல இயந்திரங்கள் வரத் தொடங்கின. மின்சாரத்தில் இயங்குபவையாக அச்சு இயந்திரங்கள் அமைக்கப்பட்ட பின்னர் மலை மலையாகப் புத்தகங்கள் அச்சகத்திலிருந்து வெளிவரலாயின. அச்சுக் கோர்க்கலேனோ இயந்திரங்கள், அச்சடிக்க, மடிக்க, வெட்ட, பைண்ட் செய்ய எல்லாம் தானியங்கிக் கருவிகள் என்று படிப்படியாக முன்னேற்றம் ஏற்பட்டது குருதேவர் இவற்றைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

சென்னை செய்த பாக்கியம்

சுவாமிஜி 1929ல் தமது முதல் புத்தகத்தை வெளியிட்டார். 'Practice of Yoga-Vol. I' என்ற அந்த நூல் சென்னையில் அச்சிடப்பட்டது. சுமார் 20 ஆண்டுகள் வெளியிடங்களிலுள்ள அச்சகங்களில் தான் குருதேவரின் நூல்கள் அச்சிடப்பட்டன. ஆச்சிரம அச்சகம் ஆரம்பிக்கப்பட்ட பின்னரும் கூட அதிக வேலையின் காரணமாக பல புத்தகங்கள் வெளி அச்சகங்களில் தான் தயாராயின.

சென்னையில் உள்ள கணேஷ் கம்பெனியார் தான் குருதேவரின் நூல்களை முதலில் அச்சிட்டவர்களாவர், Practice of Yoga Vol 1, Practice of Vedanta, A trip to Kailash ஆகிய மூன்று புத்தகங்களை அவர்கள் வெளியிட்டார்கள்.

அதையடுத்து பி. கே. விநாயகம் தமது 'ஹிமாலயன் யோகத் தொடர்' வரிசையில் குருதேவரின் சுமார் ஒரு டஜன் நூல்களை வெளியிட்டார். இவற்றில் குண்டலினி யோகம், யோக ஆசனங்கள், ராஜயோகம், பிராணயாமம்

பயிற்சி ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும். அமிருத சரஸைச் சேர்ந்த ஒரு நிறுவனத்தார் 'ஆன்ம போதத் தொடரில்' (Self-realisation series) குருதேவரின் மிகப் பிரபலமான Sure ways for Success in life and God-realisation என்ற புத்தகம் உட்பட சுமார் அரை டஜன் புத்தகங்களைப் பிரசுரித்தார்கள். கோரக்பூர் கீதா பிரஸ் நிறுவனத்தார் சுவாமிஜியின் 'Mind - Its mysteries and control' என்ற புஸ்தகத்தையும், லாகூரைச் சேர்ந்த பஞர்ஸீதாஸ் நிறுவனத்தார், Practical Lessons in Yoga என்ற நூலையும், 'Daily Herald' ஸ்தாபனத்தார் 'How to get Vairagya? என்ற புத்தகத்தையும் வெளியிட்டனர்.

சுவாமிஜியின் பல நூல்கள் பல இடங்களிலிருந்து வரத் தொடங்கவே தெய்வ நெறிக் கழகத்தின் டிரஸ்டிகள் குருதேவரின் வெளியீடுகள் அனைத்தையும் மையப்படுத்த விரும்பினர். இதன் விளைவாக Sivananda Publication League 1938ல் தோற்றுவிக்கப்பட்டது. குறைந்த விலையில் குருதேவரின் நூல்களை மக்களுக்கு அளிப்பது அதன் நோக்கம். இந்த ஸ்தாபனம் குறைந்த காலத் தில் நிறைய நூல்களை வெளியிட்டது. 1947-ல் செப்டம்பர் 8-ம் தேதியன்று குருதேவரின் வைர விழா மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அதையொட்டி உலகெங்கிலுமிருந்து நிறைய காணிக்கைகள் வந்து குவிந்தன. அதில் பெரும் பகுதியை நூல் வெளியீட்டிற்காகக் குருதேவர் ஒதுக்கினர். ஒருநாள் காலையில் கலிபோர்னி யாவைச் சேர்ந்த லிலியேன் ஸமாஷ் என்னும் பக்தர் சுவாமிஜியிடம் 40,000 ரூபாய்க்கான செக் ஒன்றைக் கொடுத் தார். அதைப் பெற்றுக்கொண்ட குருதேவர் மிக மகிழ்ச்சி யுடன், ''எனது கையெழுத்துப் பிரதிகள் அனைத்தையும் நீங்கள் காப்பாற்றிவிட்டீர்கள், நான் அவையனைத்தையும் அச்சிட்டு வெளியிடுவேன், ''என்று கூறினர். உடனே அலகாபாத், அம்பாலா, பெங்களூர், சென்னை போன்ற பல

இடங்களுக்கும் அவற்றை அனுப்பி அவர் அச்சிட ஏற்பாடு செய்தார்.

குருதேவரின் தெய்வநெறிச் செய்தியானது எங்கும் பரவிற்று. இதற்கிடையில் இந்தியா-பாகிஸ்தான் பிரிவினைப் பிரச்சினை பயங்கர வடிவில் தாண்டவ மாடியது. லாகூரிலும் கல்கத்தாவிலும் குருதேவரின் பல நூல்கள் அகப்பட்டுக் கொண்டன. குருதேவர் சிரித்துக்கொண்டே, 'பகவானுடைய சுதர்சனம் இருக்க நமக்கேன் பயம்', என்று குறிப்பிட்டார். அவர் கூறியதைப் போலவே வியக்கத்தக்க முறையில் அந்தப் புத்தகங்கள் அனைத்தும் கொஞ்சமும் சேதமின்றி ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தன. கல்கத்தாவைச் சேர்ந்த பக்தர் காசிராம் குப்தா குருதேவரின் 18 நூல்களைத் தாம் பிரசுரிக்க விரும்புவதாகத் தெரிவிக்கவே உடனே தமது மூத்தசீடர் ஒருவரைக் கல்கத்தாவுக்கு அனுப்பினார். சில மாதங்களுக்குள் வண்டி வண்டியாகப் புத்தகங்கள் ஆசிரமத்தில் வந்து குவியலாயின, குருதேவர் மேலும் மகிழ்ச்சியுடன் அவற்றை வாரிவாரி வழங்கலானார். அதைக் கேட்ட காசிராம் குப்தா மகிழ்வடைந்து, 'வாரி வழங்குவது குருதேவரின் திருப்பணி. அவர் கையில் தொடர்ந்து புத்தகங்கள் இருக்குமாறு செய்வது நம் கடமை,' என்றார்.

1929ல் குருதேவரின் முதல் புத்தகம் வெளிவந்ததிலிருந்து 1963ல் அவரது மகாசமாதிவரை 200க்கும் மேற்பட்ட நூல்களை அவர் எழுதி வெளியிட்டார். கீதை, உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், நாரத பக்தி சூத்திரம், பதஞ்சலி யோக சூத்திரம் ஆகியவற்றிற்கு விளக்கம், யோக-வேதாந்தம் பற்றி எண்ணற்ற நூல்கள், மருத்துவம் பற்றி பல நூல்கள், சமயம், தத்துவம் ஆகிய பிரிவுகளில் எண்ணற்ற நூல்கள் தொடர்ந்து வெளிவந்தன.

## எப்படி இவ்வளவு எழுதினார் ?

ஆசிரமத்தில் இவ்வளவு வேலைகளுக்கிடையில் அவருக்கு எப்படி நூல்கள் எழுத நேரம் கிடைத்தது என்று ஒரு பக்தர்

கேட்ட பொழுது, ''ஒவ்வொரு பகுதிக்கும் குறைந்தபட்சம் ஒரு மணி நேரம் என்று ஒதுக்க வேண்டும்; ஆறு மாதத்தில் பல பகுதிகளில் உங்களது முன்னேற்றத்தைக் கண்டு நீங்களே ஆச்சரியமடைவீர்கள். முதலில் உங்களது மனத்தில் ஒரு திட்டம் உருவாக வேண்டும். பின்னால் செயலில் நல்ல முன்னேற்றத்தைக் காண்பீர்கள்,'' என்றார் குருதேவர்.

டைப் செய்வதற்காகக் கொடுத்த கையெழுத்துப் பிரதி நோட்டுக்களை திருப்பிக் கொடுப்பதில் சில சமயங்களில் ஆசிரம அன்பர்கள் தாமதம் காட்டுவர். அதற்காக குருதேவர் அநேகம் நோட்டுப் புத்தகங்களைப் பயன்படுத்து வார், எப்பொழும் எழுதுவதற்குத் தயாராக சிலவற்றை அலுவலகத்திலும், சிலவற்றை எழுதும் அறையிலும் வைத் திருப்பார். எப்பொழுதும் தயாராகபல பேனாக்கள் ஆங்காங்கே தயாராய் வைக்கப்பட்டிருக்கும். அதுபோல்வே பேனா அவரது கண் கண்ணாடிகளும் இரண்டு எழுதும் அறையில், ஒன்று அலமாரரியில், ஒன்று அலுவலகத்தில் என்று பல இருக்கும். காரணம் அவற்றைத் தேடுவதில் நேரம் வீணாகக் கூடாது என்பது அவரது கருத்து. டார்ச் - விளக்குகளையும் ஒன்று படுக்கைக்கருகில், ஒன்று எழுதும் மேஜைக்குப் பக்கத் தில், ஒன்று அவரதுசாய்வு நாற்காலிக் கருகில் என்று பல வைத்திருப்பார். நடு இரவிலும் ஏதாவது நல்ல கருத்துக்கள் மனதில் உதித்தால் உடனே எழுந்திருந்து அவற்றைக் குறித்து வைப்பார்.

குருதேவர் நாற்காலி மேஜையைப் பொதுவாகப் பயன் பயன்படுத்தமாட்டார். அது அவருக்கு சௌகரியமாகத் தென்படவில்லை. புத்தகங்களையும் நோட்டுகளையும் வசதியாக விரித்துவைக்க முடியாது என்பதால், தரையிலேயே அமர்ந்து கொண்டு ஒரு பெரிய டெஸ்கைத்தான் பயன் படுத்துவார்.

சில சமயங்களில் குருதேவர் தாமே டைப் செய்வார், 'Sure Ways for Success in Life and God realisation'

(வாழ்வில் வெற்றிக்கும் ஆத்மானுபூதிக்குமான நிச்சயமான வழி முறைகள்) என்ற நூல் எந்த வித எழுத்துப் பிரதியுமின்றி குருதேவரால் நேரடியாகவே டைப் செய்யப்பட்டு முடிக்கப்பட்டது.

''எழுதாமல் என்னால் இருக்க முடியாது. பார்க்கும் சக்தி என்னிடம் இருக்கும் வரை நான் எழுதிக் கொண்டே இருப்பேன். நான் ஒரு வேளை குருடாய்ப் போனாலும் கூட, நான் சொல்லச் சொல்ல பிறர் எவரையாவது எழுத வைப்பேன். இவ்விதம் நல்லறிவைப் பரப்பும் எனது ஞானப் பிரச்சாரத்தை என் வாழ்நாள் இறுதி வரையிலும் நான் தொடர்வேன்'', என்று ஒரு முறை தமது சீடர் ஒருவரிடம் குருதேவர் சொன்னார்.

1950 பெப்ரவரியில் அவருடைய வலது முழங்கையில் தாங்க முடியாத வலி உண்டாயிற்று. குறைந்தபட்சம் இரண்டு நாட்களுக்காவது எழுதுவதைக் குறைத்துக் கொண்டால் நல்லது என்று டாக்டர்கள் அவரிடம் சொன்னார்கள். ஆனால் குருதேவர் கேட்பதாயில்லை. ''அது மரணத்துக்கு நிகர். இந்த வலி சரியாகிவிடும். எழுதுவதை என்னால் நிறுத்த முடியாது'', என்றார் அவர்.

எப்பொழுதெல்லாம் கருத்துக்கள் மனத்தில் தோன்றினவோ, அப்பொழுதெல்லாம் உடனுக்குடன் அவற்றை நோட்டுப் புத்தகங்களில் குறித்து விடுவார். கங்கைக் கரையில் அமர்ந்திருக்கையில் சில எண்ணங்கள் அவரது மனத்தினில் உதிக்கும். உடனே ஓடோடியும் சென்று அவற்றை எழுதிவைப்பார். சாய்வு நாற்காலியில் அமர்ந்து ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கையில் திடீரென்று மின்னலைப்போல ஒரு எண்ணம் உதிக்கும். அது உடனே குறித்து வைக்கப்படும். எப்பொழுதும் தன்னுடன் நோட்டுப் புத்தகத்தை அவர் எடுத்துச் செல்வார்: ஆசிரம பஜனை அறைக்குச் செல்கையிலும், படிகளில் ஏறும் போதும் எண்ணங்கள்

உதிக்கும். அதுபோல பஜனை அறையைச் சுற்றிலும் தேகப் பயிற்சிக்காக ஓடுகையில் எண்ணங்கள் எழும். அப்பொழு தெல்லாம் அவற்றை உடனுக்குடன் அருகிலுள்ள சீடரிடம் கூறி எழுதச் சொல்லுவார்.

இலக்கணப் பிழை அல்லது உயர்ந்த நடை அழகு பற்றி குருதேவர் அலட்டிக் கொள்ள மாட்டார். அவரது எழுத்துக்களில் உள்ள சில பிழைகள் சுட்டிக்காட்டப் படுகையில், குருதேவர், 'மொழியின் அழகுபற்றியோ அல்லது இலக்கண விதிகளைப் பற்றியோ நான் அவ் வளவு கவனம் செலுத்துவதில்லை. கருத்துக்கள்தான் மிகவும் முக்கியம். எனது எழுத்துக்களில் ஒரு தனி சக்தி இருக்கிறது. திருத்துதல், திருப்பி எழுதுதல், மொழிக்கு அழகு செய்தல் இவையெல்லாம் பண்டிதர்கள் மற்றும் இலக்கண அறிஞர்களின் வேலையாகும்', என்று சொல்லுவார். குறுகிய காலத்தில் நிறைய ஆன்மீகக் கருத் துக்களைப் பரப்புதலே அவரது ஒரே இல்ட்சியமாகும்.

மக்களுக்குத் தொண்டாற்றும் வகையில் குருதேவர் எழுதினரே தவிர தமது இலக்கண இலக்கிய அறிவை வெளிக்காட்டுவதற்காக அல்ல. "எனது நேரத்தைப் பெரும் பாலும் தியானத்திலேயே நான் கழித்தேன். பல்வகை யோக சாதனைகளில் ஈடுபட்டேன் எனது அனுபவங்கள் யாவும் சாதகர்களுக்கு நான் கூறும் அறிவுரைகளாக வெளி வந்துள்ளன. ஆன்மீக நாட்டம் கொண்ட சாதகர்களுக்கு உடனடியாக உதவும் வகையில் எனது எண்ணங்கள் மற்றும் அனுபவங்களை சீக்கிரமாக வெளியிட்டு விடுவேன்", என்று அவரே கூறுகின்றார். அவருடைய பேனாதான் அவரு டைய ஆயுதமாக விளங்கியது. அதை அவர் மிகவும் அன்புடன் உபயோகித்தார். அவர் யாரையும் தாக்கிய தில்லை. விண்வெளி யுகத்தின் விஞ்ஞானப் போக்கினை அலட்சியப்படுத்தாமல், பதஞ்ஜலி, பகவான் கிருஷ்ணர் போன்றோரது போதனைகள் இந்த விஞ்ஞான யுகத்துக்கும்

ஏவ்விதம் பொருந்தும் என்பதை அழகாக எடுத்துக் காட்டினார். ஆன்மீகம் மற்றும் சமஸ்கிருதத்தைப் புறக்கணித்து நிற்கும் தமது நாட்டு மக்களை அவர் கோபித்தது கிடையாது. இன்றைய இளைஞர்கள் ஆன்மீகப் பாதையிலிருந்து விலகியிருப்பதற்குக் காரணம் அவர்களுக்கு உண்மையான கல்வியை அளிக்காததேயாகும் என்பது அவரது கருத்தாகும்.

எனவே நமது வேத உபநிடங்களில் பொதிந்து கிடக்கும் விலைமதிப்பற்ற ரகசியங்களை பொக்கிஷங்களை அவர் அனைவரும் புரிந்துகொள்ளும் விதத்தில் எடுத்துரைத்தார். குருதேவர் அரசியல், மருத்துவம், சமயம், தத்துவம், கல்வி போன்ற எந்த விஷயத்தைப் பற்றி எழுதினாலும் ஆன்மீக அடிப்படையிலேயே அழகாக எடுத்துரைப்பது அவரது தனித் திறமையாகும். 'குருதேவரது நூல் இன்ன குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்தது என்று சொல்வது கடினம்', என்று குறிப்பிடுகிறார் அவரது பக்தர் ஒருவர். ஆன்ம ஞானம்தான் அவரது நூல்களுடைய மைய விஷயமாகும்.

தமது கருத்துக்களை வெளியிடுவதில் இலக்கியத்தின் பல பிரிவுகளையும் குருதேவர் பயன்படுத்தினார். கவிதை, நாடகம், உரை நடை, கடிதம், கட்டுரை, கதை, சொற்பொழிவு, கீர்த்தனம் போன்ற அனைத்தின் மூலமாகவும் தெய்வ நெறியை அவர் பரப்பினார். அவருடைய நூல்களைப்புரட்டினால் இந்த அனைத்தும் சேர்ந்து ஒளிர்வதைக் காணலாம்.

குருதேவரின் காந்த சக்தி

குருதேவரின் எழுத்து மிகவும் எளிமையும் இனிமையும் நிறைந்தது ஒரு சில வார்த்தைகளில் புரிதற்கு அரிய கருத்துக்களைத் தெளிவாகத் தெரிவிப்பதில் குருதேவருக்கு நிகர் எவரும் கிடையாது. நடைமுறை சாத்தியமானவற்றைத்தான் அவர் சொல்லுவார். "Serve. Love Give Purify. Meditate. Realize. Be good. Do Good. Be kind.

Be compassionate. Adapt. Adjust Accommodate. Bear insult. Bear injury. This is the highest Sadhana' - அவரது நூற்றுக்கணக்கான நூல்களின் சாரம் அவருடைய இந்த எளிமையான வார்த்தைகளில் அடங்கிவிடுகிறது.

''இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்? நாளை காலையில் எழுந்ததும் நான் செய்ய வேண்டியது என்ன? பெரிய சிக்கல்கள் என் தோள் மீது அமர்ந்து கொண்டிருக்கின்றன. இவற்றிலிருந்து விடுபட்டு அமைதியையும் ஆனந்தத்தையும் அடைவதற்கான ஒரு எளிய முறையைச் சொல்லுங்கள், சுவாமிஜி'' என்று கேட்கும் பக்தர்களுக்குப் பதில் சொல்லும் விதத்தில் குருதேவரின் போதனைகள் அமையும். குருதேவரின் துண்டுப் பிரசுரங்கள், அவருடைய ஏதாவது ஒரு நூலின் ஒரு சில பக்கங்கள்... இவை போன்றவற்றைப் படித்துவிட்டு அதன் மூலம் மன அமைதி பெற்று வாழ்வில் வியக்கத்தக்க மாற்றம் அடைந்து குருதேவரின் மிகச் சிறந்த பக்தர்களாக விளங்குபவர்கள் எத்தனையோபேர்.

குருதேவரின் பல அற்புதமான நூல்களில் ஒன்று ''Practice of Karma Yoga'' என்பதாகும். அதைப் படித்துப் பரவசமடைந்த ஒரு பக்தர், ''ராமாயணம் முழுவதையும் நான் கேட்டிருக்கிறேன், சங்கராச்சாரியாரின் பாஷ்யங்கள் மற்றும் மேலுட்டுத் தத்துவத்தையும் ஓரளவு படித்திருக்கிறேன். ஆனால் தன்னலமற்ற தொண்டின் தேவையையும் சிறப்பையும் பற்றி சிவானந்தர் கூறுவது போல வேறு எங்கும் கண்டேனில்லை'' என்று எழுதுகிறார்.

தியானத்தைப் பற்றி இன்று உலகிலுள்ள பல நூல்களில் ஒரு தனி இடத்தை குருதேவரின் 'Concentration and Meditation' என்ற நூல் வகிக்கிறது. உலகெங்கும் பிரபலமான ஒரு புத்தகம் இது. ''ஆன்மீகப் பயிற்சிகளால் எத்தகைய ஆற்றல்களும் விளைவுகளும் ஏற்படும் என்பது பற்றி எனக்குத் தெரிந்த வரையில் ஐரோப்பாவிலுள்ள எந்த ஒரு

நூலோ அல்லது ஜெர்மனியிலுள்ள எவருமோ சரியாக விளக்கம் தந்ததில்லை. ஆனால் என்னைப் போன்ற ஆரம்ப சாதகர்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றி இந்நூல் அப்படியே அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. அவை எனக்கு மிகவும் உதவிகரமாக இருந்தன. அதைப் படித்த பின் அந்தப் பயிற்சிகளை நானும் செய்யத்தொடங்கினேன்,'' என்று குருதேவரின் மேற்காணும் நூலைப் பற்றி ஒரு ஜெர்மானியப் பெண்மணி தனது பாராட்டுதலைத் தெரிவிக்கிறார்.

சிறு குழந்தைகள், இளைஞர்கள், அலுவலக உத்தியோகஸ்தர்கள், வீட்டுப்பெண்மணிகள், அரசியல்வாதிகள், வியாபாரிகள், டாக்டர்கள், தொழிலாளிகள், சன்யாசிகள் ஆகிய அனைவருக்கும் பொருந்தும்வகையில் அவரவருக் கேற்ப ஆன்மீகக் கருத்துக்களைச் சொல்லுவதுதான் குருதேவரை அனைவரும் ஒன்று போலப் பாராட்டுவதன் காரணமாகும்.

சுவாமிஜியின் எழுத்துக்களில் நேரிடை மனோபாவமும், நம்பிக்கையும் தொனிக்கும். எதிலும் பிரகாசமான, மகிழ்ச்சிகரமான பகுதியையே அவர் வலியுறுத்துவார். குருதேவரின் நூல்களைப் படிக்கையில் எப்பேர்ப்பட்ட துக்கத்தில் மூழ்கியவனுக்கும், ''ஒரு நல்ல எதிர்காலம் உண்டு'', என்ற ஒரு நம்பிக்கை நிச்சயம் பிறக்கும்.

ஒரு அன்பர். ஒரு பெரிய குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்புடையவர். ஒரு தனியார் நிறுவனத்தில் ஒரு குமாஸ்தாவாகப் பணியாற்றி அலுவலக நேரம் போக மீதி நேரத்தில் வேறு சில இடங்களிலும் வேலை செய்து சம்பாதித் துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய சிரமமான நிலையிருப்பவர். திடீரென்று நோய்வாய்ப்பட்டு படுக்கையில் விழுந்துவிட்டார். ஏதோ ஒரு சாதாரண வியாதி என்று முதலில் கருதிய டாக்டர்கள் அதுக்ஷயரோகம், குணப்படுத்த

முடியாத ஒருவகை என்று சொல்லாமல் சொன்னார்கள். குடும்பத்தாருக்கோ சொல்லொணாத் துயரம். அந்த அன்பருக்கோ இதன் காரணமாக உடல் வியாதியுடன் உள்ளத்தில் உளைச்சலும் அதிகரித்தது. இந்த சமயத்தில் அவருடைய நண்பர் ஒருவரின் கையில் குருதேவரின் 'Sure ways for success in life and God realisation' என்ற நூலின் ஒரு பிரதியை அவர் காண்கிறார். அதைக் கையில் வாங்கிப் பக்கங்களைத் திருப்புகிறார். எடுத்த எடுப்பிலேயே குருதேவர் தவம் செய்த காலத்தில் எடுத்த ஒரு ஜாஜ்வல்யமான போட்டோ அவரது கண்களில் படுகிறது. அவ்வளவுதான்! அவரையுமறியாமல் ஏதோ ஒரு காந்தசக்தி அந்தப்படத்திலிருந்து தனக்குள் பாய்ந்ததாக அவர் உணருகிறார். அதிலிருந்து அவரிடம் ஒருமாற்றம் ஏற்பட்டதாக உணர்கிறார். புத்தகத்தை மேலும் படிக்கிறார். குருதேவருடன் கடிதத் தொடர்பு கொள்கிறார். குருதேவரும் உடனே அவரது ஆரோக்கியத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் ஆசீர்வாதம் செய்து பிரஸாதம் அனுப்புகிறார். என்ன ஆச்சரியம்! ஒரு சில நாட்களுக்குள்ளேயே அவர் இழந்த ஆரோக்கியத்தை மீண்டும் பெறுகிறார். பின்னர் அவரைப் பரிசோதித்த பழைய டாக்டர்கள், "நாங்கள் முன்பு கண்ட நோயாளி நீங்கள் இல்லை" என்று அவரிடம் கூறுமளவுக்கு அவரைப் பிடித்திருந்த வியாதி எங்கோ ஓடி விட்டது.

குருதேவரிடம் அன்பரது பக்தி மேலும் அதிகரிக்கிறது. அவரது குடும்பமே குருதேவரின் தொண்டில் ஈடுபடுகிறது. பின்னர் அவரால் எண்ணற்ற அன்பர்கள் தெய்வநெறி இயக்கத்தில் ஈர்க்கப்படுகிறார்கள். இந்த அன்பர் யார் என்று தெரியுமா? மதுரை சிவானந்ததபோவனத்தின் ஸ்தாபகரும், தலைவருமான ஸ்ரீ சுவாமி விமலானந்தரே இந்த அன்பராவார். இவரைப்போல எண்ணற்ற அன்பர்களை மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்றி ஒளிமயமான புனர்வாழ்வு அளித்த பெருமை குருதேவரைச் சாரும்.

இன்று தென்னாப்பிரிக்காவிலே எத்தனையோ தெய்வ நெறிக்கழகக் கிளைகளை நிறுவி, பல சிவானந்த பள்ளிகளை ஏற்படுத்தி, லட்சக்கணக்கில் குருதேவரின் நூல்களை அச்சிட்டு அரிய முறையில் தெய்வநெறி இயக்கத்தைப் பரப்பி வரும் ஸ்ரீ சுவாமி ஸஹஜானந்தர், கனடாவில் மான்ட்ரீலைத் தலைமையகமாகக்கொண்டு பல இடங்களில் உள்ள சிவானந்த யோகாசிரமங்கள் மூலம் யோகத்தைப் பரப்பி வரும் ஸ்ரீ சுவாமி விஷ்ணுதேவானந்தர், பெங்களூரைச் சேர்ந்த ஸ்ரீ வி.எல். நாகராஜன், மாரிஷியஸைத் தலைமையகமாகக் கொண்டு உலகெங்கும் சுற்றுப்பயணம் செய்து குருதேவரின் போதனைகளைப் பரப்பிவந்த ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தர் போன்ற எண்ணற்றவர்கள் குருதேவரின் காந்த சக்தி மிக்க நூல்களால் ஈர்க்கப்பட்டவர்களே.

குருதேவரை ஆசிரமத்தில் எவர் வந்து தரிசித்தாலும் அவரை அன்புடன் வரவேற்று மருந்துகள், புத்தகங்களை அவருக்கு அளிக்க குருதேவர் தவறியதுகிடையாது. புத்தகங்களைப் பெறுபவருக்கு ஆங்கிலம் தெரியுமா தெரியாதா என்று கூட சுவாமிஜி எண்ணியது கிடையாது. 'இவற்றை யாராவது படித்துப் பயனடைவர்' என்பதுவே அவரது எண்ணமாகும். லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள புத்தகங்களை அவர் இலவசமாக வாரி வாரி வழங்கினார். புத்தகங்களை அனுப்பத் தபால் செலவிற்கு மட்டுமே ஆயிரக்கணக்கில் பணம் செலவழிந்தது. இப்படி உலகின் எல்லா மூலைகளுக்கும் நூல்களை அனுப்பியவர் குருதேவரைப் போல வேறு எவரும் கிடையாது. அதன் காரணமாக தமது ஜீவிய காலத்திலேயே உலகெங்கும் பிரபலமடைந்த ஆன்மீகத் தலைவரும் குருதேவரைப்போல வேறு எவரும் கிடையாது.

குருதேவரின் நூல்களைப் படித்து புகை பிடித்தல், மதுகுடித்தல், மாமிசம் உண்ணல் போன்ற பழக்கங்களை விட்டவர் அநேகர். ஜபம், கீர்த்தனையில் ஈடுபட்டு அமைதியை அடைந்தவர் அநேகர். எண்ணற்ற பல அற்புதங்களை அன்றுபோல் இன்றும் உலகெங்கும் அவரது நூல்கள் நிகழ்த்தி வருகின்றன. குருதேவரால் மனித குலம் பெற்றுவரும் நன்மை அளவிடற்கரியதாகும்.

---

## சிவானந்தருடன் ஒருநாள்

சத்சங்க பவனத்தை நோக்கிக் குருதேவர் சென்று கொண்டிருந்தார். வழியில் சுவாமி ஆத்மானந்தர் குருதேவருக்கு நமஸ்காரம் செய்தார். அவருடன் சிறிது பேசிக் கொண்டிருக்கையில்; 'ஒரு கைக் குட்டையைக் கையில் வைத்திருங்கள். பிறர் விட்டுச் சென்ற செருப்புக்கள் உங்கள் கண்ணில் பட்டால், உடனே உங்கள் கைக்குட்டையால் அவற்றைத் துடைத்துச் சுத்தப்படுத்துங்கள். ஆஸ்பத்திரிக்குச் சென்று நோயாளிகளின் கழிவுப் பாத்திரங்களைச் சுத்தம் செய்யுங்கள்: அது உங்கள் மனதைச் சுத்தப்படுத்தும். இது தான் 'Shoe Cleaning' மற்றும் 'Bed-pan Yoga' ஆகும். வெறும் வேதாந்தப் புத்தகங்களைப் படித்தால் மட்டும் போதாது", என்று கூறி நடைமுறைக்கு வராத வறட்டு அறிவு பயன் தராது என்பதை குருதேவர் வலியுறுத்தினார்.

---

# 9

## சீடர்களைப் பயிற்றுவித்த விதம்

குருதேவர் தமது சீடர்களுடன் குரு என்ற முறையில் அல்லாமல் பால் நினைந்து ஊட்டும் ஒரு தாயைப் போலப் பரிவுடன் நடந்துகொண்டார். தம்முடன் ஏதோ ஒரு மன ஸ்தாபனத்தை உருவாக்கிக் கொண்ட ஒரு சீடருக்கு அவர், "நான் உமது சேவகன், உமது நலத்தை நாடுபவன், நண்பன், சகோதரன். நீங்கள் என்னை விட்டாலும் என்னால் உம்மை விட முடியாது. என் இதயத்தில் எப்பொழுதும் நீங்கள் வசிக்கிறீர்கள் உங்களிடம் எனக்குள்ள அன்பு அலாதியானது", என்று எழுதினார். தமது சீடர்களின் ஆன்மீக மேம்பாட்டில் குருதேவர் காட்டிய அக்கறை அலாதியானது.

ஒரு சமயம் குருதேவருடைய ஒரு சீடர் ஆன்மீகத்திலிருந்து விலகி மடமடவென்று அதலபாதாளம் நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். எப்படியோ தீய குணங்களின் பிடியில் அவர் சிக்கிக் கொண்டு விட்டார். எந்த சமயத்திலும் அவர் நிலைதவறி உருண்டு விழலாம் என்ற நிலைமை உருவானது. அப்பொழுது குருதேவர் அவரைத் தம்மிடம் அழைத்து "ஜாக்கிரதை, போதும். நல்ல பாதையில் இனி மேலாவது சென்றால் தப்பிவிடலாம். நீர் இப்போது செல்லும்

பாதை மிகுந்த ஆபத்துக்கள் நிறைந்தது. கடந்த ஒரு வாரம் எனக்கு உங்களைப் பற்றிய கவலைதான். குறிப்பாக கடந்த 24மணி நேரமாக உம்மைத்தவிர எனக்கு வேறு எந்தச் சிந்தனையுமில்லை. உம்மிடம் எனக்குள்ள பரிவு அளவு கடந்தது'' என்று அன்புடன் எச்சரித்தார்.

### ஆன்மீகமும் அடிமை வாழ்வும்

இரண்டு ஆசிரமவாசிகள் தங்களுக்குள் ஒரு முறை சண்டையிட்டுக் கொண்டனர். அவர்களில் ஒருவர் ஆசிரமத்தை விட்டு நீங்கி ஏதாவது வேலையில் எங்காவது அமரலாம் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். உடனே குருதேவர் அவரைத் தம் முன் அழைத்தார்.

''ஓ ஜி! ஆசிரமத்தை விட்டுப் போகப் போகிறீர்களா? ஏதாவது ஒரு வேலையில் சேர விருப்பமா? இந்த அற்புதமான சூழ்நிலை உங்களுக்கு வேறு எங்கே கிடைக்கும்? இதெல்லாம் எதற்காக என்று சிந்தித்தீர்களா? கொஞ்சம் கடுஞ்சொல், அவ்வளவுதான், இல்லையா! உங்களுக்கு மதிப்பு வேண்டுமாயின் இனி மேல் தினமும் உமக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன். நீங்கள் விரும்பினால் மற்றவர்களையும் உங்களை நமஸ்காரம் செய்யச் சொல்லுகிறேன். ஏதோ ஒரு அற்பக் காரணத்துக்காக பெறற்கரிய ஆன்மீகப் பொக்கிஷத்தை நீங்கள் இழந்து விடக்கூடாது என்பதுதான் என் கவலை. இதைவிடப் பெரிய ஒரு தவறு இருக்கமுடியுமா? சாதகனுக்கு ஏது இகழ்ச்சியும் புகழ்ச்சியும்? ஏதோ சில வார்த்தைகள், சில ஒலி அலைகள். உடனே உங்களுக்கு இவ்வளவு கோபம், தாபம், படபடப்பு. அரிய தெய்வ நெறியை விட்டுவிட்டு அடிமை வேலைக்குப் போகுமளவுக்கு உங்களை அது தலை கீழாக்கிவிட்டது. இதுதான் விவேகமா, ஞானமா? உண்மையான சாதகன் புகழ்ச்சி, இகழ்ச்சிகளைப் பொருட்படுத்த மாட்டான். யாராவது உங்களைத் திட்டினால் அதனால் உங்களுக்கு என்ன நேரிட்டு விடுகிறது! அவன் உங்களைக்

கழுதை என்று திட்டினால் உடனே உங்களுக்கு நான்கு கால்களா முளைத்து விடுகின்றன? யாராவது நாய் என்று திட்டிவிட்டால், உங்களுக்கு உடனே வாலா முளைத்து விடுகிறது? இல்லையே, பின் ஏன் இந்த மாதிரி முட்டாள்தனமாக நடந்து கொள்ள வேண்டும்?''

குருதேவரின் வார்த்தைகளைக் கேட்ட அந்த சாதகனின் கண்கள் திறந்துகொண்டன. தமது அவசர முடிவை மாற்றிக்கொண்டு அவர் முன்னைவிடத்தீவிரமாக ஆசிரமத் தொண்டில் ஈடுபடலானார்.

வைதாரையும் வாழ்த்தினார்

ஒரு அப்பாவி சாதகர் ஆனந்த குடீரத்தில் ஆறு மாதம் தங்கினால் கடவுளைக் கண்டுவிடலாம் என்று எண்ணினார். ஆறு மாதங்கள் கழிந்தன. கடவுட் தரிசனம் கிட்டவில்லை. குழந்தைத்தனமான படபடப்புடன் நேரே அவர் குருதேவரிடம் சென்று, ''சுவாமிஜி! நான் இங்கே கடவுளைக் காண்பதற்காகவந்தேன். ஆனால் இன்று வரை காணமுடியவில்லை'', என்று அழாத குறையாகப் புகார் செய்தார். குருதேவர் புன்னகையுடன், 'அதற்கு ஏன் இவ்வளவு அவசரம்? அந்தப் பெருநிலைக்கு முதலில் நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். முடிவில் காணாது ஏமாறுவதைவிடக் காண்போம் என்ற நம்பிக்கையுடன் முயற்சி செய்வது எவ்வளவோ மேலானது. முயற்சியைக் கைவிடாதீர்' என்று சொல்லி அவரது மனக் கவலையைப் போக்கினார்.

சிலசமயங்களில் உணர்ச்சி வசப்பட்ட சிலர் சுவாமிஜியைக்குறை கூறி, ஆசிரமத்தை நிந்தித்து, அந்த இடத்தை விட்டுக் கோபத்துடன் கிளம்பிச் செல்லுவார்கள். குருதேவர் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வார். அவ்வாறு சென்றவர்கள் சில நாட்களுக்குள்ளே மாறிய மனத்துடன் திரும்பி

விடுவர். அவர்களை மலர்ந்த முகத்துடன் குருதேவர் வரவேற்பார். நடந்ததை அப்படியே அவர் மறந்துவிடுவார். குழந்தை அடித்தாலும் எப்படித் தாயானவள் அதை அன்புடன் அணைப்பாளோ, அதைப் போல சிஷ்யர்கள் தம்மை வைதாலும் அவர்களை அன்புடன் குருதேவர் அரவணைத்தார். எத்தனை தரம் அவரைவிட்டுப் போனாலும் அவர்கள்பால் அவருக்குள்ள அன்பு மாறாது, மறையாது, 'கண்டிப்பாலோ கடுமையான சட்ட திட்டங்களாலோ சாதாரண மனிதர்களை தெய்வீக நிலைக்கு உயர்த்திவிட முடியாது. அவர்களாகவே அனுபவித்து உணர வேண்டும்,'' என்பது குருதேவரது கொள்கையாகும்.

அன்பினால் ஆட்கொண்டார்

அதிகாலை நான்கு மணிக்கு பிரம்மமுகூர்த்தத்தில் ஆசனம், பிராணாயாமம், தியானம் செய்தல், ஏகாதசியன்று உபவாசம் இருத்தல், ஆன்மீக நாட் குறிப்பை வைத்திருத்தல், லிகித ஜபம் எழுதுதல், போன்ற பலவற்றைக் கடைப்பிடிக்குமாறு தம் சீடர்களுக்கு அறிவுரை கூறுவாரே தவிர, எவரையும் கட்டாயப்படுத்த மாட்டார். அன்பினால் வெல்ல வேண்டும் என்பதுதான் அவரது அடிப்படைக் கருத்து ஆகும்.

ஒரு சமயம் சனிக்கிழமை தோறும் உப்பில்லாமல் விரதம் இருக்க வேண்டும் என்பதை ஆசிரமத்தில் நடைமுறைக்குக் கொண்டுவர சுவாமிஜி விரும்பினார். அதைத் தெரிந்த சில ஆசிரமவாசிகள் முதல் நாள் மாலையிலேயே சமையலறையிலிருந்து உப்புப் பொட்டலங்களை வாங்கிச் செல்லத் தலைப்பட்டனர். அதை அறிந்த குருதேவர், 'இனிமேல் நான் உங்கள்மீது அது எவ்வளவு நல்லதாயினும் எந்த ஒரு போதனையையும் வற்புறுத்தமாட்டேன்', என்று சொல்லி அதை அத்துடன் விட்டுவிட்டார்.

சில சமயங்களில் குருதேவர் சீடர்களுக்கு எளிய சில தண்டனைகளையும் கொடுப்பதுண்டு. சாதனா வாரத்தின்

போது காலை வகுப்பிற்கு வரத் தவறிய ஒருவரை பகவான் கிருஷ்ணரது படத்தின்முன் தோப்புக்கரணம் போடச் செய்தார். மற்றும் சில வேளைகளில் ஒழுங்கை மீறிய பிறருக்காகத் தாமே பகவான் படத்தின் முன் தோப்புக்கரணம் போட்டதுண்டு.

ஒரு சமயம் ஒரு சாதகர் காலை வகுப்பிற்கு வரத் தவறிவிட்டார். அவரிடம் குருதேவர்; ''உடலில் எனக்கு இத்தனை தொல்லைகள் இருந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் நான் அதிகாலை மூன்று மணிக்கு எழுந்து விடுகிறேன். காலைக் கடன்களை முடித்து விட்டு மணி அடிப்பதற்காகக் காத்திருக்கிறேன், மணி அடித்ததும் பஜனை அறைக்கு ஓடோடியும் வருகிறேன், சில சமயங்களில் நடக்கும்போது மயக்கம் வருகிறது. எனவே கையில் ஒரு கைத்தடியையும் வைத்திருக்கிறேன்'', என்று கூறி உணர்ச்சி ஊட்டுவார்:

இந்த விதமாக குருதேவர் தாமே வாழ்ந்து காட்டி அதன் மூலம் சீடர்களுக்குப் போதித்தார். எதை அவர் சொன்னாரோ அதை அவரே செய்து காட்டினார். Serve என்றால் அவரே தொண்டின் உருவகமாகத் திகழ்ந்தார். Love என்றால் அன்பின் அவதாரமாகவே அவர் விளங்கினார். Give என்றால் கலியுகக்கர்ணனைக் காட்சியளித்தார். வாழ்ந்து காட்டிய வள்ளல் அவர். இதுதான் அவரை ஒரு இலட்சிய குருவாக ஆக்கியது. குருதேவரின் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகமாகும். தொண்டு செய்தல், பிரார்த்தித்தல், கீர்த்தனை செய்தல், கங்கையில் ஸ்நானம் செய்தல், அனைவருக்கும் நமஸ்காரம் செய்தல், எளியவாழ்வு வாழ்தல், யாண்டும் இறைவனை நினைத்தல், சதா மகிழ்ச்சியுடன் இருத்தல், அனைவருக்கும் உற்சாகமூட்டுதல், வேடிக்கையாக வேதாந்தத்தைப் புகட்டுதல்—இவை போன்றவற்றை சீடர்கள் அவரது செயல்களைப் பார்த்தே படித்தனர்.

பலர் தங்களது உலகாயத விஷயங்களுக்காகக் குரு தேவரை அணுகினர் அவர்களை அலட்சியம் செய்யாமல் அவர்களது பிரச்சினைகளை அனுதாபததுடன் கேட்டு குரு தேவர் தம்மாலான உதவிகளைச் செய்தார்.

ஒரு பெண் தனது ஆறு குழந்தைகளுடன் அலங்கோல மான உடையுடன் உதவி நாடி குருதேவரை அணுகினாள். அவளது கதையை கேட்ட அவர் அவளுக்கு 125 ரூபாயைக் கொடுத்து, அவளது முகவரியை வாங்கிக் கொண்டு தொடர்ந்து உதவி அளிப்பதாகக் கூறினார். மற்றொரு ஸ்திரீ தனது கணவன் இன்னொருத்தியுடன் ஓடி விட்டதாகவும் தான் அனாதையாக நிற்பதாகவும் சொல்லி குருதேவர் முன் தன் கதையைக் கூறினாள். அவள் சரியாக உடை உடுத்தாததைக் கண்ட குருதேவர் வேடிக்கையாக 'அவள் உங்களை விட அழகு போலிருக்கிறது. நீங்களும் நன்கு உடை உடுத்தி பவுடர் போட்டு உங்கள் கணவரைக் கவர்ந்திழுப்பதுதானே!', என்று கூறினார். மற்றொரு இளைஞன் படித்தும் வேலை கிடைக்கவில்லை. ஏதாவது வேலை கிடைக்க வழி செய்யுமாறு குருதேவரிடம் அவன் வேண்டிக் கொண்டான். அவனது நிலையைக் கண்டு வருந்திய குரு தேவர் வழக்கத்திற்கு மாறாக ஒரு நிறுவன அதிபருக்கு அவருக்காக சிபாரிசுக் கடிதம் எழுதினார். 'இவனது நிலையைக் கண்டு என் மனம் உருகுகிறது. எனவே உங்களிடம் இவனை அனுப்புகிறேன். உங்களால் முடிந்த உதவி செய்யவும்,' என்று அதில் குறிப்பிட்டிருந்தார். ஒரு காதல் ஜோடி திருமணம் செய்து கொள்ள விரும்பினர். குருதேவரை அண்டி உதவி வேண்டினர். தம் முன்னாலேயே அவர்களது திருமணத்தை குருதேவர் நடத்திவைத்தார் இல்லறத்தாரின் கடமைகளையும் அவர்களுக்கு அவர் எடுத்துரைத்தார். ஆசிரமத்தில் இது போன்று வேறு சில திருமணங்களும் குருதேவர் முன்னிலையில் நிகழ்ந்ததுண்டு. தம்மை அண்டியவர்களின் பிரச்சினை எதுவானாலும் அதைத் தீர்த்து வைக்க குருதேவர் தயங்கியது கிடையாது என்பதைத்தான் இந்த நிகழ்ச்சிகள் காட்டுகின்றன.

## கல்லையும் சிற்பமாக்கினார்

கல்லையும் சிற்பமாக்கிய பெருமை குருதேவரைச் சாரும். தனது சீடன் எந்த நிலைமையில் இருந்தாலும் அவனை ஆட்கொண்டு அருள் செய்தவர். இதனால்தான் மற்ற ஆசிரமங்களில் இடம் கிடைக்காதவர்கள் கூட சிவானந்தாச்சிரமத்திற்குச் சென்று புகலிடம் தேடினர். சாதகர்களைப் பக்குவப்படுத்துவதில் அவர் அவரவர்களுக்கு ஏற்றமாதிரிப் பல வழிகளைப் பயன்படுத்தினார். ஒருவரது குணம், ருசி, விருப்பு, வெறுப்பு அடுத்தவருடையதிலிருந்து மாறுபடுகிறது என்பதை நன்கு உணர்ந்தவர் அவர். தம் சீடர்களிடம் உள்ள குறைபாடுகளை வேடிக்கையாகச் சுட்டிக் காட்டியே அவர் நிவர்த்தி செய்து விடுவார்.

சில வேளைகளில் குருதேவர் அமைதி முறையையும் கடைப்பிடிப்பார். தப்பித் தவறிக் கூட சீடர்களின் குற்றம் குறைகளைப் பற்றி அவர் வெளியே சொல்ல மாட்டார். ஆனால் உரிய தருணத்தில், ஒரு துண்டுப் பிரசுரத்தை சீடரின் கையில் கொடுப்பார். அதில் அந்தச் சீடரிடம் உள்ள குறைகள் பற்றியும் அவற்றைப் போக்கும் விதம் பற்றியும் அழகாகக் கூறப்பட்டிருக்கும். ஆனால் ஒரு குழுவுடன் அந்தச் சீடர் இருக்கையில் மறைமுகமாக அதைப் பற்றிக் குறிப்பிடுவார். தனக்குத்தான் அது என்பதை அந்தச் சீடர் புரிந்து கொண்டு திருந்திவிடுவார்.

சீடர் பெரிய தவறு இழைத்துவிட்டால் குருதேவர் சில சமயங்களில் அவரைப் பூரணமாக ஒதுக்கிவிடுவார். அது அந்த சீடரை என்னவோ செய்யும். தாயினும் தயாபரனை குரு பராமுகமாக இருக்கையில் தமது தவறு பற்றி அவர் தனக்குள்ளேயே சிந்திப்பார். திருந்திவிடுவார். மானஸிக ரீதியிலும் சீடரிடம் அவர் குறிப்பிடத் தக்க மாற்றங்களை ஏற்படுத்துவார். குருவருளால் தனது எண்ணங்களிலேயே

ஒரு அதிசயமாற்றம் ஏற்படுவதை சீடர் உணர்வார். இது குருதேவரின் மிக நுணுக்கமான முறையாகும்.

உறுதியற்ற உள்ளம் படைத்த சீடரிடம் ஏதாவது சிறு தீய வழக்கங்கள் இருக்குமாகில் சிறிது காலத்திற்கு அவற்றைப் பார்க்காமலேயே விட்டு விட்டுவார். ஒரு சமயம் புகைபிடிக்கும் வழக்கத்திற்கு அடிமையாகிவிட்ட ஒரு ஆசிரம வாசியின் தலையணைக்கடியில் அவர் ஒரு பாக்கட் சிகரெட்டை வைத்து தனது தவற்றை அந்த சாதகர் உணரச்செய்தார். ஆன்மீக பலமும் இச்சா சக்தியும் சாதகர்களிடம் அதிகரித்து விட்டால் தாமாகவே தீய வழக்கங்கள் அவர்களை விட்டு நீங்கிவிடும் என்பது அவரது கருத்து ஆகும்.

சிறு சிறு விஷயங்களில் சீடர்களின் விருப்பங்களில் அவர் தலையிடமாட்டார். ''சுவாமிஜி, நான் மூன்று மாதங்கள் யாத்திரை போக விரும்புகிறேன்'', என்று ஆசிரம வாசி யாராவது சொன்னால் ''ஜய ஹோ பகவான், உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டும்?'' என்று உடனே அவர் கேட்பார். அடுத்த நாளே அதே அன்பர், ''சுவாமிஜி, நான் என் திட்டத்தை மாற்றிக் கொண்டு விட்டேன். நான் இங்கேயே இருந்து பணியைத் தொடர விரும்புகிறேன்'' என்று சொல்வாரானால், குருதேவர் அதைக் கேட்டு எந்த வித ஆச்சரியமும் கொள்ளாமல், ''ரொம்ப சரி, உங்களுக்குப் பால், பிஸ்கட் எல்லாம் ஒழுங்காகக் கிடைக்கிறதா?'', என்று விசாரிப்பார்.

## எளிய போதனை — இனிய வாழ்க்கை

பொதுவாக குருதேவர் ஒருவரால் எதைக் கடைப் பிடிக்க முடியுமோ அதைத்தான் போதிப்பார். சாதாரண ஜனங்களிடம் அவர், 'மாத்ரு தேவோ பவ, பித்ருதேவோ பவ ..' என்ற சுருதி வாக்கியத்தைச் சுட்டிக் காட்டி பெற்றோர், மூத்தவர்கள் போன்றோரை ஆதரிக்குமாறு கேட்டுக்

கொள்வார். மாறாக தீவிரமான ஆன்ம நாட்டம் உள்ள
வர்களாக இருந்தால் அவர்களிடம் வைராக்கியத்தை வளர்க்
கும் பொருட்டு, 'மாதா நாஸ்தி, பிதா நாஸ்தி—' என்று
உலகப் பற்றுக்களை விடுமாறு போதிப்பார்.

பொறுப்புக்களிலிருந்து விடுபட்ட வயதானவர்களை
ஆசிரமத்திற்கு வந்து சாதனையில் ஈடுபடுமாறு குருதேவர்
கேட்டுக்கொள்வார். கங்கா ஸ்நானம் மற்றும் ஜபம் தியானத்
தில் அவர்களை ஈடுபடுத்துவார். புலன்களை அடக்கமுடியா
மல் திணறும் சாதகர்களை மஹாத்மாக்களுக்குத் தொண்டு
செய்யும்படிச் செய்வார். சிலருக்கு கர்மயோகம், சிலருக்கு
பக்தியோகம், சிலருக்கு ஞானயோகம், சிலருக்கு சங்கீர்த்
தனயோகம் -இவ்விதம் அவரவருக்கு ஏற்றவாறு குருதேவர்
சாதனை முறைகளைக் கையாளுவார்.

ஒரு சமயம் ஆன்மீக சாதனை எவ்வளவு கடினம் என்ப
தைப் பற்றிக் கூறுகையில், 'இமயமலைக் குகைக்குப் போவது
என்பது வெகு எளிது. ஒருவரும் உங்களுடன் இல்லாத
பொழுது பொய் சொல்லாமல் இருப்பது உங்களுக்கு எளிது.
எவரும் தம்முடன் கூட இல்லாத சமயம் கோபப்படாமல்
இருத்தல் எளிது. உலகில் பலருடனும் வாழ்வதற்கிடை
யில் மனத்தை அடக்கி கர்மயோகத்தில் ஈடுபடுவதில்தான்
யோகி அல்லது ஞானியின் பெருமை அடங்கியிருக்கிறது'',
என்று தெரிவித்தார்.

குருதேவர் ஒரு சம்பூர்ண யோகி. என்றாலும், அவர்
கர்மயோகத்தைத்தான் பெரிதும் வலியுறுத்தினார். ''டைப்
அடித்தல், புத்தகம் எழுதுதல், கட்டுரை எழுதுதல் இவற்றிற்
கிடையே ஆன்ம ஞானத்தை அடைய முயலுங்கள். இதுதான்
சுறுசுறுப்பான பூர்ணயோகம். நகரத்தில் நீங்கள் இருந்
தாலும், இமயமலை ஆசிரமத்தில் இருப்பதாகக் கருதுங்கள்.
இதுதான் யோகம். ஜனக மகாராஜா சுகருக்கு வைத்த

பரீட்சை இதுவேயாகும்', என்று ஆரம்ப சாதகர் ஒருவருக்கு அவர் அறிவுரை கூறினார்.

கங்கோத்ரியில் வருடக் கணக்கில் ஐஸ்கட்டிகளுக் கிடையே தவம் செய்து வந்த ஒரு சாதகருக்கு குருதேவர், 'யான் எனது என்னும் செருக்கை அகற்றுவதுவே ஆன்ம சாதனையின் அடித்தளமாகும்', என்று எழுதினார். குகையில் தவம் செய்யும் யோகியை கன்னாட் சதுக்கம், சௌரிங்கி பஜார், மௌண்ட் ரோடு போன்ற இடங்களில் சோதனைக் குட்படுத்தி, அதில் அவர் மனம் மாருது இருப்பாரேயாளுல் யோகத்தில் வென்றவராக அவரைக் கருதலாம் என்று குருதேவர் குறிப்பிடுகிருர்.

ஆனால் அதே சமயத்தில் குருதேவர் தனிமையில் ஒருவர் செய்யும் தவத்தைப் பற்றி தமது Concentration and Meditation என்ற நூலில், "ஏசுநாதர் 18 வருடங்கள் எவருமறியாமல் தனிமையில் வாழ்ந்தார். உருவில்வா வனத்தில் பகவான் புத்தர் எட்டு வருடங்கள் தனித்து வாழ்ந்தார். பிரம்மபுரிக் காட்டில் சுவாமி ராமதீர்த்தர் இரண்டு வருடங்கள் தவம் செய்தார், செயலுக்கிடையே ஞானத்தைப் பெற வேண்டும் என்று சொன்ன அரவிந்தரும் 20 வருடங்களுக்கு மேலாக தனித்து இருந்திருக்கிருர். சாதனைக் காலத்தில் பலர் தனிமையை நாடியிருக்கின்றனர்," என்று எடுத்து விளக்குகிருர்.

## சன்னியாச வாழ்வின் மேன்மை

சில இளம் பெண்களும் ஆண்களும் குருதேவரின் நூல்களைப் படித்துவிட்டு சிவானந்தாசிரமத்தை நாடினர். அவர்களில் பலர் சன்னியாசத்தையும் மேற்கொண்டார்கள். சன்யாசத்தை தாராளமாகக் கொடுத்ததில் குருதேவருக்கு நிகராக வேறு எவரும் கிடையாது. சன்னியாசத்தை அவர் எல்லோருக்கும் கொடுத்தார் — வயதானவர்கள், இளைஞர்

கள், இந்தியர்கள். அயல்நாட்டவர், நேரில். தபாலில், இப்படிப் பலவிதங்களில் அவர் சன்யாசம் கொடுத்தார்.

சில வேளைகளில் குருதேவரிடம் சன்னியாசம் வாங்கிக் கொண்டவர்கள் வழிதவறிப்போனதும் உண்டு. காவி உடையைக் களைந்துவிட்டு திருமணம் செய்து கொண்டு குழந்தைகளைப் பெற்றெடுத்தவரும் உண்டு. ஒரு சமயம் இப்படி அனைவருக்கும் குருதேவர் தாராளமாக சன்யாசம் கொடுத்தது தவறு என்பது போல அவரிடம் ஒருவர் எடுத்துக் காட்டிய போது குருதேவர் அவரை நேருக்கு நேராக நோக்கி, 'அந்த நிலைமையிலும் அவர்கள் போற்றுதற்குரியவர்களே, ஒருநாளாவது சன்னியாசிகளாக இருந்திருக்கிறார்களில்லையா! தங்கள் கைகளை மேலே தூக்கி தைரியமாக 'நாங்கள் மூவுலக ஆசைகளையும் விட்டுவிட்டோம்' என்று ஒரு முறையாவது சொல்லியிருக்கிறார்களே! ஒரு சிலர் வழி தவறிப் போனதால் சன்யாச மார்க்கத்தையே குறை கூறுவது தவறு. சுவாமி விவேகானந்தர், சுவாமி ராமதீர்த்தர், சுவாமி தயானந்தர் ஆகியவர்களை உதாரண புருஷர்களாக நாம்கொள்ள வேண்டும். இளமையிலேயே சன்யாசம் வாங்கிக் கொண்டவர்களால் தான் அதிகம் நன்மை செய்ய முடியும்' என்று அறிவுரை வழங்கினார்.

மகான் அளித்த மந்திர தீட்சை

பலருக்கு சன்யாசம் வழங்கியதைப் போல குருதேவர் ஆயிரக்கணக்கானோருக்கு மந்திர தீட்சையும் கொடுத்தார். ஜபம், கீர்த்தனையின் முக்கியத்துவத்தை அவர் பெரிதும் வலியுறுத்தினார். தாம் எங்குச் சென்றாலும் ஜபமாலைகளைக் கூட எடுத்துச் சென்று இலவசமாக அனைவருக்கும் விநியோகம் செய்தார்.

குழந்தைப் பேறு இல்லாத ஒரு ஸ்திரீ, திருமணமாகாத வயதான பெண்ணை வைத்துக்கொண்டு திண்டாடும் ஒரு

தந்தை, தீராத வியாதியால் வருந்தும் ஒரு அன்பர் போன்ற அனைவருக்கும் அவரவருக்குரிய முறையில் குருதேவர் ஆலோசனை வழங்கினார். நல்ல கணவனைப் பெற காத்யாயனி மந்திரம், குழந்தைப் பேற்றிற்கு சந்தானகோபால மந்திரம் போன்றவற்றையும் உபதேசித்தார். நோய்கள் மற்றும் ஆபத்துக்களிலிருந்து காத்துக்கொள்ள அனைவருக்கும் மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை உபதேசித்தார். பில்லி சூனியம், ஏவல் போன்றவற்றிலிருந்தும் இந்த மஹாம்ருத்யுஞ்ஜய மந்திரம் ஒருவரைக் காக்கும் என்று அவர் அடிக்கடி கூறுவார்.

ஓம் த்ரயம்பகம் யஜாமஹே
சுகந்திம் புஷ்டி வர்த்தனம் ।
உர்வாருகமிவ பந்தனாத்
ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் ॥

என்பதுதான் மகத்வம் வாய்ந்த அந்த மந்திரமாகும். நல்ல கண்பார்வையைப் பெறுவின்க் ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யுமாறு அவர் சிஷ்யர்களிடம் கூறுவார். குருதேவரருளால் குழந்தைப் பேறு பெற்றவர்கள் அந்தக் குழந்தைக்கு சிவானந்தா என்றோ சிவானந்தினி என்றோ பெயரிட்டுள்ளனர்.

கூட்டுப் பிரார்த்தனைக்கு குருதேவர் மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். ஆசிரமத்தில் நிகழ்ந்த சத்சங்கத்தை ஒரு நாள் கூட அவர் தவறவிட்டது கிடையாது. சுவர்க்காசிரமத்தில் இருந்தபொழுதும் கூட தினமும் மாலையில் அங்குள்ள சாதுக்களை ஒன்றுசேர்த்து சத்சங்கத்தை நடத்தினார். ஆசிரம இரவு சத்சங்கத்தில் பங்கு கொள்ளத் தவறிய ஆசிரமவாசிகளை உடனுக்குடன் அவர் கண்டிப்பார். நவராத்திரி மற்றும் ஸ்ரீ ராமநவமி போன்ற விழாக்களின் போது ஆசிரமத்தில் சாதனா வாரத்தை ஏற்படுத்தி நூற்றுக்கணக்கான பேரை சாதனையில் ஈடுபடச் செய்தார்.

அவ்வப்பொழுது கர்மயோக வகுப்புக்களையும் குரு தேவர் நடத்தி அதில் தாமே பங்கு கொண்டு சிஷ்யர்களுக்கு உதாரணமாக விளங்கினர். ஒரு சமயம் தலையில் முண்டா சைக் கட்டிக் கொண்டு விளக்குமாற்றைக் கையில் ஏந்தித் தெருக்களைச் சுத்தம் செய்தார். அவர் அப்படிச் செய்ததைக் கண்ட சீடர்கள் வெட்கத்தை விடுத்து தாங்களும் அதில் பங்கு கொண்டனர்.

கீர்த்தனம் மற்றும் இசையில் தேர்ச்சி பெற்ற சீடர் அசிரமத்தில் தினமும் காலையில் இசை வகுப்பை நடத்து வார். ஹடயோக வல்லுநர் ஆசன வகுப்பையும், ஸமஸ் கிருத அறிஞர் சமஸ்கிருத வகுப்பையும், மற்றவர் அதுபோல துளசி ராமாயணம், கீதை, யோக வாசிஷ்டம், பிரம்ம சூத்திரம் போன்ற வகுப்புக்களையும் நடத்துவர். தங்கள் விருப்பத்திற்கு ஏற்ப ஆசிரமவாசிகள் அந்த வகுப்புக்களில் பங்குகொண்டு பயனடைவர். சகல விதத் திறமைகளையும் வளர்க்கும் ஒரு தெய்வீக நிலையமாக ஆசிரமம் விளங்கியது.

### சீடர்களைச் சோதித்தல்

தமது சீடர்களின் ஆன்ம முன்னேற்றத்தைச் சோதனை செய்வதில் குருதேவர் பிரத்தியேக முறைகளைக்கையாண்டார் சத்சங்கத்தில் இளம் சாதகரைப் பேசச்சொல்லுவார்.பேச்சின் முடிவில் அவரது முகபாவத்தைக் கவனிப்பார். பணிவு, கர்வம் போன்ற எந்த குணம் அவரிடம் காணப்படுகிறது. என்பதைக் கண்டு கொள்வார். தங்களுக்குப் பிடிக்காத மற்றவர்களது சொற்பொழிவைக் கேட்குமாறு சில சீடர்களை வற்புறுத்துவார். விருப்பு வெறுப்பை விடுவதற்கான போதனை இது. ஹோலிப் பண்டிகையன்று பிரம்மச்சாரி சாதகனின் நெற்றியில் இளம் பெண் ஒருத்தியைக்கொண்டு பொட்டு இடச் செய்து அந்த சாதகரிடம் ஏதாவது மாற்றம் ஏற்படுகிறதா என்பதைக் கூர்ந்து நோக்குவார். தமது

அறையில் புதிய பல்வகை உடைகளைப் பரப்பி திடீரென்று ஒரு சாதகரை உள்ளே அழைத்து அவற்றில் சாதகருக்கு விருப்பமானதை எடுத்துக் கொள்ளும்படிக் கூறுவார். அதிலிருந்து சாதகரிடம் திருப்தி அல்லது பேராசை எது நிலவுகிறது என்பதைக் கண்டுகொள்வார்.

ஒவ்வொருவரும் ஒரு ஆன்மீகக் குறிப்பேட்டை வைத்துக் கொள்ள வேண்டும் என்பது குருதேவர் அடிக்கடி வற்புறுத்திய போதனைகளில் ஒன்று. "ஒரு ஆன்மீக டயரி அவசியம். உங்களுக்கு எத்தனை தடவை கோபம் வந்தது, எத்தனை முறை பிறரது எண்ணங்களை நீங்கள் புண்படுத்தினீர்கள், எத்தனை முறை பொய் சொன்னீர்கள், அதற்கு எவ்விதத்தில் சுய தண்டனை அளித்துக் கொண்டீர்கள் என்பதையெல்லாம் அதில் குறித்து வையுங்கள். இரவு சாப்பாட்டைத் தவிருங்கள். 60 மாலை அதிகம் ஜபம் செய்யுங்கள்; இம்மாதிரி பயிற்சி செய்தால் உங்களிடம் பக்தி கூடும். அமைதியும் ஆனந்தமும் அதிகரிக்கும். நடமாடும் தெய்வமாக நீங்கள் விளங்குவீர்கள்", என்பது அவரது போதனை.

ஒருங்கிணைந்த வளர்ச்சியை குருதேவர் விரும்பினார். அதையே அவர் வற்புறுத்தினார். ஒரு நாள் இரவு சுமார் ஒன்பது மணி இருக்கும். பத்திரிகை ஒன்றுக்காக ஒரு ஆசிரமவாசி கட்டுரைகளை டைப் செய்து கொண்டிருந்தார். திடீரென்று குருதேவர் அவர் முன் தோன்றி: "இன்று எத்தனை மாலை ஜபம் செய்தீர்கள்?", என்று கேட்டார். 'ஜபமா?—' என்பதுபோல அந்த சாதகர் விழித்தார். உடனே குருதேவர் 'டைப் ரைட்டரைத் தூக்கி எறியுங்கள். வேலை, வேலை, வேலை, 24 மணி நேரமும் வேலையா? அது உங்களுக்கு மோட்சத்தைத் தராது. வேலையையும் பிரார்த்தனையையும் இணையுங்கள்", என்று அறிவுரை கூறினார்.

*சமய சமரசம்*

தம்மைத் தரிசிக்க வந்தவர் புத்த பிக்ஷுவானால் இரவு சத்சங்கத்தில் குருதேவர் அவரை பாலிமொழியில் பிரார்த்

தனை சொல்லச் செய்வார், பார்ஸீ பக்தரானால் ஜென்ட் அவஸ்தாவிலிருந்தும், கிறிஸ்தவரானால் பைபிளிலிருந்தும் சொல்லச் சொல்லுவார். யாரையும் அவரவர் கொள்கையை மாற்றிக்கொள்ளும்படி அவர் கேட்டுக்கொண்டதே கிடையாது. அவர் வழி காட்டினாரே தவிர, மதம் மாற்றியது கிடையாது. அனைத்து சமயங்களையும் அவர் போற்றினார். அனைத்து மகான்களையும் பாராட்டினார். நவராத்திரி விழாவும் ஆசிரமத்தில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. கிறிஸ்துமஸும் கொண்டாடப்பட்டது. ஆனால் உண்மையைத் திரித்துக் கூறினால் அதை அவர் ஒத்துக் கொள்ள மாட்டார்.

கிறிஸ்துவக் கான்வென்டில் படிக்கும் விஜயலட்சுமி என்ற மாணவியிடம், 'நீ சர்ச்சுக்குச் செல்வதுண்டா?', என்று கேட்டார். அவள் 'இல்லை' என்று தலையாட்டியதும் குருதேவர், 'கிறிஸ்துவ மதம் ஒன்று தான் மோட்சத்தை அளிக்கும் என்று அவர்கள் சொல்லுவதை நம்பிவிடாதே. கிறிஸ்து ஒருவரே உலகத்தின் ரட்சகர் என்று அவர்கள் சொல்வது தவறு. அவரைப் போல எத்தனையோ பேர் நம்மிடையே உளர். புத்தர், கிருஷ்ணர், கிறிஸ்து, முகமது நபி போன்ற அனைவருமே அவதாரங்கள் ஆவர். உண்மை எவருடையவும் தனிச் சொத்தாக இருக்கமுடியாது,' என்று அவளுக்கு உண்மையைப் புகட்டினார்.

*சாதனையின்றி சாதிக்க முடியாது*

"சுவாமிஜி, நாற்பது நாட்களில் சமாதிநிலையை அடைய முடியுமா? 15 நிமிடத் தியானப் பயிற்சியில் அரிய அனுபவங்களைப் பெற முடியுமா?" என்று அனுசூயா என்ற பெண்மணி கேட்டாள்.

"நாற்பது என்ன - நானூறு பிறவிகளில் கூட சமாதி கிட்டாது. சிலர் சில ஒளிகளைக் கண்டுவிட்டு...", என்று நிறுத்தினார்.

சிலருக்குத் தியானத்தில் சில ஒளிகள் தெரியும், அது எல்லாம் சர்வசாதாரணம். ஒளியைக் காண்பது, ஒலியைக் கேட்பது இவையெல்லாம் உண்மையான ஆன்மீக முன்னேற்றம் ஆகமாட்டா. இப்படி 'ஒலி' 'ஒளி' என்று சொல்லுபவர்களை நம்பாதீர்கள்'', என்று குருதேவர் தம் நூல்களில் சாதகர்களை எச்சரிக்கிறார்.

தங்களுக்கு வழிகாட்ட சரியான குருமார் கிடைக்க வில்லை என்று பலர் குறைபட்டுக்கொள்வதை குருதேவர் ஒப்புக்கொள்ளுவதில்லை. மகான்களின் புத்தகங்களில் கண்டுள்ளதை நடைமுறையில் பக்தி சிரத்தையுடன் கடைப் பிடித்தாலே போதும், ஆன்மீக மார்க்கத்தில் நல்ல முன்னேற் றத்தைக் காணலாம் என்பது அவரது கருத்து. படிக்கவும். சந்தேகம் தெளியவும், நடைமுறையில் கொண்டு வரவும்' — இதுதான் அவர் அனைவருக்கும் போதித்தது ஆகும்.

கண் டாக்டர் ஒருவரிடம் ஒரு ஆசிரமவாசி தமது கண் களின் நிலைமை பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார். அப் பொழுது குருதேவர் அந்த நபரிடம் பல கேள்விகளைக் கேட் டார்.

'சூரிய நமஸ்காரம் செய்கிறீர்களா?'

'இல்லை'

'ஆதித்ய ஹிருதயம் சொல்லுகிறீர்களா?'

'இல்லை'

'காலையில் சூரியனை நோக்கி நின்று பிரார்த்தனை செய் கிறீர்களா?'

'இல்லை'

'சிரசாசனம், ஸர்வாங்காசனம், திராதக் முதலியன செய்வதுண்டா?'

'இல்லை'

ஒவ்வொரு முறை 'இல்லை' என்று சொன்னபோது அந்த ஆசிரமவாசி மிகவும் வெட்கமடைந்தார்.

கடைசியில் குருதேவர், "பின் எப்படி உங்களுக்கு நல்ல கண் பார்வை இருக்கும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?", என்று சொல்லி விட்டு தமது அனுபவத்தைப் பற்றி எடுத்துரைத்தார்-

— "இன்றும் கூட நான் இப்பயிற்சிகளில் ஒழுங்காக இருக்கிறேன். இன்று காலை சூரிய நமஸ்காரம் செய்தேன். உதிக்கும் சூரியனைப் பார்த்து நின்று கொண்டு அவனது பன்னிரு நாமங்கள் மற்றும் ஆதித்ய ஹிருதய பாராயணம் செய்கிறேன். ஞாயிற்றுக்கிழமைகளில் உப்பில்லாத உணவை உண்கிறேன், இன்றும் ஆசனப் பிராணயாமப் பயிற்சிகளிலும் நியமமாக இருக்கிறேன். எனவே சூரிய பகவானது அருளால் எனது கண் பார்வை நன்கு உள்ளது. நல்ல கண் பார்வையுடன் நீங்களும் மனித குலத்திற்கு நன்முறையே தொண்டாற்ற முடியும். கண் மிக முக்கியமான உறுப்பு ஆகும். கண் பார்வை இல்லாவிடில் இருந்தும் இறந்தவருக்கு நிகரே. நீங்கள் பிறருக்குத் தொண்டு செய்வதற்குப் பதிலாக உங்களுக்குத் தொண்டு செய்யப் பத்து பேர் வேண்டியிருக்கும்."

### அனைவருக்கும் அடைக்கலம் அளித்தார்

பிறரிடம் எந்தத் திறமை இருந்தாலும் அதை வெளிக் கொணர்ந்து பயன்படுத்துவதில் குருதேவர் தயங்கியதே கிடையாது. ஒரு சங்கீத வித்வான் ஆசிரமத்தில் வந்து சேர்ந்தார். அடுத்த நாளே நல்ல ஒரு ஹார்மோனியமும் தபேலாவும் வாங்கப்பட்டன. ஜெர்மனியிலிருந்து ரோஸா ஷ்மிட் என்ற பெண்மணி வந்தார். அவளுக்கு சிலைகள் செய்யத் தெரியும். உடனே சிலை செய்யத் தேவையான 'பிளாஸ்டர் ஆப் பாரிஸ்' போன்ற சாமான்களுக்கு ஆர்டர்

கொடுத்து வரவழைத்து விட்டார். அந்த அம்மையார் செய்த துர்க்கை, சரஸ்வதி சிலைகள் இன்றும் ஆசிரம பஜனை ஹாலில் காண்பவர் கருத்தைக் கவரும் வண்ணம் இருக்கின்றன. கேரளாவிலிருந்து ஒரு நாயர் தமக்கு ஹோட்டலில் வேலை செய்த அனுபவம் கொஞ்சம் உண்டு என்று சொல்லிக் கொண்டு குருதேவரின் உதவியை நாடினார். 'உடனே குருதேவர் ஆசிரமத்திற்கு அருகில் ஒரு ஹோட்டலைத் தொடங்க அவருக்கு உதவி செய்தார். இன்றும் அந்த ஹோட்டல் நன் முறையே நடந்து வருகிறது.

தமக்குத் தெரிந்த அனைத்தையும் அவர் பிறருக்குத் தெரிவித்து விடுவார். எதையும் ரகசியமாக வைக்கும் பழக்கம் அவருக்குக் கிடையாது. உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசும் வழக்கத்திலிருந்து சாதகர்கள் விலகி இருத்தல் வேண்டும் என்று அவர் குறிப்பிடுவார்.

துறவியாக விரும்பினால்......

1937-ம் ஆண்டில் கீழ்க்காணும் கேள்விப்பட்டியலை வெளியிட்டு ஆசிரமத்தில் சேர்ந்து துறவியராய்த் தொண்டாற்ற விரும்பும் அன்பர்கள் இந்தக் கேள்விகளுக்கு மனப்பூர்வமாகப் பதில் சொன்ன பின்னரே மேற்கொண்டு திட்டமிடல் வேண்டும் என்று குருதேவர் குறிப்பிட்டார்.

1. உண்மைக்கான நாட்டத்தில் உங்கள் உடலையும் உயிரையும் தியாகம் செய்ய நீங்கள் தயாரா?

2. பிக்ஷை ஏற்று உண்ண நீங்கள் தயாரா? இடையில் விட்டு விடாது இதில் தொடர்ந்து இருப்பீர்களா?

3. கர்மயோகத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்திருக்கிறீர்களா?

4. உங்கள் பந்து மித்திரர்களுடன் உள்ள எல்லா உறவையும் விட்டுவிட நீங்கள் தயாரா?

5. புகழுக்காகவா, சித்திகளைப் பெறுவதற்காகவா. குண்டலினியைக் கிளப்புவதற்காகவா அல்லது ஊரார் சாப்பாட்டில் சோம்பேறி வாழ்க்கை வாழவா — எதற்காக நீங்கள் சன்யாசத்தை மேற்கொள்ள விரும்புகிறீர்கள்?

6 உண்மையான திடமான வைராக்கியம் உங்களிடம் இருக்கிறதா?

7 இந்த இடத்து சீதோஷ்ண நிலையை உங்களால் சமாளிக்க முடியுமா?

8 இதுவரை நீங்கள் செய்த சாதனை என்னென்ன?

9 மாயையின் விளையாட்டை உண்மையாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்களா?

10 இதுவரை நீங்கள் படித்துள்ள நூல்கள் யாவை?

11 ஆசனம் மற்றும் பிராணாயாமப் பயிற்சிகளில் பழக்கமுண்டா?

12 உங்களது ஆரோக்கியம் எப்படி? வயது என்ன?

13 உங்களது சொந்தப் பொறுப்பிலும், மனத் திட்பத்தின் அடிப்படையிலும்தான் இங்கே வருகிறீர்களா?

14 ஜாதி வேறுபாடு பாராட்டுவதுண்டா?

15 உலகத்தை நீங்கள் துறப்பதன் முக்கிய காரணம் என்ன?

16 எந்தவிதமான கீழான வேலையையும் முகம் கோணாமல் நீங்கள் செய்வீர்களா?

"இதற்கான பதில்களை ஒளிவு மறைவு இன்றி எழுதுங்கள். நான் உங்களுக்கு உதவத் தயாராய் இருக்கிறேன். உங்களை நான் ஊக்குவிப்பேன். ஆனால் உங்களுக்காக நான் உங்களது வேலையைச் செய்ய மாட்டேன். நீங்கள் தான் சாதனையில் மனமொன்றித்து ஈடுபடவேண்டும்.

ஏதோ சில சித்திகளைப் பெற்று மக்களை ஏமாற்றிப் பணம் பறிக்கும் நோக்கத்துடன் என்னிடம் வராதீர்கள். இந்தத் தீய வழியில் என்னால் உங்களுக்கு உதவ முடியாது. ஆன்மானுபூதிக்கும் சித்திகளுக்கும் வெகு தூரம்'', என்று தம் மனத்தில் இருந்ததைத் தெளிவாக அவர் குறிப்பிட்டார்.

*சீடர்கள்—அந்தக் காலமும் இந்தக் காலமும்*

முற்காலத்தில் குருவிற்காக உயிரையும் கொடுக்க சிஷ்யர்கள் தயாராயிருந்தார்கள். குருவிடமிருந்து தீட்சை பெறுவதற்கே அந்தச் சீடர்கள் வருடக் கணக்கில் காத்துக் கிடக்க வேண்டியிருந்தது. கௌதமர் என்ற ரிஷி தமது சிஷ்யரான ஸத்யகாமஜாபாலரிடம் நாநூறு மெலிந்த பசுக்களைக் கொடுத்து அவை ஆயிரமாக எண்ணிக்கையில் பெருகிய பின்னரே தம்மிடம் வருமாறு கட்டளையிட்டார். குரு துரோணாச்சாரியருக்கு குருதக்ஷிணையாக ஏகலவ்யன் தனது கட்டை விரலையே அளித்தான். குரு சாந்தீபனி மகரிஷிக்கு பகவான் கிருஷ்ணர் காட்டிற்குச் சென்று விறகு வெட்டிக் கொணர்ந்தார்.

ஆனால் இதுவோ இருபதாம் நூற்றாண்டு. காலம் வெகுவாக மாறி விட்டது. தனக்காகத் தன் சீடர்கள் தொண்டு செய்வதை எதிர்பாராமல், கருணாமூர்த்தியான குருதேவர் தன் சீடர்களுக்கு வேண்டிய உணவு, உடை, உறையுள் போன்ற அனைத்து வசதிகளையும் அளித்து சாதனையில் அவர்களை ஈடுபடச் செய்தார். தமது சீடர்களுடன் அவர் மிகவும் சகஜமாக இருப்பார்.

''பழைய காலத்தில் குருமார்களைச் சீடர்கள் கையில் ஸமித்து ஏந்தி மிகவும் பயபக்தியுடன் அணுகுவர். ஆனால் இன்றைய சீடர்கள் அப்படியல்ல. தங்களது குருவுடன் பேசுகையில் இன்றைய இளைஞர்கள் பாண்ட்-பாக்கெட்டிற்குள் கைகளை நுழைத்துக் கொண்டு குருவைவிடத் தங்களுக்கு அதிகம் தெரியும் என்ற கர்வத்துடன் பணிவில்லாது

பேசுகின்றனர். அடக்கம் பணிவு இவையெல்லாம் அவர்களிடம் காணப்படுவதில்லை. இத்தகையோர்களுக்கும் நான் உபதேசங்கள் செய்கிறேன், தீட்சை அளிக்கிறேன்'', என்று தற்கால சீடர்களின் மாறிய நிலைபற்றி ஒருநாள் தன்னுடன் இருந்தவர்களிடம் எடுத்துரைத்தார்.

அவரவருக்கு ஏற்ற பதில்

ஆசிரமத்தில் அதிகாலை வேளையில் குருதேவர் அனைவருக்கும் முன்னால் எழுந்திருந்து தலையில் முண்டாசைக் கட்டிக்கொண்டு, ஒரு கையில் தடி, மற்றொரு கையில் ஹரிக்கேன் விளக்கை ஏந்தி சீடர்களின் ஒவ்வொரு அறைக்காகச் சென்று தட்டி அவர்களைத் துயிலெழுப்பி தியான வகுப்பிற்குப் போகச் சொல்லுவார். பிரம்மமுகூர்த்தமாகிய அதிகாலை நேரத்தை தூக்கத்தில் கழிக்கலாகாது என்று அவர் அடிக்கடி வற்புறுத்தினர்.

பலர் பலவிதமான கேள்விகளைக் குருதேவரிடம் கேட்டார்கள். அனைவரிடத்தும் பொறுமையாக அவர் பதில் சொல்லுவார். ஒரு பிரெஞ்சு பக்தர் சுவாமிஜியிடம் ஏசுநாதர் காசி, காஷ்மீரில் வசித்ததைப் பற்றி விளக்கிக் கூறுமாறு அவர் கேட்டார். அதற்கு 'நீங்கள் சரித்திரம் படியுங்கள். உண்மை புலப்படும். அவருடைய வாழ்வில் காணாமற்போன சமயத்தில்தான் ஏசுநாதர் இங்கே இருந்தார். நீங்கள் இதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். அவருடைய மலைப்பிரசங்கத்தை வாழ்வில் கடைப்பிடியுங்கள்.' என்று குருதேவர் அறிவுரை கூறினர்.

'எல்லோரும் சன்யாசிகளாய்விட்டால் என்ன ஆகும்?', என்றுசம்பத் என்ற பக்தர் கேட்டார். 'பெண்கள் அனைவரும் மலடிகளாய் விட்டால் உலகம் என்ன ஆகும்?', என்று குருதேவர் உடனே அவரைத் திருப்பிக்கேட்டார்.

'நான் ஒரு முதல்தர குருவைப்பெற விரும்புகிறேன்,' என்றார் ஒரு அன்பர். 'நீங்கள் ஒரு முதல்தர சீடரா?' என்று உடனே குருதேவர் அவரிடம் திருப்பிக் கேட்டார்.

'பைபிள், குரான் போல தெய்வநெறிக் கழகத்துக்கு பிரத்தியேகமாக ஏதாவது மறை நூல் உண்டா?' — இது ஒருவரது கேள்வி. 'ஏன்? பைபிள், குரானே தெய்வநெறிக் கழகத்தின் மறைநூல்கள்தான். தெய்வீக வாழ்க்கை என்பது ஒரு புதிய சமயம் அல்ல. அவரவர் வழிப்படி அவரவர் சமயத்தில் நம்பிக்கையை உறுதிப்படுத்தி பிற சமயங்களிடம் சமரஸ மனப்பான்மையை ஏற்படுத்துவதே அதன் நோக்கமாகும்', என்று கூறி தமது இயக்கத்தின் அடிப்படை நோக்கத்தைக் குருதேவர் தெளிவுபடுத்தினார்.

நேரில் தம்மை அண்டியவர்களுக்கு உபதேசித்தது போலவே தமது பக்தர்களுக்குத் தபால் மூலமும் குருதேவர் உபதேசம் செய்தார். பல தேசங்களிலுமிருந்து கட்டுக் கட்டாகத் தினமும் குருதேவருக்குத் தபால்கள் வந்து குவிந்த வண்ணம் இருக்கும். அனைத்துக் கடிதங்களுக்கும் அவர் தாமே பதில் எழுதிக் கையெழுத்திட்டு அனுப்புவார்.

*பிரச்சினைக்கு ஏற்ற தீர்வு*

சில சமயம் சில பக்தர்கள் தங்களிடம் உள்ள குறைபாடுகளை அப்பட்டமாகத் தெளிவுபடுத்தி குருதேவருக்குக் கடிதம் எழுதுவர். அவர்களுக்குத் தகுந்த முறையில் உடனே அவர் பதில் எழுதி அனுப்புவார். ஒருசமயம் ஒரு இளைஞன் அடக்க முடியாத தனது புலன்களை அடக்கும் வழி பற்றி சுவாமிஜியிடம் அறிவுரை கேட்டான்.

''நான் ஒரு வக்கீல். என் மனம் திறந்து உங்களுடன் பேசுகிறேன். மகானான நீங்கள் எனக்கு வழிகாட்டி உதவுவீர் என நம்புகிறேன். எனது கல்லூரி நாட்களில் ....— அது எப்படி ஏற்பட்டது என்று எனக்குத் தெரியாது .....

என்னுள் எழுந்த புலன் வேட்கை விபசாரிகளிடம் போக என்னைத் தூண்டியது. நான் திருமணமானவன். குழந்தைகளும் உண்டு. இவ்வளவு படித்திருந்தும் கூட அந்த இச்சையை என்னால் அடக்க முடியவில்லை. எனக்கே வெறுப்பு ஏற்பட்டாலும் கூட அங்கே போகாமலிருக்க என்னால் முடியவில்லை. நான் செய்வது என் மனைவி மற்றும் குழந்தைகளுக்கு எதிரான மாபெரும் பாபம் என்பது எனக்குப் புரிகிறது. ஆனாலும் காமவேட்கை என்னை ஆட்டிப்படைக்கிறது. நான் உய்ய மார்க்கம் உண்டா? எனக்குத் தயவு செய்து தாங்கள் வழி காட்டுவீர்களா?''. அவனது இந்தக் கடிதத்தைப் படித்த குருதேவர் ஒரு நீண்ட கடிதத்தை எழுதி அவன் திருந்துவதற்கான வழியைக் காண்பித்தார்.

''அழியாத அமர ஆத்மனே,

நமஸ்காரங்கள்,

ஓம் நமோ நாராயணாய.

உங்கள் கடிதம் கண்டு நல்வாழ்க்கை வாழ்வதற்கான உங்களது மேலான நாட்டத்தை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன்.

உங்களை வாட்டும் காமம் ஏதோ தற்காலிகமாக உங்களிடம் தோன்றியதாகும். அது உங்கள் நிஜ சொரூபம் அல்ல. காரணம் உங்களிடம் இத்தகைய நல்ல எண்ணங்களும் எழுகின்றன அல்லவா? ஏதோ தீய தொடர்பின் காரணமாக இந்தப் பழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். அது ஒரு ஓடு மேகம் போன்றது. எனக்கு நீங்கள் கடிதம் எழுதத் தீர்மானித்த அந்த விநாடியிலேயே உங்களை வாட்டிய காமம் உங்களை விட்டு நீங்கிவிட்டது.

இப்பொழுது தூய்மையின் ஒளி உங்களிடம் ஒளிர்கிறது. அதைத் தியானியுங்கள், சென்ற காலத்தை மறந்து விடுங்கள். தூய்மையின் பாதையில் நடவுங்கள்.

காமம் ஒரு நாயைப் போன்றது. அதை நீங்கள் துரத்துமளவுக்கு அது உங்களைப் பின் தொடரும். அதைப் பார்க்கவில்லை என்று கண்டு கொண்டதும் அது உங்களை விட்டு நீங்கிவிடும். உங்கள் வேலையில் கவனம் செலுத்துங்கள். உங்கள் சாதனையில் ஈடுபடுங்கள். உறுதியாக தெய்வ நெறியைக் கடைப்பிடியுங்கள். காமம் துளிகூட இல்லாது உங்களைவிட்டு அகன்றுவிடும்.

இரவும் பகலும் ஏதாவது வேலையில் முனைப்பாயிருங்கள். மாலையில் தனியாயிருக்காதீர்கள். கீர்த்தனை செய்யுங்கள். உங்கள் உற்ற நண்பர்களுடன் நல்ல நூல்களை மாலைப் பொழுதினில் படியுங்கள். இன்றிலிருந்தே இதைத் தொடங்குங்கள். கடந்ததைப் பற்றிய எண்ணங்களை வரவழைக்காதீர்கள். நீங்கள் மாறுவதைக் குறித்தும் உங்களை நீங்களே புகழ்ந்து கொள்ளவும் வேண்டாம். தூக்கம் வரும் வரை ஏதாவது வேலையில் ஈடுபடுங்கள்.

ஜபம், ஜபம், ஜபம்—... இறைவன் நாமம்தான் எல்லாத் துன்பத்துக்குமான ஒரே அருமருந்து. ஒரு மாதம் மாலைப் பொழுதை ஜபம், கீர்த்தனை, தியானம், சுவாத்யாயம் முதலியவற்றில் முழுக்க ஈடுபடுத்துங்கள்.

மாலை 3 மணிக்குப் பிறகு டீ. காப்பி போன்ற உணர்ச்சியைத் தூண்டும் எந்த பானத்தையும் அருந்தாதீர்கள். உங்களிடம் உள்ள குறைபாட்டைப் பற்றியும் அதை அகற்ற நீங்கள் மேற்கொள்ளும் முயற்சிகளைப் பற்றியும் சதா எண்ணுதீர்கள். இது மிகவும் முக்கியமானது.

நான் தனித் தபாலில் ஒரு ஜபமாலையை அனுப்புகிறேன். அதை எப்பொழும் கழுத்தில் அணிந்து கொள்ளவும். ஆன்மீக டயரிக் குறிப்பேடுகளையும் அனுப்புகிறேன். அதையும் ஒழுங்காகக் கடைப் பிடியுங்கள். அதில் ஒளிவு மறைவின்றி இருக்க வேண்டும், மாதா மாதம் அதை

எனக்கு அனுப்பிவையுங்கள், உங்களைத் தெய்வீக மனிதராக ஆக்குவதில் என்னாலான அனைத்து உதவிகளையும் நான் செய்யத் தயாராயிருக்கிறேன்.

இறைவன் உங்களுக்கு நல்லாரோக்கியம், செல்வம், அமைதி, ஆனந்தம், கைவல்ய மோட்சம் அனைத்தையும் அருள்வாராக.

உங்கள் சொந்த ஆத்மன்,
*சிவானந்தா*

இது குருதேவர் அந்த அன்பருக்கு எழுதிய கடிதத்தின் சாரமாகும்.

மற்றொரு பக்தர் குருதேவருக்கு எழுதிய கடிதத்தில், "சுவாமிஜி! பிரார்த்தனை என்றால் என்ன? எப்படிப் பிரார்த்தனை செய்வது? பிரார்த்தனையினால் கடவுளை எப்படித் திருப்திப்படுத்துவது? கள்ள நோட்டு அடிப்பவனும், கருப்புச் சந்தைக்காரனும் கூடத்தான் தங்களது தொழிலில் அமோக வளர்ச்சி வேண்டுமென்று இறைவனிடம் பிரார்த்தனை செய்கிறார்கள்" என்று தமது ஐயத்தை வெளிப்படுத்தியிருந்தார்.

"கடவுளிடம் உண்மையாகப் பக்தி செய்பவர்கள் பிரார்த்தனைக்கும் நேர்மைக்குமிடையே வேற்றுமை பாராட்டமாட்டார்கள். கருப்புச் சந்தைக்காரன் செய்யும் பிரார்த்தனை உண்மைப் பிரார்த்தனை ஆகாது, அது அவன் தான் செய்யும் பாவங்களுக்கான தண்டனையிலிருந்து தப்பிக்கத் தேடும் குறுக்குவழியாகும். சிரத்தை இருக்குமளவுக்கு ஒருவன் செய்யும் பிரார்த்தனைக்குப் பலன் உண்டு. பிரார்த்தனை பண்ணிவிட்டு மீண்டும் மீண்டும் தவறு இழைப்பவன் பக்திமான் ஆகமாட்டான். கீதையில் பகவான் சொல்லியிருப்பதுபோல அனைவருக்கும் நலத்தை நாடுபவனே உண்மைப் பக்தனாவான். தன்னைப் போலப் பிறரையும் கருதுபவனே உண்மைப் பக்தன்", என்று உண்மை பக்தனைப் பற்றிய விளக்கத்தை குருதேவர் அவரிடம் எடுத்துரைத்தார்.

குருதேவரிடம் உபதேசம் பெற்றவர்கள் படிப்படியாக தங்கள் சாதனையில் முன்னேறி மேல் நிலையை அடைந் தார்கள். கல்லாய்க் கிடந்தவர்களை தெய்வநிலைக்கு குரு தேவர் உயர்த்தினார் என்றால் அது மிகையாகாது: குரு தேவரின் அருளால் வாழ்க்கையில் மறுமலர்ச்சி அடைந்த எண்ணற்றவர் தங்கள் நன்றியை அவருக்கு மனப்பூர்வ மாகத் தெரிவித்துக் கொண்டனர். ஆன்மீக வாழ்விலும் அவரது அருள் பக்தர்களிடம் அற்புதங்கள் பலவற்றை விளைவித்தது.

முக்தி நெறி அறியாத மூர்க்கருக்கும் பக்தி நெறி அறிவித்துப் பெருநிலைக்கு அவர்களை குருதேவர் உயர்த் தினார்.

---

## சிவானந்தருடன் ஒருநாள்

ஒரு சமயம் யோகம் பயில்வதற்காக சாதகர் ஒருவர் ஆசிரமத்திற்கு வந்திருந்தார். அப்பொழுது ஆசிரமத்தில் டிபி நோயால் வருந்திக் கொண்டிருந்த ஒரு அன்பரும் தங்கிக் கொண்டிருந்தார். குருதேவர் நோயாளியின் ஆடைகளைச் சுத்தம் செய்யும்படி சாதகரைக் கேட்டுக் கொண் டிருந்தார். ஆசிரமத்திற்குத் தான் யோகம் பயிலத்தான் வந்திருப்பதாகவும், நோயாளிகளின் உடைகளைக் கழுவ வரவில்லை என்று எண்ணி அந்த சாதகர் அந்த வேலையைச் செய்ய விருப்பவில்லை.

சிறிது நேரம் கழித்து குருதேவரே அந்த நோயாளி யின் உடைகளைக் கங்கைக் கரையில் சுத்தம் செய்து கொண் டிருப்பது தெரிய வந்தது.

# 10

## மேனாட்டவர் கண்ட குருதேவர்

குருதேவர் ஆங்கிலத்தில் தமது நூல்களை எழுதியதன் காரணம் உலகில் அதிகமதிகம் வாசகர்கள் அவற்றைப் படித்துப் பயனடைய முடியும் என்பதனாலேயே யாகும். இன்று குருதேவரின் கருத்துக்களால் அகில உலகமும் ஈர்க்கப்பட்டிருக்கிறது. அமெரிக்கா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, ஜப்பான் போன்ற பல்வேறு நாடுகளிலும் உள்ள லட்சக்கணக்கான பக்தர்கள் குருதேவரின் தெய்வ நெறியில் நின்று பயனடைந்து வருகிறார்கள். ஹிந்தியிலோ அல்லது தமிழிலோ அவர் எழுதியிருந்தால் நிச்சயம் அவர் இந்த அளவுக்கு அகில உலகையும் ஆட்கொண்டிருக்க முடியாது.

### ஐரோப்பாவில் தெய்வநெறி

லாட்வியாவைச் சேர்ந்த ஹாரி டிக்மென் என்ற பக்தர் குருதேவருடன் கடிதத் தொடர்பு கொண்டு அவரிடமிருந்து ராஜயோகத்தில் விரிவான பயிற்சி பெற்றார். சுவாமிஜியின் "குண்டலினியோகம்" என்ற நூல் அவரைப் பெரிதும் கவர்ந்தது. அதை முழுவதும் அந்நாட்டு மொழியில் மொழி பெயர்த்து, சர்ச் அதைப் புத்தக ரூபத்தில் அச்சிட்டு வெளியிட அனுமதி மறுத்ததால், டைப் செய்த

வடிவத்திலேயே வெளியிட்டார். பலர் அதைப் படித்துப் பயனடைந்தனர். விரைவில் அங்கே பெண்மணிகளைக் கொண்ட ஒரு யோக சபையும் உருவாகியது.

அதைத் தொடர்ந்து மற்ற நாடுகளிலும் குருதேவரின் போதனைகள் பரவின. டென்மார்க்கில் 'வெண்துறவி' என்று அழைக்கப்பட்ட ஓாயி பிரிங்போட் சுவாமிஜியின் நூல்களை மொழிபெயர்த்து கோபன்ஹேகனிலிருந்து வெளியான சஞ்சிகைகளில் அவற்றை வெளியிட்டார். எடித் என்ஞு என்ற பெண்மணி குருதேவரின் நூல்களைப் படித்து ஆசனத்தில் தேர்ச்சி அடைந்து, நார்வே, ஸ்வீடன் நாடுகளில் கொட்டகை பொங்கி வழிய அரங்குகளில் ஆசனங்களைச் செய்து விளக்கம் கொடுத்தார். பெல்ஜியத்தில் டாக்டர் ஹைன்பாம்பினெட் பல கூட்டங்களில் குருதேவரின் நூல்களிலிருந்து பல பகுதிகளைப் படித்துக் காண்பித்தார். குருதேவர் அவரிடம் கேட்டுக்கொண்டபடி தமது சொற்பொழிவுகளில் அவர் பிரார்த்தனை, கீர்த்தனை மற்றும் 'ஓம்' த்வனி ஆகியவற்றையும் சேர்த்துக்கொண்டார்.

பல்கேரியாவைச் சேர்ந்த ஒரு பாதிரியார் செப்லவன்கோ என்பவர் குருதேவரின் நூல்களைப் படித்துவிட்டு தினமும் மந்திரங்களை எழுதி அந்த நோட்டுக்களை குருதேவரின் பார்வைக்காக ஆசிரமத்துக்கு அனுப்பினுர். மற்றவர்களையும் அவர் குருதேவரின் யோக முறையில் பயிற்றுவித்தார். அவரைப் போலவே இங்கிலாந்தைச் சேர்ந்த அட்கின்ஸன், மெக்ஸிகோவைச் சேர்ந்த லாவாக்னினி போன்ருேரும் குருதேவருடன் கடிதத்தொடர்பு கொண்டு யோகம் பயின்றனர். தமது உள்நாட்டு பக்தர்களையும் வெளிநாட்டு பக்தர்களையும் குருதேவர் ஒரே பாங்கில் நேசித்தார்.

ஐரோப்பாவில் மட்டுமல்லாது ஏனைய நாடுகளிலும் குருதேவரின் போதனைகள் பரவலாயின. நைரோபியில் இருந்த ஜி எம். சர்மா என்ற பக்தர் மொம்பாஸா, நகுரு,

எல்டொவட் என்னுமிடங்களில் தெய்வநெறிக் கழகங்களை நிர்வகித்து நடத்தினர். டெஹ்ரானில் ஒல்ஷான்ஸ்கி, எகிப்தில் ஒடாகரர் பேசாசக் போன்ரேரும், ரங்கூனில் வெங்கடராம ஐயரவும் சிறந்த முறையில் குருதேவரின் கருத்துக்களைப் பரப்பினர். ரங்கூனில் இரண்டு தெய்வநெறி மாநாடுகளும் நடந்தன. பி.பி. தேசாய் என்பவர் பஹ்ரெய்னில் ஒரு தெய்வ நெறிக்கழகக் கிளையை ஏற்படுத்தினர்.

இதற்கிடையில் இரண்டாவது உலக மகா யுத்தம் வந்தது. அதனல் ஐரோப்பியர்களே, அமெரிக்கர்கள் ஆனை வருமே அமைதியிழந்து தவித்தனர். ரோமாபுரி சாம்ராஜ்யம் அழிந்ததுபோல் தங்களது அபரிமிதமான செல்வத்தாலேயே தங்களுக்கு அழிவு வந்துவிடுமோ என்று அமெரிக்கர்கள் அஞ்சினர். உலகாயதத்தின் பிடியிலிருந்து அவர்கள் தப்ப விரும்பினர். ஆன்மீகத்தின் பால் அவர்களது நாட்டம் திரும்பியது. பலர் குருதேவருடன் தொடர்பு கொண்டனர். அவர்களில் சிலர் குருதேவர் அமெரிக்காவுக்கு விஜயம் செய்ய வேண்டும் என்று அன்புடன் அழைப்பு விடுத்தனர்.

1950ல் நிகழ்ந்த குருதேவரின் வெற்றிகரமான அகில இந்திய யாத்திரையைப்போலவே, அகில உலக யாத்திரைக்கான ஏற்பாடுகளை அவரது சில பக்தர்கள் செய்யலாயினர். பல்வேறு நாடுகளிலும் உள்ள குருதேவரின் சீடர்கள் அது குறித்து மிகுந்த சந்தோஷம் அடைந்து தங்கள் தங்கள் நாடுகளில் அவரை வரவேற்க தடபுடலான ஏற்பாடுகளைச் செய்யத் தலைப்பட்டனர். அதையொட்டிய செய்திகள் பல்வேறு பிரசுரங்களில் பல மொழிகளில் வெளியிடப்பட்டன. ஆனல் கடைசி நிமிடத்தில் குருதேவரின் ஆரோக்கியம் குன்றியதன் காரணமாக அந்த உலக யாத்திரை கைவிடப்பட்டது.

மேற்கத்திய சீடர்களில் சிலர் டி. வி. மற்றும் சினி கேமராக்களை ஆசிரமத்துக்குக் கொணர்ந்தனர். ஆசிரம

வாழ்க்கையைப் படமாக்கி தங்கள் நாடுகளுக்குக் கொண்டு சென்று காண்பித்தனர். தியோடார் வான் ரேட்லாக் என்பவர் கனடிய நாட்டு டி.வி.யில் குருதேவர் மற்றும் சிவானந்த ஆசிரமத்தைப் பற்றிப் பிரச்சாரம் செய்தார். அதுபோல பிரான்ஸ், பெல்ஜியம், ஸ்விட்ஸர்லாண்டு போன்ற நாடுகளிலும் டி.வி மூலம் பிரச்சாரம் நிகழ்ந்தது. இதனால் மேலும் அநேகர் குருதேவரின் இயக்கத்தைப்பற்றி அறியலாயினர். மேற்கத்தியப் பத்திரிகையாளர்கள் தங்கள் பத்திரிகைகளில் குருதேவரைப் பற்றிய கட்டுரைகளை வெளியிட்டனர். இந்தியாவைப் பற்றியும் சிவானந்த ஆசிரமம் பற்றியும் சுற்றுலா பற்றியும் நூல்கள் எழுதியவர்கள் விரிவாக குருதேவரின் தொண்டுகளை விரித்துரைத்தனர். ஜீன் ஹெர்பெர்ட் என்ற புகழ்பெற்ற நூலாசிரியர் நவீன இந்தியா கண்ட மாபெரும் ஆன்மீகத் தலைவர் சுவாமி சிவானந்தர் என்று தமது 'ஆன்மீக இந்தியா' என்ற நூலில் பல இடங்களில் குறிப்பிட்டார். உலகம் முழுவதும் குருதேவரின் பெயரும் புகழும் மேலும் பிரபலமடைந்தன.

### அவர்கள் கண்ட அற்புத மாற்றம்

இதனால் மேற்கத்தியரிடம் என்ன மாற்றம் ஏற்பட்டது அவர்கள் குருதேவரிடம் என்ன கண்டனர்?

இஸ்ரேலைச் சேர்ந்த அஸியா மேகீலி என்ற பெண்மணி தனது சொத்தை விற்று அந்தப் பணத்தில் ஆசிரமத்திற்கு வந்து குருதேவரைத் தரிசித்தாள். மனத்தில் ஏதேதோ சந்தேகங்களுடன் வந்த அவள் குருதேவருடன் நீண்ட தர்க்கம் நடத்தி அவற்றிற்கு விடைகாண வேண்டும் எனக் கருதினள். ஆசிரம அலுவலகத்திற்குச் சென்று குருதேவருக்கு முன்னால் அமர்ந்தாள். பின் என்ன நடந்தது? அவளே எழுதுகிறள்:

"தேஜோமயமான ஒரு ஒளிப்பிழம்பின் முன் நான் அமர்ந்திருந்தேன். அவருக்கு முன்னால் அமர்ந்து கொண்டி

ருந்த எனக்குப் பேச வேண்டிய நிர்ப்பந்தமே எழவில்லை. என் மனத்திலிருந்த ஐயங்கள் தாமாகவே ஒவ்வொன்ருகத் தீரலாயின. பாலைவனத்தின் மத்தியில் பசுஞ்சோலையைக் காண்பவனைப்போல் நான் பெரு மகிழ்ச்சி அடைந்தேன். பெறற்கரியதைப் பெற்றேன்,''

பாரிஸிலிருந்து வெளியாகும் 'ஸைக்' என்ற பத்திரிகையின் பிரதம ஆசிரியரான டாக்டர் மேரி சாய்ஸி என்ற பெண்மணி, 'பொதுவாக இந்தியத் துறவியர் எவருடனும் சரளமாகப் பழகமாட்டார்கள். அவர்களுக்கு ஐரோப்பியர்களைப் போல நவீன விஞ்ஞான அறிவும் கிடையாது' என்ற எண்ணத்துடன் ஆசிரமத்துக்கு வந்தார். ஆனால் குருதேவரைப் பார்த்ததும் அவளுக்குத் தன் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று.

''சுவாமி சிவானந்தாவிற்கு எல்லாம் தெரியும். மேற்கத்தியப் பல்கலைக்கழகத்தில் நவீன கல்வி கற்றவருக்குத் தெரிவதைக் காட்டிலும் பல மடங்கு அதிகம் அவருக்குத் தெரியும் என்பதை நான் கண்டேன். அவரிடம் இருந்த காந்த சக்தி ஒப்பற்றது. தெய்வீக வாழ்க்கையை ஒவ்வொரு விநாடியும் அவர் தம் வாழ்வில் கடைப்பிடித்ததுதான் என்னைக் கவர்ந்த முக்கிய அம்சமாகும். உள இயல், மருத்துவம், தத்துவம் அல்லது சமயம் எதுவாகட்டும்—அனைத்திலும் அவர் ஒப்பற்று விளங்குகிருர். இந் நூற்ருண்டில் நான் கண்ட ஒரு பூரண ஞானி அவர் என்ருல் மிகையாகாது'' என்று டாக்டர் மேரி சாய்ஸி தமது கருத்தை வெளியிட்டுள்ளார்.

அமெரிக்காவில் இருக்கும் ஸ்டான்போர்டு பல்கலைக்கழகம் டாக்டர் பிரெடரிக் ஸ்பீகல்பர்க் என்ற அறிஞரை நவீன இந்தியாவில் புராதன ஆன்மீகம் எந்த அளவுக்கு எஞ்சியிருக்கிறது என்பதைத் தெரிந்து வருவதற்காக அனுப்பியது. அவர் பாரதம் வந்து பல

ஆசிரமங்களுக்குச் சென்று பல மகான்களைத் தரிசித்தார். கடைசியில் ரிஷிகேசத்திலுள்ள சிவானந்தாசிரமத்திற்குச் சென்று குருதேவரையும் தரிசித்தார். ஆசிரமத்தைச் சுற்றிப்பார்த்து அதன் செயல் முறைகளை நேரில் அறிந்தார். அன்றைய இரவு சத்சங்கத்தில் குருதேவர் அவரைப் பேசச் சொன்ன பொழுது, 'பாரதத்தில் இன்று ஆசிரமங்களில் — குறிப்பாக மகான்கள் வழிகாட்டி நடாத்தும் புனித ஸ்தலங்களில்-ஆன்மீகம் வாழ்கிறது, தழைக்கிறது என்பதைக் காண்கிறேன். ஆனால் அரசாங்கம் மற்றும் பொது இடங்களில் அயல் நாடுகளில் அது இருக்கின்ற அளவு கூட இந்தியாவில் இருக்காதது கண்டு நான் வருத்தம் அடைகிறேன். சுவாமிஜி, நான் எனது பயணத்தில் பல மகான்களைத் தரிசித்திருக்கிறேன். ஆனால் மற்றவர்களிடம் நான் கண்ட ஒரு தாழ்மையுணர்ச்சி உங்களிடம் அறவே இல்லாததைக் கண்டு பெரிதும் போற்றுகிறேன், நீங்கள் உள்ளதை உள்ளவாறு சொல்லுகிறீர்கள். உங்களது வேடிக்கையும் விநோதமும் நிறைந்த குழந்தைத் தன்மை என்னைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. வேதாந்திகளிடம் சாளமும் சகஜமும் இல்லையெனில் அந்த வேதாந்தம் வறண்டு காணப்படுகிறது'' என்று குருதேவரிடம் தாம் கண்டதை ஒளிவு மறைவின்றிச் சொன்னார்.

## வேடிக்கையும் வேதாந்தமும்

'வேடிக்கையும் வேதாந்தமும்' என்ற ஒரு நூலையே குருதேவர் எழுதியிருக்கிறார். ஆன்மீகவாதி என்றால் சிரிக்கக் கூடாது, 'உம்' என்று முகத்தை வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று சிலர் எண்ணுவதைப் போல அல்லாமல் அவர் எப்பொழுதும் தானே ஆனந்தமயமாகவும் தன்னைச் சுற்றியுள்ளோரும் ஆனந்தமாக இருப்பதையும் விரும்பினார். சத்சங்கத்தில் கூட அவர் பொருள் பொதிந்த வேடிக்கையால் அருகில் இருப்போரைச் சிரிப்பில் ஆழ்த்துவார். ஒரு சமயம் அவர், ''சில சமயங்களில் துக்கப்படுவோரை சந்

தோஷப்படுத்துவதற்கும், 'உம்' என்று இருப்போரை சிரிக்க வைப்பதற்கும் நான் வேடிக்கையாகப் பேசுவதுண்டு. எனது சீடர் மற்றும் பக்தர்களுடன் சிரித்துப் பேசி மகிழ்வேன். ஆனால் ஒவ்வொரு வேடிக்கையான சொல், செயலின் பின்னும் ஒரு தத்துவம் மறைந்து கிடக்கும். அனைத்தும் தம் மனதில் பாடம் புகட்டுவதாக அமைந்திருக்கும்', என்று தம் செயலுக்கு விளக்கம் கொடுத்தார்.

ஒரு சமயம் ஒரு பிரெஞ்ச் சாது ஆசிரமத்தில் கொஞ்ச காலம் தங்கினார். திடீரென்று ஒருநாள் அவரைக் காண வில்லை. அவர் எங்கே போனார் என்பது எவருக்கும் தெரிய வில்லை. சிலநாள் கழித்து அவர் மீண்டும் அங்கே வந்து சேர்ந்தார். குருதேவர் அவரிடம், 'ஓம் நமோ நாராயணாய! எப்பொழுது வந்தீர்கள்! எப்படி இருக்கின்றீர்கள்?'' என்று விசாரித்த பொழுது, அவர், 'சுவாமிஜி! என்னை மன்னிக்கவும். உங்களிடம் சொல்லாமல் நான் சென்றுவிட்டேன். பத்ரிநாத் சென்று விட்டு இன்றுதான் திரும்பி வந்தேன்', என்றார், அதைக் கேட்ட குருதேவர் சிரித்துக்கொண்டே, 'அப்படியா, ரொம்பசரி.இதற்கு இங்கே பிரெஞ்சுலீவ் என்று பெயர். நீங்களே ஒரு பிரெஞ்சுக்காரர் என்பதால், இந்த லீவை எடுப்பதில் உங்களுக்குப் பூரண உரிமை உண்டு'. என்று சொல்லி அனைவரையும் வயிறுகுலுங்கச் சிரிக்க வைத்தார். தன்னைக் குருதேவர் கோபிப்பார் என்று எதிர் பார்த்த சாதுவுக்கு அவர் இவ்வளவு பெருந்தன்மையுடன் மன்னித்ததைப் பார்த்ததும் ஒன்றும் புரியாமல் நின்றார்.

ஒரு சீடர் 'இந்தியாவின் தலைவிதி' என்ற தலைப்பில் ஒருநூலை எழுதி வெளியிட்டு அதன் ஒரு பிரதியை குருதேவரிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக்கொண்டு நன்றி சொன்ன குருதேவர், 'அது சரி, உங்கள் தலைவிதி எப்படி?,' என்று கேட்டார். 'என் தலைவிதியா?......' என்று அவர் விழித்தார். அனைவரும் 'கொல்' என்று சிரித்தனர். சுவாமிஜி

அவரை அன்போடு உற்று நோக்கினார். அந்த ஒரு பார்வையில் எவ்வளவோ பொருள் பொதிந்திருந்தது!

ஒரு நாள் காலை சத்சங்கத்தின்போது சீடர்கள் வந்திருந்தோருக்கு டீ காப்பி விநியோகம் செய்து கொண்டிருந்தனர். அப்போது கைதவறி ஒரு டீக் கோப்பை கீழே விழுந்து பல சுக்கல்களாக உடைந்தது. அதைக் கண்ட குருதேவர் சிரித்துக்கொண்டே 'ஆரம்பத்தில் ஒன்றாக அதுஇருந்தது, பின் பலவாக ஆயிற்று', என்ற உபநிடத மேற்கோளைக் எடுத்துக் கூறினார்.

சில அயல் நாட்டவர்கள் பாரதத்திற்கு வந்து நேராக சிவானந்தாசிரமம் சென்று, குருதேவருடன்

தங்கிவிட்டு வேறு எங்கும் செல்லாமல் நேராகத் தம் நாட்டிற்குத் திரும்புவர். பாரதத்திற்கு அவர்கள் வந்தது முதல் தடவையே எனினும் குருதேவர் அவர்களிடம் ஏற்படுத்திய ஆன்மீகப் பதிவுகள் அந்த அளவுக்கு நிரந்தரமானவையாக இருந்தன. இவ்வளவுக்கும் குருதேவர் அவர்களுடன் நீண்ட தத்துவ சம்பாஷணைகளில் கூட ஈடுபட மாட்டார். சாதாரணமாக அனைவரிடமும் விசாரிப்பதுபோல, 'ஆசிரம சாப்பாடு எப்படியிருக்கிறது, தங்கும் வசதிகள் எவ்வாறு உள்ளன, சீதோஷ்ண நிலை ஒத்துக்கொள்கிறதா', என்பன போன்ற கேள்விகளைத்தான் கேட்டிருப்பார். ஆனால் அவருடைய சத்சங்கத்தின் மதிப்பு அத்தகையது.

குருதேவர் ஆங்கிலத்தில் சிந்தித்தார். ஆங்கிலத்தில் பேசினார். ஆங்கிலத்தில் எழுதினார். ஆங்கிலத்தில் பாடினார். சில வேளைகளில் ஆங்கிலேயரைப் போலவும் நடந்து கொண்டார். குறிப்பாக காலம் தவறாமை, சொன்ன சொல்லைக் காத்தல் ஆகியவற்றில் ஆங்கிலேயரையும் அவர் மிஞ்சி நின்றார். எனவே மேனாட்டவர் அவரைத் தங்களுள் ஒருவராகக் கருதியதில் ஆச்சரியம் ஏதுமில்லை.

*அவரவர் வழியில் அவர் செய்த உதவி*

பல கிறிஸ்தவர்கள் குருதேவர் தங்கள் சமயத்தைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளப் பெரிதும் உதவினர் என்பதை ஒப்புக்கொண்டனர். லாஸ் ஏஞ்ஜல்ஸைச் சேர்ந்த லோகன் வில்ஷைர் என்பவர், 'சுவாமி சிவானந்தர் என்னை ஏசுநாதருக்கு மிக அருகில் அழைத்துச் சென்று விட்டார். இதுவரை சடங்குகள் தான் சமயம் என்று எண்ணியிருந்த எனக்கு சுவாமிஜி தத்துவ அறிவைப் புகட்டி அந்தர்முகமாக்கி விட்டார்' என்று கூறுகிறார்.

வெறும் தத்துவச் சொற்பொழிவுடன் நில்லாமல் தொண்டின் உருவகமாகக் குருதேவர் வாழ்ந்து காட்டியதுதான் மேனாட்டவர்களைப் பெரிதும் கவர்ந்தது. 'நல்லவராக இருங்கள். நல்லதைச் செய்யுங்கள்', என்ற தமது போதனையை தமது அன்றாட வாழ்வில் ஒவ்வொரு வினாடியும் வாழ்ந்து காட்டினார்.

ஆசிரமத்தில் சில காலம் தங்கிய லூரிலியா வினாகு என்பவர் தமது அனுபவத்தைப் பற்றி எழுதுகையில்,

"சொல்வது போல நடந்து காட்டும் குருதேவரைப் போன்ற மகான்களை இன்று நம்மிடையே காணுதல் மிகவும் அரிது. பசித்தோருக்கு உணவு வழங்கும் பொழுதும், நோயுற்றோருக்குச் சிகிச்சை அளிக்கும் பொழுதும், துயருறுவோருக்கு ஆறுதல் கூறும் பொழுதும், குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடும்போதும், பக்தர்களை வரவேற்று உபசரிக்கும் பொழுதும் ஒரு பேரவதார மூர்த்தி இவ்விதம் மனித உருவில் உங்கள் முன்னால் அன்பின் வடிவமாய்த் திகழ்கிறது என்பதை உங்கள் கண்களாலேயே காண்கையில் அவரது பாதங்களில் மண்டியிட்டு வணங்க வேண்டும் என்ற உணர்ச்சி தானாகவே உங்களிடம் எழுகிறது. பிறர்படும் துயரங்களைத் தன்னுடைய அவர் கருதினார். அவரது திருக்கரங்களிலிருந்து பெற்ற பூவோ, பழமோ, புத்தகமோ எதுவாயினும் அதைப்

பெறற்கரிய பிரஸாதமாக பக்தர்கள் கருதினர்", என்று குறிப்பிடுகிறார். 'கிழக்கு கிழக்கே, மேற்கு மேற்கே, இரண்டும் ஒரு போதும் இணையாது', என்ற ருட்யார்டு கிப்ளிங்கின் வார்த்தைகளை குருதேவர் பொய்ப்பித்து விட்டார். காரணம், சிவானந்தாசிரமத்தில் ஆசார சீலமான தென்னிந்திய அந்தணர், மேற்கத்தியப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரியும் ஒரு கிறிஸ்துவர், முஸ்லிம் நாட்டிலிருந்து வந்த ஒரு முஸ்லிம் பக்தர், ஜப்பானிலிருந்து வந்த ஒரு புத்த பிக்ஷு போன்ற பல்வேறு சமயத்தினரும், பல்வேறு நாட்டினரும் குருதேவரின் முன்னர் அடுத்தடுத்து அமர்ந்து மஹா மந்திரத்தையும் மஹாம்ருத்யுஞ்ஜய மந்திரத்தையும் பக்தியுடன் பாராயணம் செய்த அரிய காட்சி உலகம் ஒரு குடும்பம் என்ற உண்மையை நம்கண் முன் கொணர்ந்தது. 'மனித குலம் முழுவதும் ஒரே இறைவனின் படைப்பே. அனைவரும் சகோதர சகோதரிகளே, அரசியலால் முடியாத மனித சமுதாய ஒற்றுமை ஆன்மீகத்தால் நிச்சயம் முடியும்', என்ற உண்மையையும் அந்த அரிய காட்சி நமக்கு எடுத்துப் புகட்டியது.

'அனைவரிலும் ஆண்டவனைப்பார்' என்ற தமது போதனையை குருதேவர் தாமே வாழ்ந்து காட்டியதன் மூலம் நமக்கு விளக்கினார். மிரியம்ஓர் என்ற சுவிட்சர் லாந்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி ஆசிரமத்துக்கு முதன் முறை விஜயம் செய்த போது தான் கண்ட காட்சியை மிக அற்புதமாக விவரிக்கிறார்.

"ஆஜானுபாகுவான தோற்றம், முதிர்ந்த வயது, ஒளி மயமான முகம் அவர் ஐரோப்பிய முறை கோட் ஒன்றை அணிந்திருந்தார். ஆனால் 'காலில் செருப்பு கிடையாது. அன்பும் அருளும் ஒருங்கிணைந்த உருவம். ஒரு ஏழைப் பிச்சைக்காரனை அவர் மும்முறை வலம் வந்து கொண்டிருந்தார் வலம் வந்து முடித்ததும் அந்த அருளாளர் அந்தப் பிச்சைக்காரனை சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம்

செய்தார். பின்னர் அவனை ஆசிரம சமையலறைக்கு அழைத்துச் சென்று ஏனைய விருந்தினரோடு சமமாக அமர்த்தி தானே உணவு பரிமாறி தாமும் அவனுடன் சாப்பிட்டார்.''

இவர்தான் குருதேவர் சிவானந்தர் என்பதை அந்தப் பெண்மணி பின்னர் தெரிந்து கொண்டார்.

குருதேவருடன் தாம் பெற்ற அனுபவத்தை அந்தப் பெண்மணி 'லா டிரிபியூன் டிஜெனிவா' என்ற சுவிட்சர்லாந்து பத்திரிகையில் விவரமாக எழுதினர். அதில் அவர், ''நீங்கள் இங்கு வந்த பொழுது பார்த்த அந்த நபர் ஒரு ஹரிஜன். மரண காலம் சமீபத்து விட்டதாகக் கருதிய அவன் என்னைப் பார்த்துப்போக வந்தான். நான் எங்கள் சம்பிரதாயப்படி அவனை நமஸ்காரம் செய்தேன். அவனை ஆசிரம ஆஸ்பத்திரியில் தங்கி சிகிச்சை பெறுமாறு கேட்டுக் கொண்டேன். அவனை எங்கள் அன்பு காப்பாற்றி விடும் என்பது என் நம்பிக்கை.''

''உள்ளது ஒரே இனம், அதுவே மனித இனம். தீண்டாமை என்பது இழிவானது. சமயத்தில் அதற்கு எந்தவித இடமும் கிடையாது. அது ஒரு மடமை. அதற்கு இன்றும் பலர் பலியாவது வருத்தப்பட வேண்டிய விஷயமாகும். அதை அனைவரும் எதிர்த்துப் போராட வேண்டும். சமுதாயத்திலிருந்து அதை வேருடன் களைந்து எறிய வேண்டும்,'' என்று தம்மிடம் குருதேவர் எடுத்துரைத்ததாக எழுதுகிறார்.

இன்று தெய்வ நெறிக் கழகக் கிளைகள் நூற்றுக் கணக்கில் அயல் நாடுகளில் தெய்வநெறியை மக்களிடையே நன்முறையே பரப்பி வருகின்றன. சுவாமி ஸஹஜானந்தாவின் தலைமையில் தென்னாப்பிரிக்காவில் தெய்வ நெறி இயக்கம் மிகச் சிறந்த முறையில் பரவி வருகிறது. குருதேவரின் நூல்களை இலட்சக்கணக்கில் அச்சிட்டு அவர்கள் விநியோகித்து வருகின்றனர். இனவெறிக்குப் பெயர் போன

அந்த நாட்டின் தெய்வநெறிக் கழகம் பல பள்ளிகளை நடத்தி குருதேவரின் போதனைகளைப் பரப்பி வருகிறது. சுவாமி சச்சிதானந்தா, சுவாமி விஷ்ணு தேவானந்தா போன்றோர் அமெரிக்காவிலும், கனடாவிலும் குருதேவரின் அடிச்சுவட்டில் யோகத்தைப் பரப்பி வருகின்றனர். மாரிஷியஸ் தீவைத் தலைமையகமாகக் கொண்டு குருதேவரின் அந்தரங்க சீடர்களில் ஒருவரான சுவாமி வெங்கடேசானந்தா நல்ல பல பணிகளைச் செய்தார். இன்னும் எத்தனை எத்தனையோ இடங்களில் குருதேவரின் சீடர்கள் மௌனமான முறையில் மகத்தான தொண்டாற்றி வருகிறார்கள்.

அமெரிக்காவில் உள்ள ஸ்டான் போர்டு பல்கலைக் கழகத்தில் குருதேவரின் பல தத்துவ நூல்கள் பாடப் புத்தகங்களாக வைக்கப்பட்டுள்ளன. டாக்டர் ஸ்பீகல்பெர்க் போன்றோர் குருதேவரை உள இயல்விஞ்ஞான அடிப் படையில் ஆராய முயன்றனர். ஆனால் அத்தகைய உள இயல் சோதனை - சோதனைகளுக்கெல்லாம் அவர் அப்பாற்பட்டவர் என்பதைப் பின்னர் கண்டுகொண்டனர்.

அமெரிக்க மக்களுக்கு ஒரு முறை அவர் விடுத்த செய்தியில், 'நீங்கள் விண்ணை வென்று விட்டீர்கள். பூமிக்குள் குடைந்து சென்றிருக்கிறீர்கள். ஆழ் கடலுக்குள் மூழ்கி வெளி வந்திருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் சந்தோஷமாக இருக்கின்றீர்களா? தூய அப்பழுக்கற்ற ஆனந்தத்தினால் தான் ஒரு ஆன்மீகவாதி மனித முயற்சிகளை எடை போடுகிறான். பெறற்கரிய ஆனந்தம் - புற உலகை வெல்வதனால் அல்லாமல் அக உலகமாகிய மனதை வெல்வதனாலேயே — பெறப்படுகிறது. எனவே உங்களுக்குள்ளே மூழ்குங்கள், அக முகமாக ஆராய்ச்சி செய்யுங்கள். உங்கள் சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பின் பற்றுகிறீர்களா என்று உங்களை நீங்களே கேட்டுப் பாருங்கள். 'இல்லை' என்று உள்ளேயிருந்து ஒலி வருமானால், 'இந்த

விடி முதல் "நான் என் சமயக்கோட்பாடுகளின்படி நடப்பேன்"! என்று உறுதி கொள்ளுங்கள். இரவைப் பகல் பின்பற்றுவது போல மன அமைதிதானே வரும்', என்று அறிவுரை கூறுகிறார். ஆன்மீக அடிப்படையில் அமையாத வெறும் உலகாயத முன்னேற்றம் உண்மை இன்பத்தையும் அமைதியையும் அளிக்காது என்பது குருதேவரின் கருத்து.

கம்யூனிஸ்ட் நாடான செக்கோஸ்லோவாகியாவிலிருந்து ஒரு பேராசிரியர் குருதேவரை வந்து தரிசனம் செய்கிறார். அவருடன் ஒரு பத்திரிகை நிருபரும், ஒரு பெண்மணியும் வந்திருக்கின்றனர். 'சுவாமிஜி! நான் உங்கள் நூல்கள் சிலவற்றைப் படித்திருக்கிறேன். உங்களது நூல்கள் பூராவும் எங்களிடம் இல்லை. ஆசிரம மாதாந்திர பத்திரிகையான 'தெய்வீக வாழ்க்கை' தவறாமல் வந்து கொண்டிருக்கிறது. எங்கள் நாட்டில் நீங்கள் மிகவும் பிரபலமாகியிருக்கிறீர்கள். எனவே உங்களது ஆசிச் செய்தியை, குறிப்பாக உங்களது இனிய தெய்வீகக் குரலை நாங்கள் டேப் செய்ய விரும்பு கிறோம். அதைக் கேட்டு எங்கள் நாட்டு மக்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைவார்கள். எங்களுக்கு அந்த பாக்கியம் கிடைக்குமா?', என்று அந்தக் குழுவில் இருந்த பேராசிரியர் குருதேவரிடம் வேண்டுகோள் விடுத்தார். உடனே மலர்ந்த முகத்துடன் குருதேவர் சுருக்கமாக தமது ஆசிச் செய்தியை அளித்தார்.

## ஆனந்த குடீரமே என் உலகம்

திரும்பத் திரும்பப் பலமுறை குருதேவரின் வெளி நாட்டு பக்தர்கள் அவரைத் தங்கள் நாட்டிற்கு ஒரு முறையாவது விஜயம் செய்யுமாறு மன்றாடினார். 'உங்களது அன்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். உலகெங்கிலுமிருந்து மக்கள் இங்கே வந்து ஆன்மீக உதவியைப் பெறுகின்றனர். தபால் மூலமாகவும் நான் பலருக்கு வழிகாட்டுகிறேன். உலகின் எல்லா பாகங்களுக்கும் தெய்வீகச் செய்தி பரவவேண்டும் என்பது தான் முக்கியமே தவிர இந்த இடத்திலிருந்து

கிளம்பி நான் யாத்திரை செய்யவேண்டிய அவசியமில்லை", என்று குருதேவர் அதற்கு மறுமொழி கொடுத்தார்.

மற்ெருரு சமயம் அவர் தாம் ஏன் யாத்திரைகளை மேற்கொள்ளவில்லை என்பதற்கான காரணத்தைத் தெளிவாக விளக்கினர்.

எப்பொழுதும் ஊர் சுற்றிக்கொண்டிருப்பது என்பது விரும்பத்தக்கதல்ல. சொற்பொழிவு செய்துஒரு சிலரைத் தான் உங்களால் தட்டி எழுப்ப முடியும். ஒரு சிறு கூட்டத்தாருக்குத்தான் உங்கள் சொற்கள் செவிகளில் விழும். ஆனல் புத்தகங்களின் வடிவில் நிரந்தரமாக அவர்கள் மனதில் பதிவை ஏற்படுத்தலாம். காதில் விழுந்த சொற்கள் சில நாட்களுக்குள் மறந்து போகும். நான் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்தால் இத்தனை புத்தகங்களை என்னல் எழுதியிருக்க முடியாது. மக்களின் நன்மைக்காக, மக்களுக்கு உண்மையாகத் தொண்டு செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில்தான் நான் இந்த இடத்தில் என்னைத் தனிமைப்படுத்திக் கொண்டேன். ஆன்மீக இலக்கியத்தை உருவாக்க வேண்டுமானல் இத்தகையதனிமை மிக மிக அவசியம்". ஒரு ஆன்மீக திக் விஜயத்தை மேற்கொண்டு குருதேவர் உலகெங்கும் உள்ள மக்களுக்கு அருளாசி புரிய வேண்டும் என்று அவரைச் சில இந்திய பக்தர்கள் கேட்டுக் கொண்ட பொழுது, "எனது இங்கிலாந்து இங்கே, எனது ஜெர்மனியும் இங்கே" என்று சுருக்கமாகக் கூறிவிட்டார். கங்கை மற்றும் இமயமலையின் பால் குருதேவர் கொண்டு விளங்கிய அன்பு தெய்வீகமானது. தான் போகாவிட்டாலும் தமது மூத்த சிஷ்யர்கள் சிலரைக்குருதேவர் பல அயல் நாடுகளுக்கு அனுப்பி தெய்வநெறியைப் பரப்பச் செய்தார். குருதேவரின் நூல்களுக்கு அடுத்தபடியாக, அவரது சீடர்கள் செய்த தெய்வீகத்திருப்பணி குறிப்பிடத்தக்கது.

———

# 11

## குருவருளால் நிகழ்ந்த அற்புதங்கள்

உண்மையான ஆன்ம சாதகர்கள் மந்திர தந்திரங்கள், மாயாஜாலங்கள் மற்றும் சித்திகளுக்குப் பின்னால் சென்று மயக்கம் கொள்ளலாகாது என்று குருதேவர் அடிக்கடி தமது நூல்களில் குறிப்பிடுவார். உலகம் போற்றிய ஒப்பற்ற அவதார புருஷராக விளங்கிய அவர் வெளிப்படையாக எந்தவித சித்தியையும் செய்து காட்டியது கிடையாது. அவரது 'ஆன்மிக அனுபவங்கள், (Spiritual Experiences) என்ற நூலில் சித்துக்கள் ஒருவரிடம் எப்படி ஏற்படுகின்றன, அவற்றை சாதகர்கள் எப்படிப் பயன்படுத்த வேண்டும், சாதனையின் ஒவ்வொரு படித்தரத்திலும் என்னென்ன புதுப் புது ஆற்றல்களும் சக்திகளும் சாதகர்களிடம் வெளிப்படும் என்பதைப் பற்றியெல்லாம் மிக அழகாக அனைவருக்கும் புரியும் வகையில் எடுத்துரைக்கிறார். எவராவது அவர் முன்னிலையில் சித்துக்களைச் செய்து காட்டினாலும் அதை அவர் பாராட்டமாட்டார். மாறாக சித்துக்களைத் தவறாகப் பயன்படுத்தலாகாது என்று அவர்களுக்கு அறிவுரை கூறுவார்.

ஒரு சமயம் கோடை வெயில் ரிஷிகேசத்தில் தகித்துக் கொண்டிருந்தது. தமிழ் நாட்டிலிருந்தது காரைச் சித்தர்

என்பவர் அப்பொழுது ஆசிரமத்திற்கு விஜயம் செய்தார். குருதேவரை வணங்கி நின்ற அவர் தமது கைகளை அந்தரத்தில் ஆட்டினார். உடனே எங்கிருந்தோ ஒரு எலுமிச்சம் பழம் வந்து அவர் கையில் விழுந்தது அதை அவர் குருதேவரிடம் கொடுத்தார். அப்பொழுது மாம்பழ சீசன் ஆனதால் குருதேவர் தமது சீடரை நோக்கி, 'இவருக்கு நல்ல மாம்பழம் கொடுங்கள்' என்றார், சுவாமிஜி, இதோ உங்கள் பக்கத்திலேயே மாம்பழக்கூடை இருக்கிறது,' என்றார் சீடர், "இது அவ்வளவு பழுக்கவில்லை, உள்ளேயிருந்து நல்ல பழுத்த பழமாகக்கொண்டு வாருங்கள்,' என்று குருதேவர் கூறவே, நல்ல பழங்கள் ஒரு தட்டில் கொண்டுவந்து அவரிடம் கொடுக்கப்பட்டன. அவற்றிலிருந்து நல்ல கனிந்த பழம் ஒன்றைப் பொறுக்கிக் குருதேவர் அந்த சித்தரிடம் கொடுத்தார். சித்தர் அதை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு குருதேவரை வணங்கினார். அத்தனை பழங்கள் அருகில் இருக்க குருதேவர் கனிந்த பழத்தைத் தேடிப் பிடித்து அவருக்குக் கொடுத்ததன் உட்பொருள் என்னவாக இருக்க முடியும்? இறைவன் தந்த இனிய கனி இங்கே இருக்க, மாயா ஜாலத்தால் நீர் எலுமிச்சம் பழத்தை உண்டாக்கியது செய்யத் தகாதது என்பதை அவருக்குச் சொல்லாமல் சொல்லி விளக்கினார்.

### தேடிய புத்தகம் ஓடிவந்தது

குருதேவரின் அமெரிக்க பக்தர் டாக்டர் ஸ்பீகல்பர்க் என்பவர் ஒரு சமயம் பல்வேறு சமயங்களை ஒப்புநோக்குவதற்காகப் பயன்படும் நூல் ஒன்றை மிக ஆவலுடன் தேடிக்கொண்டிருந்தார். அந்த சமயத்தில் குருதேவர் அவருக்குத் தன்னுடைய 'உலக சமயங்கள்' என்ற நூலை அனுப்பிவைத்தார். தாம் எந்தவித கடிதமும் எழுதாமலேயே குருதேவரிடமிருந்து கிடைக்கப்பெற்ற அந்த நூலைக் கண்டதும் அந்தப் பேராசிரியர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. சந்தோஷத்தில் துள்ளிக் குதித்த அவர் உடனே அந்தப் புத்தகத்தின் 200 பிரதிகளுக்கு ஆர்டர் அனுப்பினார்.

தான் ஆவலுடன் தேடிக்கொண்டிருந்த புத்தகம் அதுதான் என்றும், உரிய சமயத்தில் தனக்கு அதை அனுப்பி உதவிய குருதேவருக்கு எப்படி நன்றி செலுத்துவது என்று தனக்குத் தெரியவில்லை என்றும் அவர் ஆசிரமத்துக்குக் கடிதம் எழுதினர்.

தனக்கு அதிகம் சீடர்களைச் சேர்க்கவேண்டும், தனக்குப் பின்னல் தமது சிஷ்யர்களின் ஒரு பெரும் கூட்டம் திரண்டு வரவேண்டும் என்ற எண்ணம் குருதேவரிடம் கொஞ்சமும் கிடையாது. அதனுல் தான் எந்தவித சித்தியையும் பலர் மத்தியில் அவர் வெளிப் படுத்தியது கிடையாது. ஆனுல் குருவருளால் நிகழ்ந்த எண்ணற்ற அற்புதங்கள் பற்றி உல கெங்கினுமிருந்து கடிதங்கள் தினமும் ஆசிரமத்தில் வந்து குவிந்த வண்ணமிருக்கும். என்னென்ன இடத்தில் எப்படி எப்படி நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன என்பதைப் பக்தர்கள் அப்படியே அவருக்கு எடுத்துரைத்தார்கள். பெரும் பட்டம் பெற்றவர்கள், பதவியிலுள்ளோர் தங்கள் வாழ்வினில் நம்ப முடியாத அளவில் அவரது அருளால் நிகழ்ந்த அற்புதங் களைப் பற்றி நேரிலும் தபாலிலும் எடுத்துரைத்தனர். அதையெல்லாம் கேட்டுவிட்டு ஒன்றுமே தெரியாதவர் போல, 'அப்படியா. எல்லாம் பகவான் செயல்', என்று ஒரே வரியில் பதில் சொல்லி விடுவார்.

அனைவருக்கும் அருளிய அருளாளர்

ஜாதி, மத, இன, மொழி, நாடு என்ற வேறுபாடு எதுவுமின்றி உலகின் பல மூலைகளிலும் உள்ள பக்தர்கள் குருவருளைத் தங்கள் வாழ்வினில் உணர்ந்து அனுபவித் தனர். அவர்களில் குருதேவரை நேரில் தரிசனம் செய் தவர்கள் சிலர், தரிசனம் செய்யாதவர்கள் பலர், எல்லோர் மீதும் ஒரே விதத்தில் அவர் தன் அருளைப் பொழிந்தார். விளக்கின் அடியில் இருள் இருப்பது போன்று! அவருக்கு மிக அருகில் இருந்த சிலரைக் காட்டிலும், எங்கோ பெல்ஜி யத்திலும், சிட்னியிலும், மதுரையிலும், டர்பனிலும்,

நியூயார்க்கிலும் இருந்த பக்தர்கள் அவரதுபெருமையை அதிகம் உணர்ந்தனர். அற்புதங்களை அனுபவித்தனர். 'எனது தீராத வியாதி குணமாயிற்று', 'பெரும் விபத்தி லிருந்து நான் தப்பினேன்,' சிக்கலான தேர்வில் வெற்றி பெற்றேன்,' 'சாதனையில் எதிர்பாராத முன்னேற்றம் அடைந் தேன்' என்று பலர் பலவிதமாக குருவருளால் தாம் பெற்ற அனுபவங்களை எடுத்துக் கூறினர். இது போன்ற அற்புதங் களைப் பிறர் சொல்லும்பொழுது நம்பாத சிலர், தங்கள் வாழ்விலும் அவற்றை உணர்ந்த பின்னர் குருதேவரைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றலாயினர். எவ்விதம் அவரவர் சாப்பிட்டால்தான் அவரவர் பசி அடங்குமோ, அது போல ஆன்மீக வாழ்விலும் குருவருளை நாமாக உணர்ந்த பின்னரே குருவிடம் நமது பக்தியும் சிரத்தையும் உறுதிப்படுகிறது. சில வேளைகளில் சில பக்தர்களின் அனுபவங்களைக் கேட்கையில் 'இப்படியும் நடந்திருக்குமா?' என்ற சந்தேகம் எழத்தான் செய்யும். அந்த அளவுக்கு அவை பிரமிப்பூட்டுபவையாக இருக்கும். ஆனால் அவை உண்மையில் நிகழ்ந்தன என்று அந்த நபரே நம்மிடம் உறுதி அளிக்கையில், 'மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம்' (ஊமையும் பேசுவான், முடவனும் மலையைத் தாண்டுவான்) என்ற பகவத் கீதையின் பிரார்த்தனை சுலோகம் நம் நினைவிற்கு வரும்.

இறைவனது அருளிருந்தால் எதுதான் நடக்காது? எல்லாம் நடக்கும். குருவும் இறைவனும் வேறல்லவே! குருவே கண் கண்ட தெய்வம். 'குரு பிரம்மா குரு விஷ்ணு குரு் தேவோ மஹேஸ்வர:! குருஸ் ஸாக்ஷாத் பரப்பிரம்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:!!' என்று மும்மூர்த்திகளும் குருவும் ஒன்றே என்று குருகீதை பேசும். இது உண்மையே என்பதை எத்தனையோ பக்தர்கள் தங்கள் வாழ்வில் உணர்ந் திருக்கின்றனர்.

### வியாதிகளை விரட்டிய வித்தகர்

புதுக்கோட்டையைச் சேர்ந்த தியாகராஜன் என்ற அன்பர் எவரோ செய்த செய்வினைக்கு உட்பட்டு மிகவும்

கஷ்டப்பட்டார். பசியுடன் சாப்பிட உட்கார்ந்தால் தட்டில் போடப்பட்ட சாப்பாடு அவர் கண்களுக்கு ரத்தமும் சீழுமாகத் தோன்றும். இந்த நிலையில் இருபது நாட்களுக்கு அவர் பட்டினி கிடக்க நேரிட்டது. மேலும் அதைத் தாங்க முடியாமல் குருதேவருக்கு எழுதினார். குருதேவர் உடனே ஆசிரம பிரஸாதத்தை அவருக்கு அனுப்பினார். அது கிடைக்கப்பெற்ற வினாடியிலிருந்து அவரை வருத்திய அந்தத் துன்பம் அவரை விட்டு நீங்கியது. அவர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்.

சீனாவைச் சேர்ந்த ஒரு பக்தர் அழுகிச் சொட்டும் எக்ஸிமா வியாதியினால் ரொம்ப அவஸ்தைப்பட்டுக் கொண் டிருந்தார். அவர் ஒரு முறை ஆசிரமத்துக்கு விஜயம் செய்திருந்த பொழுது அவரது நோயைக் குருதேவர் கண்டு கொண்டார். உடனே அவரை அன்புடன் தம் அருகில் அழைத்து எக்ஸிமா இருந்த உடற்பகுதியைத் தொட்டார். என்ன ஆச்சரியம்! வருடக் கணக்கில் வருத்திய அந்நோய் கணப்போதில் நீங்கியது. திரும்ப அது வரவேயில்லை. லாட்வியாவில் உள்ள ரீகா என்ற பெண்மணி ஒரு வியாதி யால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாள். டாக்டர்களால் இன்னவியாதி என்று குறிப்பாகச் சொல்லமுடியவில்லை. அந்த அம்மையார் தன் குறையைக் குருதேவரிடம் தெரிவித் தார். குருதேவர் சில எளிய அறிவுரைகளைச்சொல்லி அவரைத் தினமும் அதிகாலையில் தியானம் செய்யும்படிச் சொன்னார் அவரும் அப்படியே செய்ய அவரது வியாதி விரைவிலேயே அவரை விட்டு அகன்றது.

சிவானந்தாசிரமத்தில் சுவாமி ஜ்யோதிர்மயானந்தர் அப்பென்டிஸைடிஸ் வியாதியால் அவதிப்பட்டுக் கொண்டி ருந்தார். தாங்க முடியாத வலி. ஆபரேஷன் செய்து கொள்ள விரும்பாத அவர், குருவருளால் அது எப்படியும் குணமாய்விடும் என்று நம்பினார். ஒரு நாள் குருதேவர்

அவரை உற்று நோக்கினார். அவ்வளவுதான், வலி மறைந்தது. அப்பென்டிஸைடிஸும் அகன்றது. அவர் பூரண ஆரோக்கியம் பெற்றார்.

ஹாரி டிக்மென் வருடக்கணக்கில் ஹெர்னியாவினால் கஷ்டப்பட்டார். வயதானவர்களிடம் பொதுவாக அது குணமாகாது என்று ஒரு வைத்தியர் அவரிடம் சொன்னார். குருதேவருக்கு டிக்மென் தன் நோய்பற்றி எழுதினார். உடனே குருதேவர் சர்வாங்காசனம் மற்றும் கருடாசனம் பயிலுமாறு அவருக்கு அறிவுரை கூறினார். அவரும் அப்படியே செய்ய ஹெர்னியா மாயமாய் மறைந்தது. அதன் பின் இருமுறை மருத்துவப்பரிசோதனை செய்து கொண்டதில் அந்த வியாதி அவரிடம் இருந்த அடையாளம் கூடத் தென்படவில்லை என்று டாக்டர்கள் சொன்னார்கள். "நான் அதற்கு முன்னரும் ஸர்வாங்காசனம் செய்திருக்கிறேன். ஆனால் சுவாமிஜியின் ஆசீர்வாதங்களைப் பெற்ற பிறகு அதிசயமான முறையில் அந்த வியாதி மறைந்து போயிற்று", என்று தமது அனுபவத்தைப் பற்றி டிக்மென் குறிப்பிடுகிறார். அவரது வியாதியைக் குணமாக்கியது ஆசனங்களா? அல்லது குருவருளா? அல்லது இரண்டுமா!?

"இன்னதென்று சொல்ல முடியாத ஒரு வித தோல் வியாதியினால் நான் மிகவும் வருந்தினேன். குருதேவர் அனுப்பிய விபூதி பிரஸாதத்தை அதன் மீது இட்டேன் உடனேயே குணமடைந்தேன்".

சென்னையிலிருந்து ஒரு இளம் பட்டதாரி எழுதிய கடிதம் இது.

"ஆஸ்பத்திரியில் அனைவரும் கைவிட்ட நிலையில் நான் படுக்கையில் அழுது கொண்டு படுத்துக்கிடந்தேன். அந்த சமயத்தில் என் நண்பர் ஒருவர் குருதேவரின் பிரசுரம் ஒன்றை என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார். அதை நான் படித்தேன், மீண்டும் படித்தேன். மீண்டும் மீண்டும்

படித்தேன். என்னையறியாத ஒரு உத்வேகம் என்னுள் தோன்றியதை உணர்ந்தேன், பூரண குணமடைந்து நட மாடலானேன்.''

*சித்திகளைப் பற்றிய ரகசியம்*

ஸ்ரீ நகரிலிருந்து ஒரு வக்கீல் எழுதிய கடிதம் இது.

''சுவாமிஜி, எத்தனை எத்தனையோ பேர் என்ன வெல்லாமோ சித்திகளை நீங்கள் செய்வதாகச் சொல்கிறார் களே, இது பற்றி வெளிப்படையாக அனைவரும் அறியும் வகையில் நீங்கள் ஏதாவது விளக்கம் கொடுத்தால் என்ன?'' என்று ஒரு முறை குருதேவரிடம் கேட்டார். அதற்கு குரு தேவர் கூறிய விளக்கம் கீழ்வருமாறு:-

''மகான்களின் அருளால் தீராத வியாதிகள் குண மாகும், சாகக் கிடப்பவன் கூட பிழைத்துக் கொள்ளு வான், இவையெல்லாம் நடக்கக் கூடியவையே. இவை யெல்லாம் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டவை. சாதாரண இயற்கை விதிகளுக்கு அப்பாற்பட்டதொரு விதிக்கு உட்பட்டு இயங்கும் இவற்றைப் பற்றி அவற்றிற்கு உட் படும் நபருக்கு எதுவுமே தெரியாது.

எனவே இவற்றைப் பற்றி அவன் பெருவியப்பு அடை கிறான். காரணம் கண்ணுக்குப் புலனாகாமல், காரியம் அதாவது விளைவு மட்டும் செய்கிற பொழுது அது ஏதோ இயற்கைக்கு அப்பாற்பட்டது என்று நீங்கள் கருதுகிறீர்கள்' என்று சித்திகளின் உட்பொருளை அவர் விளக்கினார்:

''பொதுவாக மகான்கள் தாங்கள் பெற்று விளங்கும் மானஸிக ஆன்மீக சக்திகளை தாங்களாக வெளிப்படுத்துவ தில்லை. ஆனால் நோயுற்ற போதோ, அல்லது ஆபத்து நேரிட்ட போதோ அவர்களது சீடர்கள் குருவிடம் தாங்கள் கொண்டு விளங்கும் அபார பக்தியின் ஆற்றலால் இத்தகைய அற்புதங்களை தாங்களாகவே நிகழ்த்துகின்றனர். தவிர

மகான்களின் தூய சித்தசக்தி உதவியை நாடிப்பிரார்த்தித்த மாத்திரத்திலேயே பக்தர்களுக்கு உதவியை நல்குகிறது.'' என்று மேலும் அவர் கூறினர்.

### பக்தர்களின் அரிய அனுபவங்கள்

குருதேவரின் பக்தை ஒருத்தி ஆபரேஷன் தியேட்டரில் மேஜைமீது கிடத்தப்பட்டிருந்தாள். அப்பொழுது அவளது மனம் குருதேவரிடமே லயித்திருந்தது. நர்ஸ் மயக்க மருந்தைக் கொடுத்து விட்டாள். அதன் பிறகுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது. மானஸிகமாக அவள் தன் உடலிலிருந்து பிரிந்து சென்று — எப்படி என்பது அவளுக்குத் தெரியாது – டாக்டர்கள் தன் உடலில் ஆப்பரேஷன் செய்தது அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ஆபரேஷன் முடிந்ததும் திரும்பவும் தன் சரீரத்துடன் இணைந்து கொண்டாள். ஆப்பரேஷன் எப்படி நடந்தது என்பதை டாக்டர்கள் மற்றும் நர்சுகளிடம் அவள் விளக்கியபோது அவர்கள் அதைக் கேட்டுத் திடுக்கிட்டனர். குருதேவர் நிகழ்த்திய அற்புதம் அது என்பது அவளுக்கு மட்டும்தான் தெரியும். இதைப் போன்றதொரு நிகழ்ச்சியைத் தன் வாழ்விலும் குருவருளால் அனுபவித்ததாக அமெரிக்காவைச் சேர்ந்த ராபர்ட் பீட்டர்ஸன என்பவர் தெரிவிக்கிறார். இத்தகைய நிகழ்ச்சிகளைப் பற்றி குருதேவரிடம் பக்தர்கள் தெரிவித்தபொழுது அவர், ''மக்களிடம் மென்மேலும் நம்பிக்கையை ஊட்டுவதற்காக இறைவன் செய்யும் அற்புதங்கள் இவை'', என்று சொல்லிவிடுவார்.

ஒரு நாள் குருதேவர் ஸத்ஸங்கத்திற்குப் போய்க்கொண்டிருந்தார். தனது அகமதாபாத் பயணத்திலிருந்து அப்பொழுதுதான் திரும்பிய சுவாமி ஆத்மானந்தர் அங்கே ஒரு பக்தரின் வீட்டில் குருதேவர் தோன்றிய ஒரு அதிசய நிகழ்ச்சியை அவரிடம் எடுத்துக் கூறினர். சுவாமி ஆத்மானந்தருக்கு அந்த வீட்டுப் பெண்மணி பாதபூஜை செய்து பிச்சை அளித்தார். அதன் பின் அவர் அங்கிருந்து கிளம்பிச்

சென்று விட்டார். அவர் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த வீட்டுப் பூஜை அறைக்குள் இரண்டு பாதுகைகளும் குருதேவரின் திருவுருவப்படமும் வந்து விழுந்தன. அதுபோல குஜராத்தி மொழியில் இருந்த குருதேவரின் சில பாட்டுக்களும் வந்து விழுந்தன. இதைக் கேட்டதும் குருதேவர் தம்மைச் சுற்றி இருந்தவர்களைப் ப்பார்த்து, 'இது அதிசயம் இல்லையா?' என்று கேட்டார். பிறகு ஆத்மானந்தர் பக்கம் திரும்பி, 'அந்தப் பாடல்களை நிறையப் பிரதி எடுப்பதுதானே? அந்த அம்மையாருக்கு எழுதிக்கேளுங்கள்' என்று சொன்னார். சுவாமிஜிக்கு அது பற்றித் தெரியாதா என்று எவரோ கேட்டபொழுது, "எனக்கு ஒன்றும் தெரியாது. எனக்காக கடவுள் இதையெல்லாம் செய்கிறார்'', என்று கூறினார்.

சந்திரமௌலி என்ற பக்தர் அஜந்தா குகைகளைப் பார்த்து விட்டு புஸாவலுக்குக் காரில் திரும்பிக்கொண்டிருந்தார். வழியில் அடர்ந்த காட்டுப் பகுதியில் கார் டிரைவரின் கட்டுக்கு அடங்காமல் நிலைகெட்டு ஓடியது. முடிவில் காரின் இரண்டு சக்கரங்களும் ஒரு பள்ளத்தில் விழுந்து கார் பயங்கர நிலையில் நின்றுவிட்டது. காருக்கு உள்ளே இருந்தவர்கள் வெளியே வந்து சுமார் ஒரு மணி நேரம் காரை ரோட்டுக்கு கொண்டு வர முயன்றனர். ஆனால் முடியவில்லை. கடைசியில் சந்திரமௌலி குருதேவர் சிவானந்தரை நினைத்து ஆசிரமம் இருந்த வடதிசை நோக்கி நமஸ்கரித்துவிட்டு, 'குரு சரணம் பவஹரணம்' என்று உச்சரித்துக் கொண்டே நண்பர்களின் உதவியுடன் முயற்சியைத் தொடர்ந்தார். என்ன ஆச்சரியம்! அடுத்த நிமிடமே கார் ரோட்டுப் பாதைக்கு வந்துவிட்டது. "பள்ளத்தினுள்ளிருந்து குருதேவர் காரைத் தள்ளுவதை நான் என் கண்களால் கண்டேன்'', என்றார் அவர்.

இதுபோன்று ஒன்றல்ல, இரண்டல்ல எண்ணற்ற அற்புத நிகழ்ச்சிகள் குருவருளால் நிகழ்ந்ததாகப் பக்தர்கள்

தெரிவிக்கின்றனர். பீஹாரில் காட்டு வழியே தனியே போக நேர்ந்த ஒரு பக்தர் தன்னுடன் குருதேவர் துணைக்கு வந்ததாகத் தெரிவிக்கிறார்.

ஹரித்வாரில் கும்பமேளாவில் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த செல்லாரமணி என்பவர் தமது குடும்பத்துடன் பெரும் கூட்டத்தினுள் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டார். தம் கண் முன்னாலேயே அதிக நெரிசல் காரணமாகச் சிலர் மிதிபட்டு இறந்ததைக் கண்டார் அவர். 'குருதேவா!' என்று தம்மையுமறியாது கத்திவிட்டார் அவர். அந்த சமயத்தில் அருகிலிருந்த மாடியிலிருந்து கயிறுகள் தங்களை நோக்கி வந்ததாகவும், அவற்றின் மூலம் அவர்கள் மாடிக்கு ஏறி உயிர் பிழைத்ததாகவும் அவர் தெரிவிக்கிறார்.

உயிர் காத்த உத்தமர்

உரிய நேரத்தில் வர இருக்கும் ஆபத்துக்களை பக்தர்களுக்குக் குருதேவர் தெரிவித்து அவர்களை அற்புதமான முறையில் காப்பாற்றியிருக்கிறார். தென் ஆப்பிரிக்காவில் ஒரு பெண்மணிக்கு அவளது சமையலறையில் அவள் குடிக்க இருந்த பாலுடன் யாரோ விஷத்தைக் கலந்ததை உணர்த்தியும், அகமதாபாத்தில் ஒரு பெண்ணின் சேலைத் தலைப்பு தீப்பிடித்ததை உணர்த்தியும், காஸியாபாத்தைச் சேர்ந்த மாதுர் என்ற பக்தரை நடு இரவில் எழுப்பி வீட்டில் ஒளிந்திருந்த திருடனைக் காட்டிக் கொடுத்ததும் ... இவ்விதம் அவர் செய்த அற்புதங்கள் எண்ணற்றவை.

ஒரு சமயம் ஒரு பக்தர் தன்து குடும்பத்துடன் பத்ரிநாத்துக்குச் செல்ல விரும்பினார். ஆசிரமத்தில் சில நாட்கள் தங்கிவிட்டு குருதேவரின் உத்தரவைப் பெறுவதற்காக அவரிடம் சென்று தமது எண்ணத்தை வெளியிட்டார். ஒரு முறை, இருமுறை, மும்முறை அது பற்றிச் சொல்லியும் குருதேவர் காதுகொடுத்துக் கேட்கவேயில்லை. குருதேவரின் உத்தரவு கிடைக்கவில்லையே என்று ஏங்கிய

அவர் அன்று தமது பிரயாணத் திட்டத்தைக் கைவிட்டு விட்டார். அடுத்த நாள் பத்திரிகையைப் புரட்டிய அவருக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை. காரணம், இவரும் இவரது குடும்பத்தினரும் எந்த ஒரு குறிப்பிட்ட பஸ்ஸில் பத்ரிநாத் பயணத்தை மேற்கொண்டிருக்கவேண்டுமோ அந்த பஸ்ஸின் மீது மலைப் பாறை உருண்டு விழுந்து அனைத்துப் பிரயாணிகளுடன் அந்த பஸ் கங்கையில் அடித்துச் செல்லப்பட்டது என்ற செய்தி கொட்டை எழுத்துக்களில் வெளியாகியிருந்தது. குருதேவர் தமக்கு அனுமதி கொடுக்காத காரணம் அவருக்கு அப்பொழுதுதான் புரிந்தது. உடனே கண்களில் நீர் மல்க அவர் குருதேவரின் பாதங்களில் விழுந்து பக்தியுடன் வணங்கினார்.

"நான் ஒரு அற்புதமான கனவு கண்டேன், அதில் தான் முதன்முதலாக உங்கள் திருவுருவத்தின் தரிசனம் கிடைத்தது. உங்கள் பெயர், மற்றும் ரிஷிகேசத்துக்கு எப்படி வந்து உங்களைத் தரிசிப்பது போன்ற அனைத்தையும் அதில் நீங்கள் எனக்கு உணர்த்தினீர்கள்", என்கிறார் ஒரு வான்கூவர் பக்தர்.

ஒருசமயம் யாழ்ப்பாணத்திற்கருகிலுள்ள நல்லூரில் பெரு வெள்ளம் பெருக்கெடுத்து ஊரெல்லாம் பாழ்படுத்திய வேளையில், "மஹாம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபித்து குருதேவரைத் தியானித்துக் கொண்டிருந்த முக்தானந்தாவின் அறைக்குள் மட்டும் நீர் புகாதது பேரதிசயமே!

"எனது கடைசி மகன் பல்கலைக்கழகத் தேர்வுகளின் கடைசி நாளன்று பரீட்சை அறையில் கேள்வித்தாளைக் கையில் வாங்கினான். அவனுக்குத் தலை சுற்றியது. ஒரு கேள்விக்கும் பதில் தெரியவில்லை. வெறும் விடைத்தாளைக் கொடுத்து விட்டு வருவதற்காக எழுந்து நின்றான். கண்களில் நீர் பெருகியது. அந்த வேளையில் குருதேவர் அவன் முன்

தோன்றி தலையில் கைவைத்து ஆசீர்வதித்தார். வெளியே வர முனைந்தவன் மீண்டும் இருக்கையில் அமர்ந்தான். மீண்டும் ஒருமுறை கேள்வித்தாளைப் படித்தான். பளிச் சென்று எல்லாக் கேள்விகளுக்கும் பதில் அவனுக்குத் தெரிய வந்தது. உடனே அனைத்து விடைகளையும் நன்முறையே எழுதினான். முதல் வகுப்பில் தேர்ச்சி அடைந்தான்'' என்று பீஹாரைச் சேர்ந்த அலக்குமார் ஸின்ஹா என்ற போலீஸ் ஐ. ஜி. கூறுகிறார்.

தென் இந்தியாவில் புத்தூர் என்ற ஊரில் சுந்தரி என்ற டாக்டர் குருதேவரிடம் சீரிய பக்தி கொண்டு விளங்கினார். தன் அறையில் குருதேவரின் படத்துக்கு முன்னால் அமர்ந்து தனக்கு நேர்ந்துள்ள சிக்கலை நினைத்தவாறே பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது 'டாக்டர், டாக்டர்' என்று வெளியில் குரல் கேட்கவே வெளியே போய்ப் பார்த்தார். என்ன ஆச்சரியம்? கையில் கமண்டலம் மற்றும் கம்புடன் காவி உடை உடுத்து குருதேவர் அங்கே நின்று கொண்டிருந்தார். தனது அறைக்குள் அவரைக் கூட்டிக் கொண்டு வந்து டாக்டர் அவரை நமஸ்கரித்து விட்டு எழுந்திருந்து பார்த்தால் குருதேவரைக் காணோம்!

பெட்டையா என்ற இடத்தைச் சேர்ந்த லக்ஷ்மி குமாரி என்ற பக்தை ஒரு நாள் காலையில் தான் தன் வீட்டில் குரு தேவரைக் கண்டதாகவும், குருதேவரின் உருவம் ஸ்ரீ கிருஷ்ணராக மாறியதாகவும் கூறுகிறார்.

### ஆன்மிக ஏணியில் அதிசய அனுபவங்கள்

'Practical Lessons in Yoga' என்ற தமது நூலில் அனுபவத்தின் பல படித்தரங்களைப் பற்றி சாதகர்களின் ஐயங்களை அகற்றும் வகையில் ஒரு பக்தருக்குக் கீழ்க்கண்ட வாறு குருதேவர் எழுதுகிறார்.

"கடையில் டிரங்குப் பெட்டிகள் ஒன்றின் மேல் மற்றொன்ருக அடுக்கி வைக்கப்பட்டிருப்பது போல இந்தப் படித்தரங்களை எண்ணிவிடக் கூடாது. ஒரே இடத்தில் வைக்கப்பட்டுள்ள அரிக்கேன் விளக்கு, மின் விளக்கு, வாயு விளக்கு, மெழுகு வர்த்தி, சிம்னி விளக்கு போன்றவற்றின் ஒளி ஒன்ருேடொன்று ஊடுருவி நிற்பதைப்போல இவை உள்ளன. பொருளின் அடர்த்தி வேறுபடுவதற்கேற்ப அனுபவத்தின் பல மண்டலங்கள் பல்வகை அடர்த்தி உடைய பொருள்களுடன் கூடியவையாக உள்ளன. உங்களைச் சூழ்ந்தே இந்தப் படித்தரங்கள் அல்லது மண்டலங்கள் உள்ளன. திவ்விய திருஷ்டியின் மூலம் நீங்கள் இவற்றைக் காண முடியும். இவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ள ஏதோ அண்டவெளியில் நெடுந்தூரம் பயணம் செய்ய வேண்டியிருக்கும் என்று எண்ணுதீர்கள். உங்களது அறைக்குள்ளேயே ஒன்ருேடொன்று ஊடுருவி ஏழு மண்டலங்களும் உள்ளன. மேல் மண்டலத்தில் உள்ள உயிர்களை கீழ் மண்டலத்தில் உள்ளவர்களால் பார்க்க முடியாது. ஆனுல் மேல் மண்டலத்தில் உள்ளவர்களால் கீழ் மண்டலத்தில் உள்ளவர்களைப் பார்க்க முடியும்.

தொலைப் பார்வை, சூக்ஷ்மக் கண் என்பதெல்லாம் சூக்ஷ்ம உடலுக்குச் சாத்தியமானவையாகும். கண், காது, மூக்கு போன்ற ஸ்தூல உடலின் பல்வேறு உறுப்புக்களைப் போல சூக்ஷ்ம உடலுக்கும் சூக்ஷ்மமான உறுப்புக்கள் உண்டு மன ஒருமைப்பாட்டின் மூலம் யோகி தொலைப் பார்வை போன்ற ஆற்றல்களை அடைகிருன். கண்ணுடியை ஒளி ஊடுருவிச் செல்வதுபோல, திடப் பொருள்களை எக்ஸ்ரே கதிர்கள் ஊடுருவிச் செல்வது போல, யோகியும் சுவற்றினை ஊடுருவியும், மூடிய சுவருக்கு உள்ளே உள்ளதையும் பூமிக்கு அடியில் புதைக்கப்பட்டிருப்பதையும், தொலை தூரத்தில் உள்ளதையும் காண வல்லவனுகிருன் இந்த சூக்ஷ்மக் கண் தான் திவ்விய திருஷ்டி அல்லது ஞான சக்ஷு என்று அழைக்கப்படுகிறது.

யோகி தனது ஞானக் கண்ணை எப்படிப் பயன்படுத்துகிறான் என்பதைப் பற்றிக் கூறுகையில், தனது எண்ணத்தின் வலுவால் அவன் ஒரு சூக்ஷ்மமான கட்புலனாகாத குழாய் ஒன்றை உண்டாக்கி அதன் மூலம் காண்கிறான். அதுபோல் சூக்ஷ்ம சரீரத்துடன் யோகி இடம் விட்டு இடம் செல்லும் ஆற்றலையும் பெறுகிறான்'', என்று குருதேவர் குறிப்பிடுகிறார்.

இந்த சூக்ஷ்ம தரிசனம் காலம் கடந்தது ஆகும். கடந்த காலம் மற்றும் எதிர்காலம் இரண்டையும் யோகி ஒருங்கே காணவல்லவனாகிறான். முக்காலத்தை உணரவல்லவன் யோகி.

இமயமலைக் குகைகள் மற்றும் ஆசிரமங்களில் வசிக்கும் மகாத்மாக்கள் தங்கள் இடத்தில் இருந்து கொண்டே உலகின் பல பாகங்களிலுமிருக்கும் பக்தர்களுக்கு சூக்ஷ்மமான முறையில் தங்களது ஆசீர்வாதங்களையும், செய்திகளையும் அனுப்புவர். அவர்கள் நேரில் வந்து ஓரிடத்தில் மேடையில் தோன்ற வேண்டும் என்ற அவசியமில்லை. மேடைப்பேச்சு என்பது 'டெலிபதி' என்ற இந்த விஞ்ஞானத்தை அறியாத இரண்டாம் தரத்தில் உள்ளவர்களுக்கே தேவை என்பது குருதேவரின் கருத்து ஆகும்.

தடுத்தாட்கொண்ட தயாபரர்

தந்தி, கடிதம், புத்தகம், கனவில் தரிசனம் போன்ற எத்தனையோ விதங்களில் குருதேவர் பல்லாயிரக்கணக்கான பக்தர்களைத் தடுத்தாட்கொண்டிருக்கிறார். மதுரை ஜில்லாவில் உள்ள ஒரு நகரத்தில் குருதேவரின் பக்தர் ஒருவர் ஏதோ குடும்பத் தகராறு காரணமாக வாழ்க்கையில் வெறுப்புற்று தற்கொலை செய்து கொள்ளத் துணிந்துவிட்டார். வீட்டில் எவருமில்லாத சமயத்தில் உத்திரத்தில் கயிற்றினைக் கட்டி தன் கழுத்தில் சுருக்குப் போட்டுக் கொள்ளப்போகும் சமயத்தில் வாசலில் 'சார், தபால்', என்ற சப்தம் கேட்டது.

'என்ன தபால் என்று பார்த்துவிட்டுச் சாவோமே,' என்ற எண்ணம் அவரது மனத்தில் உதிக்கவே, கதவைத் திறந்து தபாலைப் பெற்றார். என்ன ஆச்சரியம்! குருதேவர் சுவாமி சிவானந்தரிடமிருந்து அந்தத் தபால் வந்திருந்தது. 'ஏன் இந்தப் பைத்தியக்கார முயற்சி, மனம் தளர வேண்டாம். ஒளிமயமான எதிர்காலம் காத்திருக்கிறது. இறையருள் உங்கள் மீது மலரட்டும்', என்று எழுதிகடிதத்துடன் ஆசிரமப் பிரஸாதத்தை அனுப்பியிருந்தார். அதைப் படித்ததும் அன்பரின் மனம் மாறி விட்டது. தற்கொலை முயற்சியைக் கைவிட்டார். குருவருளை நினைந்து வியந்தார்.

கல்கத்தாவைச் சேர்ந்த மணி என்பவர். ''நேற்று முன் தினம் அதிகாலையில் என் சகோதரியின் கனவில் தாங்கள் தோன்றி தங்களது 'சாதனா' என்ற ஒப்பற்ற நூலை அளித்த தாகச் சொன்னாள். என்ன அதிசயம்! அடுத்த நாள் நான் அலுவலகம் சென்றிருந்த சமயம் தபாலில் தாங்கள் அனுப்பி யிருந்த அதே 'சாதனா' புத்தகத்தை எனக்குப் பதிலாக அவளே பெற்றிருக்கிறாள்,' என்று தனது அனுபவத்தை வர்ணிக்கிறார்.

மதுரையைச் சேர்ந்த பக்தர் ரங்கஸ்வாமி ஐயங்காரின் மனைவியின் கனவில் தோன்றி, 'உங்களுக்கு இரட்டைக் குழந்தை பிறக்கும்' என்று, பிரஸவத்திற்குச் சில நாட்கள் முன்னால் குறிப்பிட்டார். அதைப் போல அந்த அம்மையார் இரட்டைக் குழந்தையைப் பெற்றெடுத்தார். 'இமாலயம் எங்கே? மதுரை எங்கே? குருதேவரின் அருளை என்னென் பது?', என்று அவர் வியந்தார். இதுபோல பக்தர்களுக்கு குருதேவர் பல முறை கனவில் தோன்றி மந்திர தீட்சை அளித்து ஆசீர்வாதம் அளித்திருக்கிறார்.

சில சமயங்களில் அற்புதமான முறையில் பக்தர்கள் குருதேவரிடம் ஈர்க்கப்பட்டிருக்கின்றனர். தென்னாப்பிரிக்கா வைச் சேர்ந்தவர் தனம். அவரது மாமனார் கடப்பை சச்சிதா னந்த சுவாமிகளின் சீடர். அவர் யோகம் பயிலுவதைக்

கண்ட தனத்திற்குத் தனக்கும் ஒரு குரு வேண்டும் என்ற ஆவல் பிறந்தது. 1947-ம் வருடம் ஒரு இரவில் அவள் அதே எண்ணத்தில் தோய்ந்து கதறலானள். அந்த இரவே கடப்பை சுவாமிகள் அவள் கனவில் தோன்றி, 'நான் உனது குரு அல்ல விரைவில் உன் குரு உன் முன் தோன்றுவார்'', என்று அருளினர். உடனே குருவின் திருவுருவம் அவள் முன் தோன்றி 'உனது மாமனரின் மேஜையைத் திறந்து பார். அங்கே என்னைக் காண்பாய்,' என்று ஆசீர்வதித்தது. அடுத்த நாள் காலையில் அப்படியே செய்த தனம், 'The Sivananda Diamond Jubilee Commemoration Volume' என்ற நூலைக் கண்டாள். அதைத் திருப்பினள். கனவில் பார்த்த அதே குருதேவரின் உருவப்படம் அங்கே காணப்பட்டது. அன்று முதல் குரு தேவரை அவள் தன் குருவாக ஏற்ருள்.

மகானின் அருளால் மதுரையில் அற்புதம்

அரிய பல நிகழ்ச்சிகள் குருதேவரின் அருளால் நிகழ்ந்தன. குருதேவரின் மதுரை பக்தர் ஒருவர் பல்லாண்டுகளுக்கு முன் அன்பர் குழாத்துடன் ஆசிரமம் சென்று குருதேவரைத் தரிசனம் செய்தார், அப்பொழுது அந்தக் குழுவில் இருந்த அனைவரும் ஒவ்வொருவராகக் குருதேவருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். எம். எஸ்ஸி. (ரசாயனம்) படித்துக்கொண்டிருந்த ஒரு கல்லூரி மாணவரைக் குருதேவர் உற்று நோக்கி, ''நீங்கள் படித்து முடித்ததும் பேராசிரியராகப் பணிபுரியுங்கள்', என்று ஆசீர்வாதம் செய்தார், அப்பொழுது அந்த மாணவருக்குச் சரியாகப் பேசவராது. கொன்னல் அதாவது திக்கல் உடைய தான் எப்படிப் பேராசிரியராக முடியும் என்று அவர் ஆலோசித்து நின்ருர். குருவருள் ஊமையைப் பேசவைக்கும். முடவனை மலையேறவைக்கும் என்பதை நிரூபிக்கும் வகையில் விரைவிலேயே அவரது திக்கல் பூரண குணமாகி எம்.எஸ்ஸி. தேர்ச்சி பெற்றதும் உடனேயே ஒரு பிரபல கல்லூரியில்

பேராசிரியர் பதவியும் கிடைத்தது. இன்றும் அவர் மாணவரிடையே நன்மதிப்பைப் பெற்ற பேராசிரியராக மட்டும் திகழாமல் ஆன்மீகச் சொற்பொழிவாற்றும் பேச்சாளராகவும் திகழ்கிறார் என்றால் குருவருளை என்னென்பது? இவர் வேறு யாருமல்ல, இந் நூலாசிரியரும், 'சமயஜோதி' மாத இதழின் ஆசிரியரும், மதுரை அமெரிக்கன் கல்லூரி ரசாயனப் பேராசிரியருமான டி.கே. நாராயணன் அவர்களேயாகும்.

மதுரை சிவானந்த தபோவனத் தலைவராக இன்று விளங்கும் ஸ்ரீ சுவாமி விமலானந்தர் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் ஆசிரமம் சென்றிருந்த சமயம் ஒரு நாள் குருதேவர் அவரைப் பார்த்து, "மதுரையில் இங்கு உள்ளதைப் போன்ற ஒரு பேரியக்கம் ஆரம்பிக்க வேண்டாமா?', என்று கேட்டார். பிறகு சிறிது நேரம் மௌனம். மீண்டும் குருதேவர் அவரைப் பார்த்து. 'அங்கே ஒரு தபோவனத்தை ஏற்படுத்துங்கள், குறைந்தது சுமார் ஒன்றரை ஏக்கர் நிலம் வேண்டும். உங்களுக்குச் சொந்தமாக ஒரு அச்சகம் வேண்டும். ஒரு பத்திரிகை வேண்டும். பின்னர் ஒரு ஆஸ்பத்திரி தொடங்குங்கள்... 'என்று ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டே போனார் அப்பொழுது வானமாமலை என்ற பூர்வாசிரமப் பெயரில் இருந்த அந்த பக்தர் ஒரு தனியார் நிறுவனத்தில் பணிபுரிந்துவந்தார். ஏழ்மை நிலையில் குடும்பத்தைக் காப்பாற்றுவதே பெரிய பொறுப்பாயிருந்த அந்தச் சூழ்நிலையில் இதெல்லாம் முடியுமா என்று சிந்தித்து நின்றார். அதைக் கண்ட குருதேவர் "என்ன, இதெல்லாம் நடக்குமா, சாத்தியமா என்று ஆலோசிக்கிறீர்களா? எல்லாம் நடக்கும்''. என்று ஆசீர்வதித்தார். அதன் பின் அதிசயிக்கத்தக்க முறையில் மதுரைக்கருகிலே குமரி-டெல்லி நெடுஞ்சாலையை ஒட்டி சிவானந்த தபோவனம் உருவெடுத்தது. குருதேவர் குறிப்பிட்டதுபோலவே ஒன்றரை ஏக்கர் நிலம். பின் 'சிவானந்தா அச்சகம்' தோன்றியது. அதையடுத்து பலரது வாழ்வினை மாற்றி அமைத்துள்ள 'சமயஜோதி' என்ற மாத ஏடு 1970ல்

வெளிவரத் தொடங்கியது. சிவானந்த தபோவனத்தில் மாதந்தோறும் சிவானந்த இலவச மருத்துவ முகாம்கள் மதுரையிலுள்ள பிரபல மருத்துவர்களால் நடத்தப்பெற்று வருகின்றன. இது தவிர அந்த டாக்டர்களின் நன்முயற்சி யால் 'சிவானந்தா ஆஸ்பத்திரி மற்றும் ஆராய்ச்சி கேந்திரம்' என்ற ஒரு அமைப்பும் உருவாக்கப்பட்டது. அதற்கான அடிக்கல் அன்றைய தமிழ்நாடு கவர்னர் ஸ்ரீ பிரபுதாஸ் பட்வாரி அவர்களால் நாட்டப்பட்டது. க்ஷயம், குஷ்டம் மற்றும் கான்சர் ஆஸ்பத்திரியுடன் ஆராய்ச்சியும் செய்து மக்கட் தொண்டாற்றுவது இந்த அமைப்பின் குறிக் கோளாகும். 'சிவானந்த வித்யாலயா' கிராமத்துக் குழந்தை களுக்கு தரமான ஆன்மீகக் கல்வியை அளிக்கும் பணியைச் செய்து வருகிறது.

மதுரை தெய்வநெறிக் கழகக் கிளை 1988-லேயே தொடங்கப்பெற்று ஆன்மீகத் துறையில் அரும்பணியாற்றி வருகிறது. தினந்தோறும் மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் ஆலயத்தினுள் அமைந்திருக்கும் தெய்வநெறிக் கழகத்தில் பள்ளிக் குழந்தைகளுக்கு நீதி மற்றும் சமஸ்கிருத வகுப்புகள் இலவசமாக நடத்தப்படுகின்றன ஞாயிறு தோறும் காலையில் 'இமயஜோதி ஜூனியர் அணி'யினரின் வாராந்திரக் கூட்டமும், மாலையில் சத்சங்கமும் சிறப்பாகத் தொடர்ந்து நடைபெறுகின்றன. மூன்று மாதத்துக்கு ஒரு முறை சிவா னந்த தபோவனத்தில் அந்தர்யோகம் நடைபெறுகிறது. சிவானந்தா கிளினிகல் லாபரட்டரி தரமான கிளினிகல் சோதனைகளைக் குறைந்த கட்டணங்களுக்குச் செய்வதன் மூலம் மக்களுக்குத் தொண்டாற்றியது. சிவானந்த தபோவனத்தில் கட்டப்பட்டுள்ள சிவானந்தா பிரார்த்தனை மண்டபம் சந்தடிமிக்க நகரத்தில் உழன்று அமைதியற்றுத் தவிப்போருக்கு அமைதியை அளிக்கும் அரியதொரு கேந்திர மாகத் திகழ்கிறது.

"உண்மையான உள்ளத்துடன் உங்களிடமுள்ளதைத் தியாகம் செய்து நீங்கள் மக்கட் தொண்டாற்றினால்

உலகோர் உங்களது தியாகத்தால் ஈர்க்கப்பட்டு அதிகமதிகம் உங்களது தொண்டிற்குத் துணைநிற்பர், மக்கட் தொண்டே மாதவன் தொண்டு'' என்று குருதேவர் கூறியதற்கேற்ப மதுரைத் தெய்வநெறிக் கழகக் கிளை கல்வி, மருத்துவம், மற்றும் ஆன்மீகம் என்ற பல வகைகளில் மக்கட் தொண்டாற்றி வருகிறது. நடப்பது அனைத்தும் குருதேவரது அருளாலேயே என்றுகூறினுல் அது மிகையாகாது.

ஒரு சமயம் பாரதீய வித்யா பவன் ஸ்தாபகர் ஸ்ரீ கே.எம். முன்ஷியும் அவரது மனைவி ஸ்ரீமதி லீலாவதி முன்ஷியும் குருதேவரைத் தரிசிக்க ஆசிரமம் சென்றிருந்தனர். குருதேவரின் அருளால் நிகழ்ந்த பல அற்புதங்களைப் பற்றி ஏற்கனவே நன்கு அறிந்திருந்த முன்ஷியின் மனைவியார் குருதேவரிடம்' ''சுவாமிஜி உங்களது அருளால் நிகழும் இத்தகைய அற்புதங்களைப் பற்றி உங்களது கருத்து என்ன?', என்று கேட்டார். ''உலகோரின் அமைதிக்காகவும் ஆரோக்கியத்திற்காகவும் நான் தினமும் பல தடவைகள் மஹாம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபிக்கிறேன்'' என்று குருதேவர் பதில் சொன்னுர்.

## இது தேவ ரகசியம்

சுசீலாவிக்நய் என்ற டாக்டர் குருதேவரின் சீரிய பக்தர்களில் ஒருவர். அவர் ஒரு முறை குருதேவரிடம், 'சுவாமிஜி! உங்களை நான் இன்னுர் என்று தெரிந்து கொள்ளுவதற்கு முன்னமேயே நீங்கள் என் கனவுகளில் தோன்றிருக்கிறீர்கள், இது எப்படி சாத்தியமாயிற்று? உங்களது அருளால் நான் பெற்ற பல அரிய அனுபவங்களைப்பற்றி ஆராய முயன்றேன். என்னுல் முடியவில்லை'', என்று சொன்னுர். அதற்குக் குருதேவர், ''இது போன்ற விஷயங்களில் தூண்டித் துளைத்து ஆராய முற்படாதீர்கள். இந்த ரகசியத்தை அறிந்து கொள்ள முயல வேண்டாம். இவையெல்லாம் தெய்வீகச் செயல்கள், அவற்றை உணர்ந்து அனுபவியுங்கள். ஆனந்த

மடையுங்கள். ஆனால் அவை பற்றிய ரகசியத்தை அறிய முயலாதீர்கள். உங்களது கடந்த சாதனையும் வாழ்க்கையும் இப்பொழுது பலன் தருகின்றன. அவ்வளவுதான்'', என்று மகான்களின் அருளால் நிகழும் அருட் செயல்களை நமது பகுத்தறிவு கொண்டு ஆராய்தல் தகாது என்று நமக்கு உணர்த்துகிறார்.

ஒரு அன்பருக்கு தனது பூர்வ ஜன்மத்தில் தான் எப்படி இருந்தோம் என்பதைப்பற்றி அறிய வேண்டும் என்ற அவா மனதில் உதித்தது. குருதேவரிடம் அவர் சென்று இது பற்றி மீண்டும் கேட்டார். குருதேவர் கண்களை சில விநாடிகள் மூடினார். மீண்டும் கண்களைத் திறந்ததும் அவர் அந்த அன்பரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல், தன் வேலையைக் கவனிக்கலானார், அந்த அன்பர் வற்புறுத்தவே, குருதேவர் ''உமது முந்தைய பிறவியில் நீர் எப்படி இருந்தீர் என்பதை நான் சொன்னால் நீங்கள் அதிர்ச்சியடைவீர்கள்'', என்றார். அவ்வளவுதான், அந்த நபர் அது பற்றிப் பிறகு பேச்சே எடுக்கவில்லை.

குருதேவர் தமது அந்தர்முக சிருஷ்டியால் எதையும் காணவல்லவராயிருந்தார். 1955ம் வருடம் மே மாதம் 23ம் தேதி தாம் கண்ட ஒரு அரிய காட்சியை ஒரு அன்பர் சுவாமிஜியிடம் வர்ணித்தார். எதிர்பாராத நேரத்தில் இடையர் ஒருவர் அந்த அன்பர் முன் தோன்றினார். அவரது ஒரு கை மற்றதைக் காட்டிலும் பிரகாசமாயிருந்தது. அந்த இடையர் கடவுளின் தோற்றமா? அல்லது அது மனத்தின் பிரமையா? அது பற்றிக் குருதேவரிடம் அவர் விளக்கம் கேட்டபொழுது, 'அது வெறும் தோற்றமா என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்', என்றார். 'சுவாமிஜி, அதை எப்படித் தெரிந்து கொள்வது?'.

''நீங்கள் இதைப் பிறரிடம் கூறக்கூடாது''.

''நீங்கள் எனது குருநாதர். சாதகன் தனது குருவிடம் ஒளிவு மறைவின்றி அனைத்தையும் தெரிவிக்க வேண்டியது கடமை அல்லவா? எனது அனுபவம் வெறும் தோற்றமா? அல்லது உண்மையா?''

அதைக் கேட்ட குருதேவர் ஒரு சிறிது கண்களை மூடினார். பிறகு பக்தரைப் பார்த்து, 'அது வெறும் தோற்றமல்ல. கடவுள் உங்களுக்குத் தரிசனம் தந்திருக்கிறார் உங்களை ஊக்கப்படுத்துவதற்காக அவர் அளித்த காட்சி அது', என்று கூறி பக்தரின் அனுபவத்தை ஊர்ஜிதப்படுத்தினார்.

## சீடர்கள் மூலம் நிகழ்த்திய அற்புதங்கள்

பல சமயங்களில் தமது சிஷ்யர்கள் மூலமாகவும் குருதேவர் பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறார் இலங்கையில் சின்னத்துரை என்ற ஒரு டாக்டர் குருதேவா பெயரைச் சொல்லி பல வருடம் குழந்தைப்பேறின்றித் தவித்த ரோமன் கத்தோலிக்கப் பெண்ணுக்கு ஒரு மருந்தைக் கொடுத்தார். அவளுக்குப் பிறக்கப் போகும் குழந்தைக்கு குருதேவர் பெயரை வைக்க வேண்டும் என்றும் அவர் அந்தப் பெண்ணிடம் கேட்க அவளும் அதற்குச் சம்மதித்தாள். விரைவில் அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு சிவானந்ததாஸ் என்று பெயரிட்டாள்.

ஹாம்பர்கைச் சேர்ந்த ஜன் பிளங்கா என்ற பக்தர் குருதேவர் ஒளிமயமான ஜோதிப் பிழம்பு ஒன்றின் வடிவில் வடிவில் தனது இதயத்தினுள் புகுந்ததைத் தான் உணர்ந்ததாகவும், அதன் பின் தான் சொன்னது அனைத்தும் அப்படியே நிகழ்வதாகவும் தெரிவிக்கிறார். இது போன்ற நிகழ்ச்சிகள் ஏராளம் பக்தர்களின் வாழ்வில் நிகழ்ந்துள்ளன. ஆசிரம விஸ்வநாத ஆலயப்பிரஸாதம் எண்ணற்ற அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறது என்பதற்குச் சான்றுகள் நிரம்ப உள்ளன. ஏனெனில் குருதேவரின் பக்தர்கள் சிவனையும்

சிவானந்தரையும் வேறுபடுத்திக் காணவில்லை. அனைத்தும் குருதேவரின் அருளாலேயே நிகழ்கின்றன என்று அவர்கள் நம்பினர். உண்மையும் அதுதான். கண்ணுக்குப் புலப்படாத கடவுள் கட்புலனாகும் குருவின் வடிவில் நம்முன்னர் காட்சி தருகிறார். குருவே பிரம்மா, விஷ்ணு, சிவன். அனைத்து தேவதைகளும் குருவிடம் அடக்கம். குருவின்றிப் பிறிதொரு தெய்வம் இல்லை. 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' என்பது போல உண்மையான பக்தனுக்கு குருவை விடப் பெரியதொரு தெய்வம் கிடையாது.

இத்தனை அரிய சித்திகளையெல்லாம் செய்து காட்டிய குருதேவர் பல பேர் முன்னிலையில் அவற்றைச் செய்து காட்டியதே கிடையாது. பதஞ்ஜலியின் ராஜயோக சூத்திரங் களுக்கு அவர் எழுதிய முன்னுரையில், "உண்மையான ஆன்மீகவாதி ஒருவன் எந்த ஒரு சித்தியையும் வெளிக் காட்ட மாட்டான். ஆனால் சில வேளைகளில் மக்களுக்கு நன்மை செய்வதற்காகவோ அல்லது தன் சிஷ்யர்களிடம் நம்பிக்கையை ஊட்டி அவர்களை நன்னெறிப்படுத்துவதற் கோ தமது சக்தியின் ஒரு சிறு பகுதியை வெளிக் காண்பிக்க நேரிடும். தனது கணவனான சிகித்வஜனின் முன்னால் சூடாலை பூமியிலிருந்து சில அடிகள் மேலேயே நின்றாள். அந்த அற்புதத்தைக் கண்ட சிகித்வஜன் அவளையே தன் குருவாக ஏற்றான். கோரக்நாதரை யோக மார்க்கத்தில் திருப்புவதற் காக மத்யேஸ்ந்திரநாதர் பல சித்திகளைச் செய்தார். தனது சீடர்களிடம் நம்பிக்கையை ஊட்ட வேண்டி ஏசுநாதரும் பல அற்புதங்களைச் செய்து காட்டினார்.

## செயற்கரிய செய்த வித்தகர்

குருதேவர் செய்த அற்புதங்களில் எல்லாம் தலையாயது அவர் கசடனைக் கல்விமானாகவும், முரடனை முனிவனாகவும், மட்டியை மகானாகவும், பாபியை பக்தனாகவும் மாற்றி அமைத்ததாகும். அது காலில் மிதி பட்டுக் கேட்பாரற்றுக்

கிடந்த கல்லை விக்கிரகமாகப் பலர் ஆலயத்தில் வழிபடும் நிலைக்கு உயர்த்தியதற்கு நிகராகும். எங்கெங்கோ எப்படி எப்படியோ இருந்தவர்கள் குருதேவரின் அருளுக்குப் பாத்திரமானவுடன் வழி மாறி உரு மாறி புத்துயிர் பெற்று வாழ்வின் மறு மலர்ச்சி அடைந்தார்கள்.

ஒரு மனிதனைத் தான் எப்படி மாற்றி அமைத்தார் என்பதைப் பற்றிக் குருதேவரே இதோ மிக அழகாக விளக்குகிறார்.

"தீயவர்களை நீங்கள் வெறுக்காது மதித்துப் பாராட்டுங்கள். முதலில் முரடனுக்குத் தொண்டு செய்யுங்கள். அவன் எதிர்கால மகான் எனக் கருதி அவனுக்குத் தொண்டாற்றுங்கள், உங்கள் மனதைத் தூய்மைப் படுத்தவும் அவனை மேலே உயர்த்தவும் இது ஒரு அரிய வழியாகும். இத்தகையோருக்குத் தொண்டு செய்வதில் நான் தனி மகிழ்ச்சி அடைகிறேன். என்னை வைவோர், நிந்திப்போர், புறம் கூறுவோர் ஆகியோரை என்னைச் சுற்றி நான் எப்பொழுதும் வைத்துக் கொள்கின்றேன். அவர்களை மிகவும் மதிப்புக் கொடுத்து அழைக்கிறேன். முரடனையோ, திருடனையோ பல பேர் முன்னிலையில் மகான் என்று போற்றுங்கள். தன் செயலைக்குறித்து அவனே வெட்கம் அடைவான், "நீங்கள் ஒரு சாந்த மூர்த்தி" என்று திரும்பத் திரும்ப ஒரு முன் கோபக்காரனிடத்திலும், 'நீங்கள் ஒரு அற்புதமான தொண்டர்' என்று ஒரு சோம்பேறியிடத்திலும் கூறுங்கள். விரைவில் அவர்கள் மாறி அமைவது உறுதி. இதுவே எனது வழியாகும். இவ்வகையான போற்றுதல் உங்கள் அடிமனத்திலிருந்து ஆத்மார்த்தமாக வர வேண்டும். உங்களது ஒவ்வொரு வார்த்தையிலும் உங்கள் ஆன்ம சக்தி பிரதிபலிக்க வேண்டும். வெளிப்படையாகத் தெரியும் எதிர் மறைக் குணத்திற்குப் பின்னால் அந்த நபரிடம் தெய்வீக நற் பண்புகள் மறைந்து கிடக்கின்றன என்று நீங்கள் உறுதி

யாக நம்ப வேண்டும். அப்படியாயின் நீங்களும் அவரும். இரண்டு பேரும் பெரும் நன்மை அடைவீர்கள்''.

சூழ்நிலை மோசம் என்று சொல்லி சதா மற்றவர் மீது பழியைப் போடக் காத்திருக்கும் நம்மவர் மனதில் குருதேவரின் இந்த அறிவுரை நன்கு பதிய வேண்டும். ஆன்ம பலத்தால் எத்தகைய எதிரிடையான சூழ்நிலையையும் நாம் நேரிடையாக மாற்றி அமைக்கலாம் என்பதைத் தாமே வாழ்ந்து காட்டியவர் நம் குருதேவர்.

சில சமயங்களில் குருதேவர் அற்புதமான விதத்தில் சில சீடர்களிடம் தமது கருணையைக் காண்பித்தார். ஒரு முறை சிவானந்தாசிரமப் பொதுக்காரியதரிசியும், குருதேவரின் பிரதம சிஷ்யர்களில் ஒருவருமான சுவாமி கிருஷ்ணனந்தர் காய்ச்சலினால் பல நாட்கள் படுத்த படுக்கையாகக் கிடந்தார். மருந்து, பட்டினி எதுவும் பலனளிக்கவில்லை. அவர் ஒரு சீரிய வேதாந்தி. நடைமுறையில் வேதாந்தத்தைக் கடைப்பிடிப்பவர். இந்த நிலையில் திடீரென ஒரு நாள் அவர் சுறுசுறுப்புடன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார். தமது கண்களை மீண்டும் மீண்டும் துடைத்துக் கொண்டார். 'நான் காண்பது கனவா அல்லது நனவா? இது பிரமையா? எங்கும் சிவானந்தர், எதிலும் சிவானந்தர் சிவானந்தர் —— சிவானந்தர்...... சிவானந்தர். தன்னைச் சுற்றி அவர் சிவானந்தமயமாகக் கண்டார். சுவற்றில் மேஜையில், பேனாவில், தரையில், திரைத்துணியில், விளக்கில், நாற்காலியில், புத்தகத்தில், பானையில், பாத்திரத்தில், கதவில், கம்பில் ............ எங்கும் சிவானந்தர். தான் படுத்திருந்த படுக்கையில், தனது உடையில், உடலில் ...... எங்கும் குருதேவர்! குருதேவர்! குருதேவர் அன்றி வேறு எதுவும் இல்லை, விநாடிப் போதில் காய்ச்சல் எங்கோ சென்று மறைந்தது. சில நிமிடங்களுக்குப் பிறகு சுவாமி கிருஷ்ணனந்தர் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். இதைக் குருவருள் என்று சொல்லாமல் வேறு

எப்படிச் சொல்லுவது? கண்ணன் அர்ஜுனனுக்கு அன்று காட்டிய விசுவரூபத்தைப் போல, தமது முக்கிய சீடர் ஒருவருக்குக் குருதேவர் காட்டிய விசுவரூப தரிசனம் இது.

மனித உருக்கொண்டு நம்மிடையே தோன்றிய மாபெரும் அவதார புருஷர் நம் குருதேவர் என்பதுதான் உலகெங்கும் உள்ள அவரது எண்ணற்ற பக்தர்கள் கொண்டுள்ள அசைக்க முடியாத நம்பிக்கையாகும். அவரது ஆன்ம சக்திக்கு எல்லை இல்லாதிருந்தது போன்று அவர் அன்று மட்டுமல்ல, இன்றும் அருளுருவில் நிகழ்த்திவரும் அற்புதங்களுக்கும் ஒரு எல்லையே இல்லை.

---

## சிவானந்தருடன் ஒருநாள்

அன்று குருபூர்ணிமா தினம்.

பக்தர்கள் வெவ்வேறு காணிக்கைப் பொருள்களுடன் குருதேவரை வரிசையாக வந்து தரிசனம் செய்து வணங்கினர். குருதேவரது பெருமையைப் பொறுக்க இயலாத பொறாமை கொண்ட ஒரு நபர் பார்சல் ஒன்றை குருதேவரிடம் அளித்தான். அதைப் பிரித்துப் பார்த்தபொழுது அதனுள்ளே ஒரு பழைய செருப்பும் கல்லும் காணப்பட்டன.

அதைக் கண்டு சினமடைந்த ஏனைய பக்தர்கள் அந்த நபரை அடிக்க முற்பட்டனர். குருதேவர் அவர்களைத் தடுத்து நிறுத்தினார்.

"அவன் அப்படி என்ன தவறு செய்து விட்டான்? அவனது செயலைப் பெரிதுபடுத்தாதீர்கள். பரிசுப் பொருள்களை ஏற்றுக் கொள்ளுங்கள். அவன் நமக்கு எந்தவிதத் தீங்கும் செய்யவில்லையே. அவனை அடிப்பதற்காக நாம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினால் அவனளவுக்கு நாமும் செயலில் கீழ்த்தரமாகி விடுகிறோம் என்றாகிவிடும். அவனுக்குத் துன்பம் எதையும் இழைக்காதீர்கள்" என்று குருதேவர் அங்கிருந்தவர்களைப் பார்த்துச் சொன்னார்.

# 12

## அன்பின் அவதாரம் சுவாமி சிவானந்தர்

குருதேவரை ஒரு முறை தரிசித்தவர்களால் அவரைத் தங்கள் வாழ்நாள் முழுவதும் மறக்க இயலாது. ஆஜானுபாகுவான தோற்றம். சுமார் ஆறடிக்கும் அதிகமான உயரம் தகதகவென ஜொலிக்கும் பொன் நிறம். அகன்ற தோள்கள். நீண்ட கைகள். குழந்தையைப் போன்ற கள்ளமில்லாத மலர்ந்த இன்முகம். அருள் ஒளிரும் கண்கள். அவரது அருளுருவத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

### மறக்க முடியாத தோற்றம்

குருதேவரின் குரல் கணீரென்று வெண்கலநாதம் போலிருக்கும். மேடைகளில் பல சமயங்களில் அவர் ஒலி பெருக்கியை அகற்றிவிட்டு அதன் உதவியின்றியே பேச முற்படுவார். ஆயிரக்கணக்கானவர்கள் மெய் மறந்து அவரது சொற்பொழிவைச் செவிமடுப்பர். கிராமபோன் ரிகார்டுகளில் அவரது இனிய குரலில் அமைந்த பாடல்கள் மற்றும் உணர்ச்சியூட்டும் சொற்பொழிவுகளை நாம் கேட்டால் இன்றும் நம்மை அறியாத ஒரு ஆனந்தமும் அமைதியும் நம் மனதில் எழும்.

பார்ப்பதற்கு அவரது தோற்றம் மிக எளிமையாக இருக்கும். ஜடை முடி, தாடி, ஜப மாலை காதில் குண்டலங்கள்—இவை போன்ற எதுவும் அவரிடம் காண முடியாது. சாதாரண உடை அணிந்திருப்பார். பனி காலத்தில் ஒரு மேலங்கியும், கோடைகாலத்தில் இடுப்பில் ஒரு துணி,

மார்புக்குக் குறுக்காகவும் தோள்களின் மீது படியும்படியும் ஒரு துணியையும் அவர் அணிந்திருப்பார்.

ஆசிரமத்துக்கு அவரைக் காண எவர் சென்றாலும் முகம் மலர 'வாருங்கள், வாருங்கள்' என்று மிக நெருங்கிய உறவினர் மற்றும் நண்பர்களைப் போல் குருதேவர் வரவேற்பார். தரிசனம் செய்ய வந்த அன்பர்களும் முதல் தடவையே குருதேவரைத் தரிசனம் செய்த போதிலும் கூட, அவர்கள் உள்ளத்தில் ஏதோ வெகு காலம் அவருடன் இருந்தது போன்ற ஒரு அன்பு உணர்வு மேலிடும். ஒரு சில நாட்கள் ஆசிரமத்தில் தங்கி விட்டுக் குருதேவரைப் பிரிந்து செல்லும் பக்தர்கள் அவரைப் பிரிய நேரிடுகையில் தாயைப் பிரியும் குழந்தையைப் போல விக்கி விக்கி அழுத காட்சியும் எளிதில் மறக்க முடியாது.

அன்பின் அவதாரமூர்த்தி குருதேவர். பக்தர்களுக்கும் சீடர்களுக்கும் அவர் எழுதிய கடிதங்களில் அவரது அன்பும் ஆதரவும் பொங்கித் ததும்பும். தனித்தனியாக ஒவ்வொருவரிடமும் அவர் காட்டிய பரிவும் கவனமும்தான் அந்த அளவுக்கு அன்பின் சிகரமாக அவரை ஆக்கியது என்றால் மிகையாகாது.

கனிவுடன் கூடிய கடிதங்கள்

சீடர்களுக்கு அவர் எழுதிய கடிதங்களில் எந்த அளவுக்கு அவர் அன்பைப் பொழிந்தார் என்பதற்கு ஒரு சில உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன.

(அ) 'அ' இப்பொழுது நன்கு தேறி விட்டார். சமையலறையின் மேலாளர் இப்பொழுது அவர்தான். மூத்த டைப்பிஸ்டும் அவரே. தயவு செய்து எனது கணக்கில் அவருக்கு ஒரு நல்ல பேனா, உபநிடத நூல்கள் ஒரு செட், எனது 'நடைமுறை' வேதாந்தம் ஆகியவற்றை உடனே கொடுக்கவும்.

(ஆ) உங்களுக்குப் பணம் தேவைப்பட்டால் உடனே எனக்கு எழுதுங்கள். இதில் எந்தவித வெட்கமும் கொள்ளத் தேவையில்லை. தவம் என்ற பெயரில் உடலைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் விருப்பம்போல் நீங்கள் இருக்கலாம். எப்படியாவது நேரத்தை நல்ல முறையில் செலவிடுங்கள். இறைவனது அருள் உங்கள் மீது மலர்வதாகுக.

(இ) இப்பொழுது உங்கள் உடல்நலம் எப்படி இருக்கிறது? உங்கள் அனுபவத்தை எல்லாம் எழுதுங்கள். ஒரு நாளில் 24 மணி நேரத்தை எப்படிச் செலவிடுகிறீர்கள் என்று எனக்குத் தெரிவியுங்கள். எனதருமை யோகிராஜ், இந்த ஆசிரமம் உங்கள் ஆன்மீக வீடு. எப்பொழுது வேண்டுமானாலும் நீங்கள் திரும்பிவரலாம். எந்தவிதக் கவலையுமின்றி நீங்கள் இங்கே யோகப் பயிற்சியில் ஈடுபடலாம். இந்த ஆசிரமத்தில் உங்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளும் உள்ளன. திரும்பிவர உங்களுக்கு ரயில் டிக்கட்டுக்குப் பணம் அனுப்பட்டுமா? அன்பும் ஆசீர்வாதமும்.

(ஈ) ரிஷிகேசம் பனியைப்பற்றி விண்பயம் வேண்டாம், போர்வைகள் இருக்கின்றன. பயன்படுத்தவும். என் கணக்கில் அங்கே கடைகளில் டீ, பால் போன்றவற்றை அருந்துங்கள். உயரிய அமைதியை அனுபவிப்பீர்களாக,

(உ) போதிய ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். அதிகமாக கஷ்டப்பட வேண்டாம், தலைக்கு எண்ணெ தேய்த்துக் கொள்ளுங்கள், காலையில் பிராணாயாமம் செய்யவும். அது உங்களுக்கு அதிக ஆற்றலைத் தரும். பழங்களைச் சாப்பிடுங்கள். காலை, மாலை தியானத்தில் மிகவும் ஒழுங்காக இருங்கள்.

(ஊ) உங்கள் சில்லரைச் செலவுக்காக நான் பணம் அனுப்பினேன். 'நபர் இல்லை' என்று அந்தப் பணம் என்னிடம் திரும்பி விட்டது. உங்களுக்குத் தொண்டு செய்ய நான் எப்போதும் காத்திருக்கிறேன். நீங்கள் அதைப்பெற

மறுப்பானேன்? நான் இங்கே உங்களுக்கு உதவக் காத்திருக் கையில் எவர் எவரிடமோ உதவியை நீங்கள் நாடிச் செல் வானேன்? நகரத்தின் சந்தடியில் இருந்து அல்லற்படு வானேன்? இங்கே எனது நேரடி மேற்பார்வையில் நீங்கள் பல்வகையில் தொண்டாற்றலாம். உங்கள் அறைக்குச் சாப்பாடு அனுப்புகிறேன். செலவுக்குப் பணம் தருகிறேன்.

நீங்கள் விரும்பினால் இங்கே ஆறு மாதம், நகரத்தில் ஆறு மாதம் இருக்கலாம். உங்களது பார்வையையும், பழக்க வழக்கங்களையும், குணத்தையும் கொஞ்சம் மாற்றி அமைத் தால், பிறருடன் இணைந்து வாழத்தெரிந்து கொண்டு விட் டால் எந்த இடத்திலும் நீங்கள் ஆனந்தமாக இருக்கலாம். பயணச்செலவுக்கான தொகையை அனுப்பட்டுமா?''

இவ்விதம் ஒருஅன்புத் தந்தை தன் மகனுக்கு எழுதுவது போல குருதேவர் சீடர்களுக்குக் கடிதம் எழுதுவார்.

*பணிவின் சிகரம்*

குழந்தைகளானாலும் குருதேவர் அவர்களை மிகவும் மதிப் புடன் 'நீங்கள்,' 'வாருங்கள்' என்று கூப்பிடுவார். 'நீ' 'வா' என்று அவர் யாரையும் அழைத்ததே கிடையாது. மனிதர் களிடம் மட்டுமல்லாது, மிருகங்கள் பறவைகளிடத்தும் கூட அவர் மதிப்புடன் நடந்து கொள்ளுவார். ஒரு சமயம் ஆசிர மத்துக்கு அருகில் நோய்வாய்ப்பட்ட ஒருநாய் குட்டிகளுடன் பசியாய்க் கிடந்தது. அந்த வழியாகச் சென்ற குருதேவர், 'இவாளுக்கெல்லாம் சாப்பாடு இல்லை போலிருக்கு.' என்று குறிப்பிட்டு, உடனே அவற்றிற்கு உணவளிக்க ஏற்பாடு செய்தார்.

குருதேவரை எவரும் எப்பொழுதும் எளிதிலே அணுக முடியும். 'தரிசன நாள்', 'தரிசன நேரம்' என்பதெல்லாம் கிடையாது. தெரிந்தவர்களானாலும் தெரியாதவர்களா னாலும் முதலில் குருதேவர் அவர்களுக்கு நமஸ்காரம் செய்து

விடுவார். அவரது அகில இந்திய யாத்திரையின் போது பல இடங்களில் பிறர் தம்மை நமஸ்காரம் செய்வதற்கு முன்னரேயே குருதேவர் அவர்களது பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்த காட்சி காண்பவர்களின் கண்களில் கண்ணீரை வரவழைத்தது. தாம் ஒரு பெரிய மகான், உலகம் போற்றும் உத்தமர் என்ற கர்வம் அவரிடம் சிறிதும் கிடையாது. அனைவரையும் இறை சொரூபமாகக் கண்டு வணங்கிய அவதார மூர்த்தி அவர்.

தமது பக்தர்களிடம் அவரவர் தாய் மொழியிலேயே சுவாமிஜி பேசுவார். பிறரைத் திருப்திப்படுத்த அவர் கையாண்ட முறைகளில் அதுவும் ஒன்று. தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, மலாய் போன்ற பாஷைகளைத் தவிர ஜெர்மனி, பிரெஞ்ச் போன்ற பாஷைகளிலும் அவர் தமது பக்தர்களை வரவேற்று உபசரிப்பார். அந்தந்த மொழிகளில் உள்ள பழமொழிகள், பாடல்களை கலந்து அவர் அவர்களிடம் பேசிப் பழகியது காணற்கரிய காட்சியாகும்.

குருதேவரின் ஒப்பற்ற அன்பைப் பாராட்டிய பலருள் உத்தரகாசியைச் சேர்ந்த சுவாமி தபோவன்ஜியும் ஒருவர். சுவர்க்காசிரம நாளிலிருந்தே அவருக்குக் குருதேவரை நன்கு தெரியும். அனைவரிடத்தும் ஆண்டவனைக் கண்டு பணிந்த குருதேவரின் இந்த ஒப்பற்ற குணத்தை அவர் 'ஸர்வாத்ம பாவம்' என்று குறிப்பிடுகிறார். குருதேவரின் ஒரு பிறந்த தினத்தை ஒட்டி அவர் அனுப்பிய செய்தியில், "இவரைப் பற்றி நினைக்கையில் நூலறிவு, ஞானம், பல்வேறு பணிகள் போன்ற எல்லாவற்றைக் காட்டிலும் இந்த 'ஸர்வாத்ம பாவம்' என்ற அனைத்திலும் ஆண்டவனைக் காணும் தன்மையே என் நினைவில் மேலோங்கி நிற்கிறது" என்று தனது பாராட்டைத் தெரிவித்தார்.

பெண்களிடம் குருதேவர் ஸாக்ஷாத் அம்பிகையைக் கண்டார். ஒவ்வொரு பெண் பாலரிடத்தும் அவர் துர்கையை

கண்டார், ஒரு விஜயதசமி தினத்தன்று அவர் ஆசிரமத்தில் உள்ள பள்ளிச் சிறுமிகளை வரிசையாக ஒரு பாயில் அமரச் செய்து ஒவ்வொருவர் பாதத்திலும் பழங்கள், பூக்களை அர்ச்சித்து பட்டாடை அளித்து அவர்கள் நெற்றியில் குங்குமமிட்டு அவர்களுக்கு ஆரத்தி எடுத்து நமஸ்காரம் செய்தார்.

அவனும் ஆண்டவனே

திருடர்கள், முரடர்கள் மற்றும் கொலைகாரர்களிடத்திலும் அவர் இறைவனைக் கண்டார். 1950-ம் வருடம் ஜனவரி மாதம் எட்டாம் தேதி, ஆசிரமத்தில் மாலை சத்சங்கம் நடந்து கொண்டிருந்தது. அப்போது அங்கே மின்விளக்கு கிடையாது. அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் கோவிந்தன் என்ற ஒரு முரடன்கோடரி ஒன்றினால் குருதேவரின் தலையில் மும்முறை தாக்கினான். ஆனால் குறி தவறி சுவற்றிலும் கதவிலும் அவனது கோடரி மோதிச் சப்தத்தை எழுப்பியது. கோடரியின் மரப்பிடி மட்டுமே குருதேவர் தலையில் இருந்த டர்பனின் மீது பட்டது. பொதுவாகத் தலையில் டர்பன் அணியாத குருதேவர் அன்று ஒருவரும் எதிர்பாராத விதத்தில் டர்பனை அணிந்திருந்தார். அந்த முரடனை அனைவரும் பிடித்துக் கட்டினர். போலீஸ் அழைக்கப்பட்டது. ஆனால் குருதேவர் அவர்களை அமைதிப்படுத்தி, 'எதற்காக நீங்கள் இந்த வீண் ஆர்ப்பாட்டம் செய்கிறீர்கள்? அவனது திட்டப்படிதான் அனைத்தும் நடக்கின்றன. 'தஸ்கராணாம் பதயே' 'த்யூதம் சலயதாம் அஸ்மி' என்பதெல்லாம் வெறும் வார்த்தைகள் அல்ல. எங்கும் நிறைந்த இறைவன்தான் திருடர், முரடர், கொலைகாரர் போன்றவர்களிடமும் இருக்கிறார். போலீஸ்காரர்கள் வந்த வழியே திரும்பிப் போகட்டும். இறைவன் அருளால் எனது உயிருக்கு எவ்வித ஆபத்தும் இப்போது நேரிடவில்லை. இன்னும் சிறிது காலத்துக்கு இந்த சரீரத்தின் மூலம் உலகத்துக்குத் தொண்டு செய்ய வேண்டியது பாக்கி இருக்கிறது போல் தெரிகிறது.

இந்த நிகழ்ச்சி புகட்டும் பாடம் இதுதான்', என்று சொல்லி, கோவிந்தனின் நெற்றியில் விபூதி குங்குமம் இட்டு, அவனுக்குத் தனது புத்தகங்களை அளித்து; அஷ்டாக்ஷர மந்திர உபதேசம் செய்து, பழம், உடைகள், போர்வைகளை யெல்லாம் அவனுக்குப் பரிசளித்து, அவனது ஊரான சேலத்துக்கு டிக்கட் எடுத்துக்கொடுத்து, ஆக்ரா வரை அவனது பாதுகாப்புக்காக இரண்டு ஆசிரமவாசிகளை யும் அனுப்பி வைத்தார். "ஜயதேவர்தான் எனது வழிகாட்டி, திருடர்கள் அவரைக் கொள்ளையடித்து அவரது கைகளை வெட்டிக் கிணற்றுக்குள் எறிந்தனர். அவரை அழைத்துச் செல்ல வைகுண்டத்திலிருந்து புஷ்பக விமானம் வந்த பொழுது தன் கைகளை வெட்டிய அந்தத் திருடர்களையும் கூட அழைத்தால் அன்றி தானே மட்டும் வைகுண்டத்திற்கு வரமுடியாது என்று மறுத்து விட்டார். எனது இலட்சியமும் அதுவே', என்று தம் பக்தர்களிடம் கூறினர்.

குருதேவர் இறைவனை மனிதர்களிடம் மட்டுமின்றி மிருகங்கள், புழு, பூச்சிகள் மற்றும் உயிரற்ற பொருள் களிடத்தும் கண்டு வணங்கினர். இது பற்றி அவர் தமது சீடர்களிடம், "நீங்களும் இதைப் பயிற்சிசெய்து பாருங்கள். சில மாதங்கள் பயிற்சிக்குப் பிறகு உங்களிடம் ஏற்படும் மாற்றத்தைக் கவனியுங்கள். நீங்கள் மாறிய மனிதராகத் தென்படுவீர்கள். இறை மனிதராகத் தோற்றமளிப்பீர்கள்", என்று கூறுவார்.

## அனைத்தும் அவன் வடிவே

ஒரு சமயம் ஆசிரமப் பொதுக்காரியதரிசியாக விளங்கிய சுவாமி கிருஷ்ணானந்தஜியிடம் குருதேவர், "நான் முதலில் கங்கையை வணங்குகிறேன். பின்னர் இமயமலையை, பிறகு கதவை, ஜன்னலை, மலம் கழிக்கும் சாதனத்தையும் வணங்கு கிறேன்," என்று கூறினர். இத்தகைய பரந்த அன்பின்

காரணமாக எந்த ஒரு ஜீவராசியும் இன்னலுற்ருல் அதை அவரால் காணச் சகிக்க முடியாது. கங்கை நீரில் ஏதாவது பூச்சிகள் உயிருக்குப் போராடி மிதந்து வருமாளுல் உடனே அவற்றைக் கையில் ஏந்தி வெளியில் விட்டு விடுவார்.

கோடைகாலத்தில் ஆசிரமத்தில் ஈக்களின் தொல்லை அதிகம் இருக்கும். சுகாதார இன்ஸ்பெக்டர் "சுவாமிஜி, இந்தப் பூச்சி கொல்லி மருந்து அவ்வளவு ஈக்களையும் ஒழித்துவிடும்", என்று சொல்லி குறிப்பிட்ட ஒரு மருந்தைப் பயன்படுத்துமாறு கேட்டுக்கொண்டார். குருதேவர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. பிறகு அவர் இன்ஸ்பெக்டரிடம். "ஒஜி! அது பூச்சிகளை வராமல் செய்ய வேண்டுமே ஒழிய அவற்றைக் கொல்லக்கூடாது" என்று கூறினர்.

ஒருநாள் சத்சங்கம் நடந்து கொண்டிருந்த சமயம் இரவு வேளையில் டார்ச் விளக்கின் முனையால் தேள் ஒன்றை ஒருவர் நசுக்குவதைக் குருதேவர் பார்த்து விட்டார். கீர்த்தனத்திற்குப் பிறகு அந்த அன்பரை நோக்கிக் குருதேவர், "அதை நீங்கள் ஏன் கொன்றீர்கள்?" என்று கேட்டார். "அது மக்களைக் கடிக்கிறது", என்று அவர் பதில் சொன்னர்.

"ஒரு தேளைக் கொன்றதனுல் உலகத்தில் நீங்கள் தேளே இல்லாமல் ஆக்கிவிட்டீர்களா? கோடிக் கணக்கான மக்களை நீங்கள் தேள்கடியிலிருந்து காப்பாற்றிவிட்டீர்களா? அதைக் கொல்ல உங்களுக்கு ஒரு சில விநாடிகளே ஆயிற்று. உங்களால் அதற்கு மீண்டும் உயிரைக் கொடுக்க முடியுமா? உயிரைக் கொடுக்க முடியாத உங்களால் எப்படி ஒன்றின் உயிரை எடுக்கமுடியும்? பயங்கரத் தேள் நீங்கள்தான். தேளுக்குக் கொடுக்கில் மட்டும் தான் விஷம். ஆனுல் உங்களுக்கு உடல் முழுவதும் விஷம். பொருமை, கோபம் போன்ற எத்தனை தீய குணங்கள் உங்களிடம் நிரம்பியுள்ளன. உங்களை இப்பொழுது நசுக்கித் தள்ள வேண்டும்", என்று

குருதேவர் கோபத்துடன் கூறவே அந்த நபர் அதுமுதல் எந்த உயிர்ப் பிராணியையும் தாம் கொல்லுவதில்லை என்று உறுதியளித்தார்.

இறக்கும் நிலையில் இருந்த ஒரு காளை, தலையில் புண்ணுடன் அவதிப்பட்ட நாய், குரங்கால் கடிக்கப்பட்ட காக்கை — அனைத்தும் குருதேவரின் அன்புக்கும் அரவணைப் புக்கும் இலக்காயின.

1949 ம் வருடம் நடந்த ஒரு சிறு நிகழ்ச்சி. குருதேவரின் குடீரில் இருந்த ஒரு பீரோவில் கம்பளம் ஒன்றை எலி கரவியிருந்ததை அவரது காரியதரிசி கண்டார். அதைக் கொஞ்சம் விலக்கிப் பார்த்ததும் அதனுள் அப்பொழுதுதான் பிறந்திருந்த நான்கு எலிக் குஞ்சுகளைக் கண்டு அவற்றைக் குருதேவரிடம் காண்பித்தார். அவற்றைக் கண்ட குருதேவரின் மனம் மிகவும் இளகியது. அந்த நிலையில் அந்த எலிக்குஞ்சுகளைத் தொந்தவுக் குள்ளாக்கியது தவறு என்று சுட்டிக்காட்டி விட்டு, அவற்றை மீண்டும் பழைய நிலையில் கொண்டு வைக்கும்படி சிஷ்யரிடம் சொன்னார். அவரும் அப்படியே செய்தார். அதன் பின் ஓரிரு நாட்களில் அந்தத் தாய் எலியைப் பூனை ஒன்று கொன்று விடவே, எலிக் குஞ்சுகளும் இறந்துபோய் விட்டன. இறந்த நிலையில் அவற்றைக் கண்ட குருதேவர் மிகவும் வருந்தினார். அவற்றின் ஆன்மா சாந்தி அடைய அவர் வெகு நேரம் மஹாம்ருத்யுஞ்ஜய மந்திர ஜபம் செய்தார். அதில் அவரது சீடரும் கலந்து கொண்டார்.

பக்தவத்ஸலர்

உலகில் உள்ள அனைத்துயிரிடத்திலும் அவர் அன்பு செலுத்தினார் எனினும், அவர் மீது பக்தி கொண்ட பக்தர் களின் பால் இருந்த அவரது அன்பு ஒப்பற்றது, அளவு கடந்தது, இணையற்றது. அவரது பக்தர்கள் தான் எத்தனை

எத்தனை வகை! அவர்களுக்குத் தான் எத்தனை எத்தனை பிரச்சினைகள்! வேலை கிடைக்கவில்லையே என்று ஏங்குவார் ஒருவர்! தன் பெண்ணுக்குச் சரியான வரன் கிடைக்கவில்லையே என்று ஏங்குவார் இன்னொருவர்! பரீட்சையில் பெயிலாகிக் கவலைப்படுவார் மற்றொருவர். தனக்கு நடக்க இருக்கும் பெரிய ஆப்பரேஷன் வெற்றிகரமாக முடிய வேண்டுமே என்று குருதேவரிடம் பிரார்த்திப்பார் பிறிதொருவர். நெடுநாளாகக் கோர்ட்டில் பைசலாகாமல் இழுத்தடிக்கும் கேஸ் விரைவில் தனக்குச் சாதகமாக முடிய வேண்டுமே என்று குருதேவரை வேண்டுவார் இன்னொருவர். தனது ஒரே குழந்தையின் திடீர் மரணத்தால் பைத்தியம் பிடிக்கும் நிலையில் அவரிடம் அடைக்கலம் புகுவார் ஒருவர். மரணம், வியாதி, துன்பம், தொல்லை, துக்கம் —— அனைத்திலிருந்தும் விடுபட பக்தர்கள் அடைக்கலம் புகுந்த இடம் குருதேவரின் திருவடித் தாமரைகளே. பலர் நேரில் அவரிடம் வந்தனர். மற்றும் பலர் தபால் மூலம் தத்தம் கஷ்டத்தை அவருக்குத் தெரிவித்தனர் அனைவருக்கும் ஒரே பாங்கில் குருதேவர் ஆறுதலையும் ஆதரவையும் அளித்தார்.

நாமாகத் தேடிச் சென்று தேவைப்படுவோருக்குத் தொண்டு செய்யவேண்டும் என்பதுவே குருதேவரின் கொள்கையாகும். வட இந்தியாவில் அவர் செய்த சங்கீர்த்தன யாத்திரைகளின் போது, நிகழ்ச்சியின் இறுதியில் மருத்துவ உதவி வேண்டுவோர் அனைவரும் தம்மிடம் நேரடியாக வந்து உதவி பெறலாம் என்று மேடையிலேயே அறிவித்து விடுவார். அவர் சுவர்க்காசிரமத்தில் இருந்த சமயத்தில் குருதேவர் எங்கு சென்றாலும் தம்முடன் மூன்று பைகளைச் சுமந்து செல்லுவது வழக்கம். ஒரு பையில் ஆன்மீகப் பிரசுரங்கள். மற்றொன்றில் பழங்கள் மற்றும் தின்பண்டங்கள். மூன்றாவதில் மருந்துகள், தீப்பெட்டி, மெழுகுவர்த்தி, கத்தரி, ஊசி, நூல் போன்றவை இருக்கும்.

தாமே முன்னின்று உதவி செய்வதில் குருதேவருக்குப் பெரு விருப்பம் உண்டு. வெயிலில் களைத்து எவராவது வந்தால் அவர்களுக்கு அவரே விசிறியால் வீசுவார். நோயாளிகள் மற்றும் வியாதிஸ்தர்களுக்கு சில சமயங்களில் அவரே ஓடோடியும் சென்று குடை பிடிப்பார். பருமனான நபர்கள் தங்களது பூட்சுகளைப் பிரிப்பதில் சிரமப்படுவதைப் பார்த்தால் அவரே சென்று அதைச் செய்து முடிப்பார். குருதேவரைப் பொறுத்தமட்டில் எந்த வேலையும் இழிவானதல்ல. அனைத்து வேலையும் மகத்துவம் மிகுந்ததே.

''நான் உங்களுக்கு என்ன உதவி செய்ய வேண்டும்?',- இதுதான் குருதேவர் பிறரிடம் அடிக்கடி கேட்ட கேள்வியாகும். 'பிறர் என்ன நினைப்பார்கள்',— என்பது பற்றி அவர் அலட்டிக் கொண்டதே கிடையாது. ஒரு சமயம் அவர் அவர் ஒரு ஐரோப்பிய சாதுவை தலையில் சுமந்து சென்று ரிஷிகேசத்தில் இருந்த பஞ்சாப் ஸிந்து க்ஷேத்திர ஆஸ்பத்திரியில் சேர்த்தார். மற்றொரு சமயம் ஒரு பெண் துறவி மயக்கமுற்று கீழே விழுந்து விட்டாள். உடனே அவரைச் சுமந்து சென்று குருதேவர் ஆஸ்பத்திரியில் அனுமதித்தார். ஒரு சமயம் ஆசிரமப் படித்துறையில் கங்கா பூஜை நடைபெற்றது. கங்கை அன்னைக்கு ஒவ்வொருவரும் வில்வ இலைகளை அர்ச்சித்துப் போட்டனர். அப்பொழுது அங்கே இருந்த குருதேவர். ''வில்வ இலைகளை ஒவ்வொருவரும் கங்கைக்கு அர்ச்சிக்கிறீர்கள். எல்லாருடைய கைகள் மூலமாக நாமே அர்ச்சனை செய்கிறோம் என்ற எண்ணத்துடன் இந்த அர்ச்சனை அமையுமானால் அது எவ்வளவு உயரிய பூஜையாக அமையும்'', என்று அத்வைதத்தின் உயர்ந்த நிலையை அவர்களுக்குப் புகட்டினார்.

பக்தர்களுக்காக பிரார்த்தனை

பிறரது நலத்தை நாடி குருதேவர் பிரார்த்தனை செய்தது குறிப்பிடத்தக்கதொன்றாகும். பிரார்த்தனையின் மூலம் வியாதிகளைக் குணப்படுத்துவதில் அவருக்கு மிகுந்த

நம்பிக்கை இருந்தது. அதை அவர் 'நாமாபதி' என்று அழைப்பார். ஏதாவது விபத்தைக் கண்டாலோ, நோயாளி யைப் பார்த்துவிட்டாலோ, காலுக்கடியில் எறும்போ பூச்சியோ பட்டுவிட்டாலோ, ஆசிரமவாசிகள் சண்டையிட்டுக் கொண்டாலோ அவர் எங்கிருந்தாலும் மானஸிகமாகப் பிறரது நன்மைக்காகப் பிரார்த்தனை செய்வார். பக்தர்களின் நோய் குணமாக, அவர்களது விருப்பங்கள் நிறைவேற அவரவர் பிறந்த நாளன்று ஆசிரம சத்சங்கத்தில் குருதேவர் கூட்டுப் பிரார்த்தனையின் முடிவில், ''எல்லாம் வல்ல இறை வன்......க்கு ஆரோக்கியம், நீண்ட ஆயுள், அமைதி, இன்பம், செழிப்பு, அமரத்வம் ஆகியவற்றை அளித்து அருள் வாராக,'' என்று மனமுருகிப் பிரார்த்திப்பார். குறிப்பிட்ட நாளன்று பட்டியலில் சேர்க்கப்பட்ட பக்தர்களின் பெயர் களுடன் கடைசியில், உலகோர் அனைவருக்காகவும்', என்ப தைச் சேர்க்க அவர் தவறமாட்டார். 'உலகத்து மக்கள் அனைவருக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள்'. என்று அவர் தம் பக்தர்களிடம் கேட்டுக்கொள்வார்.

சுவாமிஜியிடம் எப்பொழுதும் அவரது பக்தர்களின் ஒரு பட்டியல் இருக்கும். அது அடிக்கடி அவரால் புதுப்பிக்கப் படும். தினமும் அவர் இரவு படுக்கச் செல்வதற்கு முன்பாக அத்தனை பக்தர்களது நல்வாழ்வுக்காகப் பிரார்த்தனை செய் வார். வியாதியினால் வருந்தும் பக்தர், மன நோயினால் அவதிப்படும் பக்தர் — இவ்விதம் பல்வகை பக்தர்களுக்காக அவர் இறைவனிடம் பிரார்த்திப்பார். பிறரை அவர் நேசித்த விதம் அலாதியானது. உலகின் ஏதாவது ஒரு பகுதியில் வெள்ளம், பஞ்சம், பிணி, போர் போன்ற ஏதாவது துன்பம் ஏற்பட்டால் குருதேவர் ஆசிரமத்தில் கூட்டுப் பிரார்த் தனைக்கு ஏற்பாடு செய்வார்.

1946-ம் வருடம் நவம்பர் முதல் வாரம். வட இந்திய மாநிலங்களில், ஹிந்து முஸ்லிம் கலவரம் தலை

விரித்தாடியது. ரிஷிகேசத்திலுள்ள சாதுக்கள் அனைவரையும் அடியோடு ஒழித்துவிட முஸ்லிம்கள் ஒரு திட்டம் தீட்டியுள்ளனர் என்று வதந்திகள் ஆங்காங்கு கிளம்பின. சுவாமிஜி ஆசிரமவாசிகள் அனைவரையும் ஆசிரம விசுவநாதர் கோவில் முன் அழைத்தார். ஐந்து லட்சம் பஞ்சாட்சர ஜபம் செய்யப்பட வேண்டும் என்றும், அதில் அனைவரும் பங்கு கொள்ள வேண்டும் என்றும், அதன் முடிவில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையை வேண்டி ஒரு ஹோமம் செய்யப்பட வேண்டும் என்றும் அறிவித்தார். உடனே பஞ்சாட்சர ஜபம் ஆரம்பமாயிற்று. ஜபம் முடிவதற்கு முன்னலேயே கலகம் அடங்கி எங்கும் அமைதி நிலவிற்று.

பாதையோரங்களில் ஐஸ்கிரீம், பழங்கள் போன்றவற்றை வியாபாரம் செய்பவர்கள் குருதேவரின் பார்வையில் பட்டு விட்டால் போதும், உடனே அவர்களிடமுள்ள பொருள்களை நிறைய விலைக்கு வாங்கி அருகில் உள்ளவர்களுக்கு விநியோகம் செய்து மகிழ்ச்சி அடைவார். அந்த ஏழை மக்களுக்கு உதவுவதில் அவருக்கு அவ்வளவு விருப்பம். பர்ஸைத் தொலைத்த பாதசாரி, ஜெயிலிலிருந்து விடுபட்ட கைதி, பணமின்றிவாடும் சாது, பள்ளிப் பணம் தேவைப்படும் ஏழை மாணவன் - அனைவரும் குருதேவரை நாடி உடனுக்குடன் உதவி பெற்றனர்.

பிறருக்குக் கொடுப்பதிலும் குருதேவர் ஒரு பிரத்தியேக முறையைக் கையாண்டார். ஏழை சாது ஒருவர் உதவி வேண்டி குருதேவரிடம் வருவார். "சுவாமிஜி, நான் ஒரு பரம ஏழையான சாது. எனக்கு ஒரு போர்வை வேண்டும். குளிரை என்னல் பொறுக்க முடியவில்லை," என்று தன் நிலையை அவர் விளக்குவார். 'அச்சா, மகாராஜ்! ஒரு கீர்த்தனம் பாடுங்கள். உங்கள் குரல் மிகவும் இனிமையாக இருக்கிறது,' என்று குருதேவர் அவரைக் கேட்டுக் கொள்வார். ஒரு சில நிமிடங்கள் அந்த சாது ஏதாவது ருஜ

பாடலைப் பாடுவார். உடனே குருதேவர் பத்து ரூபாய் நோட்டு ஒன்றையும் அவர் கேட்ட கம்பளியையும் அவரிடம் கொடுத்து, 'கீர்த்தனம் ரொம்ப நன்றாக இருக்கிறது' என்று பாராட்டுவார். பணத்தைப் பெறுபவர் ஏதோ தனது ஏழ்மை நிலைமைக்காகத் தரப்படும் தொகை என்று அதை வருத்தத் துடன் கருதாமல், தன்னிடம் உள்ள திறமைக்கான ஒரு பரிசு என்று கருதும் அளவிற்கு குருதேவர் மிகவும் சாதுர்யமாக நடந்துகொள்வார்.

அவர் கொடுத்த பணத்தைவிட, பொருளை விட குருதேவரின் பரந்த இதயம்தான் அனைவரையும் வெகுவாகக் கவர்ந்தது. 1930ம் ஆண்டில் நடந்த ஒரு சிறு நிகழ்ச்சி: குருதேவர் கங்கைக் கரையில் ஒரு சிறு அறையில் வசித்து வந்த சமயம் அது. சப்பாத்தியும் கொஞ்சம் சாதமும் தான் அவருக்குச் சத்திரத்தில் கிடைக்கும். தென்னிந்தியா விலிருந்து ஒரு காட்டு இலாகா அதிகாரி குருதேவருடன் தங்கலானார். அந்த அதிகாரிக்குச் சப்பாத்தி சாப்பிட்டுப் பழக்கமில்லை. எனவே தன்னிடம் உள்ள சாதம் பூராவையும் குருதேவர் அவருக்குக் கொடுத்துவிடுவார். அது அவருக்குப் போதவில்லை. அதைக் கண்ட குருதேவர் காட்டிற்குள் ஓடிச்சென்று வில்வப் பழங்களைப் பறித்துக் கொணர்ந்து அவரிடம் கொடுத்தார். அவற்றிற்கு ருசியில்லை என்று சொல்லி அந்த அதிகாரி அவற்றைச் சாப்பிட மறுத்தார். உடனே குருதேவர் சமையல் அறைக்குள் சென்று சீனி டப்பாவைக் கொணர்ந்து அந்தப் பழங்களுடன் சீனியைக் கலந்து 'சக்கரைப் போட்டால் கம்பளியையும் தின்னலாம்' என்று வேடிக்கையாகச் சொல்லிக்கொண்டே அன்புடன் கொடுத்தார்.

### எளிமையின் வடிவம்

வாரி வாரிக் கொடுத்தது போலவே குருதேவரிடம் காணப்பட்ட மற்றொரு பிரதானமான நல்லகுணம் 'தன்

வேலையைத் தானே செய்தல்' என்பதாகும். தன்னால் செய்ய முடிந்த காரியத்தை அவர் பிறரிடம் ஒரு போதும் ஒப்படைக்க மாட்டார். அவரது அகில இந்திய யாத்திரையின் போது ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ரயில் நின்றவுடன் பக்தர்கள் போட்டி போட்டுக் கொண்டு மாலைகளை அவருக்கு அணிவிப்பர். உடனேயே அவர் எந்த ஒரு கூலி அல்லது போர்ட்டருக்காகவும் காத்திராமல் தனது பெட்டி படுக்கைகளைத் தானே தன் தலை மீது சுமந்து சென்று ரயிலை விட்டுக் கீழிறங்கி நடக்க ஆரம்பித்து விடுவார்.

குருதேவரின் ஜயந்தியை ஒட்டி ஆசிரமத்தில் மிகச் சிறப்பான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. பக்தர்கள் கூட்டம் கிளப்பிய 'சிவானந்த மகாராஜ் கீ ஜய்' என்ற கோஷம் விண்ணைப் பிளந்தது. அதைக் கண்ட குருதேவர் அவர்களை நோக்கி 'எதிலுமே உணர்ச்சிக்கு அடிமைப்பட்டு விடாதீர்கள். பகவானைப் பூஜிப்பதிலும் கூட அடக்கம் வேண்டும், அமைதி வேண்டும். ஆட்ட பாட்டத்தாலும் பெருத்த ஒலி எழுப்புவதாலும் தெய்வீக ஆனந்தத்தை ஒரு போதும் முழுதும் வெளிக் காட்ட முடியாது,'' என்று கூறி எதிலும் அடக்கத்தைக் கைக் கொள்ளுமாறு வேண்டினார்.

அனைவரையும் குருதேவர் தனது குருவாகக் கருதினார். 'எனது சிஷ்யர்கள் எனது குரு. அவர்களிடமிருந்து நான் நிறையக் கற்றுக் கொண்டிருக்கிறேன்' என்று அவர் வெளிப்படையாகவே கூறுவார். அவர் அப்படிக் கூறியது அவரது அளப்பரிய பணிவை எடுத்துக்காட்டுகிறது. ஆசிரம சத்சங்கம் மற்றும் யோக வேதாந்தப் பல்கலைக் கழக வகுப்புக்களில் ஆரம்ப சாதகர்களின் சொற்பொழிவுகளைக்கூட அவர் மிகவும் சிரத்தையுடன் செவி மடுப்பார். பிறகு அந்த சாதகரை நோக்கி, ''நீங்கள் சொற்பொழிவுகளைக் கேட்கையில் நோட்டுப் புத்தகங்களில் குறிப்புக்கள் எடுத்துக் கொள்

ளுகிறீர்களா?'' என்று சூசகமாக அவர்களது கடமையை உணர்த்துவார்.

குருதேவர் ஒரு போதும் தமது பழைய நிலைமையை மறந்தது கிடையாது. ஒரு சமயம் கோடைக் காலத்தில் மதியம் ஒரு இளைஞன் ஆசிரமத்தில் குருதேவரின் காலடியில் வந்து மயங்கிப் பொத்தென்று விழுந்தான். உடனே அவனைப் பற்றி எதுவுமே அவர் விசாரிக்காமல் அவனுக்குத் தேவை யான முதலுதவி அனைத்தையும் தாமே செய்தார். பிறகு அவனுக்குப் பிரக்ஞை திரும்பியதும் அவனை ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி விட்டு, அருகில் இருந்தவர்களை நோக்கி, ''இந்த இளைஞனைப் பார்த்ததும் எனக்கு நான் மலேயாவில் ஒரு சமயம் உண்ண உணவின்றி தெருவில் மயங்கி விழுந் தது நினைவிற்கு வந்தது. இறைவன் அப்பொழுது ஒரு பெருமாள் கோவில் அர்ச்சகர் வடிவில் வந்து எனக்கு உதவினார்'', என்று தமது பழைய வாழ்வை நினைவு கூர்ந்தார்.

உங்கள் குருவைச் சந்திக்கையில் 'ஓம் நமோ நாரா யணாய' என்று சொல்லி இருகரம் கூப்பி வணங்க வேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் கற்ற கல்வி பயனுடையதாகும்'', என்று குருதேவர் தம் சிஷ்யர்களிடம் கூறுவார். ''சுவாமி விசுவானந்தருடன் ஒரு சில மணி நேரங்கள் தான் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. இருந்தாலும் அவரை எனது தினசரிப் பிரார்த்தனையில் நான் போற்றி வணங்குகிறேன். தவிர எனக்கு விரஜாஹோமம் செய்து வைத்த சுவாமி விஷ்ணுதேவானந்தரையும் நான் எப்பொழுதும் நினைந்து போற்றுகிறேன்', என்று குருவை ஒருபோதும் நாம் மறக் கலாகாது என்று அவர் நமக்குப் பாடம் புகட்டுகிறார்.

### உண்மைத் துறவின் உயரிய இலக்கணம்

உண்மையான துறவின் இலக்கணமாகக் குருதேவர் திகழ்ந்தார். கிழிந்த உடை, சீவாத முடி என்பதெல்லாம்

துறவு ஆகாது. அவர் தூய்மையின் உறைவிடமாகத் திகழ்ந்தார். அவர் உடுத்திய உடை எப்பொழுதும் சுத்த மானதாக இருக்கும். 'யான்' 'எனது' இரண்டையும் துறத் தலே உண்மைத் துறவு என்பதை அவர் வாழ்ந்து காட்டினார். பற்றை விடுதலே துறவு. துறவு என்பது மனத் தைப் பொறுத்தது என்பதுவே அவரது கருத்து.

துறவு என்று சொல்லி உடலை வருத்துவது குருதேவருக் குப் பிடிக்காது. மாறாக உடலை யாண்டும் ஆரோக்கியமாக வைத்திருந்து அதை இறைத் தொண்டில் சதா ஈடுபடுத்து வதுதான் அவர் கொண்ட கொள்கையாகும். ஆரம்ப நாட் களில் குருதேவர் மாலை வேளைகளில் நெடுந்தூரம் உலாவச் செல்லுவார். நடப்பது ஒரு சிறந்த பயிற்சியாகும். குளிர் மாதங்களில் ஆசிரமத்தில் அவர் பாட்மின்டன் விளையாடு வார். வேலை அதிகரித்தபொழுது அதற்கு அவருக்கு நேரம் கிடைக்கவில்லை. எனவே எங்கே கொஞ்சம் நேரம் கிடைத் ததோ அந்த இடத்தில் ஒரு டென்னிஸ் மட்டையால் சில நிமிடங்கள் பந்தைச் சுவற்றில் அடித்து விளையாடுவார். அந்தச் சில நிமிடங்களுக்குப் பிறகு அடுத்த வேலை செய் வதற்குத் தயாராகிவிடுவார். வியாதானகாலத்தில் படுக்கை யில் இருந்தவாறே அவர் ஒரு சில எளிய பயிற்சிகளைச் செய்வார். ஆசனம், பிராணாயாமத்தில் அவர் ஒரு பொழுதும் தவறியதே கிடையாது. அவரது உடல் நிலை இறுதி வரை யில் நன்கு இருந்ததற்குக் காரணம் இவைகளேயாகும். 'ஆசைகளையும் உணர்ச்சிகளையும் அடக்காமல், மனத்தை ஒடுக்காமல் வெறுமனே உடலை மட்டும் வருத்துவதால் முக்தி கிட்டாது. எறும்புப் புற்றை வெளியே அடிப்பதால் எப்படி உள்ளே உள்ள பாம்பு சாகாதோ அதுபோல உடலை வருத்துவதால் மட்டும் மனம் சாகாது', என்று குருதேவர் கூறுகிறார்.

ஒரு முறை பிரமுகர் ஒருவர் ஆசிரமத்துக்கு விஜயம் செய்த சமயம் குருதேவர் தாம் பயன்படுத்திய நோட்டுப் புத்தகங்கள், பேனாக்கள், கடிகாரங்கள் முதலியவற்றை

அவருக்குக் காண்பித்தார். 'சன்யாசி ஒருவர் இதையெல்லாம் பயன் படுத்தக்கூடாது என்று மக்களில் சிலர் தவறான எண்ணம் கொண்டிருக்கின்றனர். ஆனால் என் கருத்து அப்படி அல்ல. தொண்டுதான் முக்கியம். மனித சமுதாயத்திற்குத் தொண்டு செய்யுங்கள். பணி, பணி, பணி—இது தான் எனது இலட்சியம். பணிபுரிவதற்காக உடல், மற்றும் மனத்தை நல்ல நிலையில் வைத்திருங்கள். சன்னியாசிகளில் நான் வேறுபட்டவன். நான் தொண்டு செய்ய விரும்பு கிறேன். சன்னியாசி என்றால் 'உம்' என்று முகத்தை வைத்துக் கொண்டு இப்படி விரைப்பாக உட்கார்ந்திருக்க வேண்டும்' (இந்த இடத்தில் சுவாமி விரைப்பாக உட்கார்ந்து கண்களை மூடிக் காண்பிக்கிறார்) என்று மக்கள் நினைக்கிறார்கள். அது தான் ஜீவன் முக்தி நிலை என்பது அத்தகையவர்களின் நினைப்பு. ஆனால் என் கருத்து வேறு. வேலைதான் உங்களது தியானமாக இருக்க வேண்டும். அது தான் எனது முறையாகும்' என்று துறவிற்கான புது விளக்கத்தைக் குருதேவர் அந்த அன்பரிடம் விளக்கினார்.

## இன்றே செய்க! இன்னே செய்க !

வேலையை எப்படிச் செய்யவேண்டும் என்பதற்குக் குருதேவர் சில நெறி முறைகளைக் கொண்டிருந்தார். D.I.N, என்பது அவற்றில் முதலாவதாகும். Do It Now என்பது இதன் விளக்கமாகும். 'இப்பொழுதே செய்க' என்பது இதன் பொருள். ஒரு காரியத்தைச் செய்ய விரும்பினால் குருதேவர் அதைத் தயங்காமல் உடனடியாகச் செய்து விடுவார். 1950ல் அகில இந்திய யாத்திரையின் போது நடந்த ஒரு நிகழ்ச்சி. குருதேவரும் அவரது குழுவினரும் ராமேஸ்வரம் ரயில் நிலையத்திலிருந்து ஆலயத்திற்கு மாட்டு வண்டிகளில் போய்க்கொண்டிருந்தனர். அப்பொழுது அந்தக் குழுவில் இருந்த ஒரு வயதான ஆந்திர மாநிலப் பெண்மணி ராமேஸ்வரத்தில் தனக்கு ராம நாம தீட்சை

அளிக்க வேண்டும் என்று என்றோ ஒரு நாள் முன்னர் தம்மிடம் கேட்டது அவரது நினைவிற்கு வந்தது. 'நல்லது செய்ய நினைத்தால் உடனேயே அதைச் செய்து விடுக' என்று சொல்லிய குருதேவர் அந்த இடத்திலேயே வண்டியை நிறுத்தி அந்த அம்மையாருக்குத் தீட்சை அளித்தார். அது குருதேவர் பரம்பரையிலேயே ஊறிய ஒரு குணமாகும். குருதேவர் ஒரு சமயம் தமது பூர்வாசிரமப் பாட்டனார் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை எடுத்துரைத்தார். ஒரு நிலத்தகராறு காரணமாக அந்த வயதானவர் தமது நிலத்தைப் பறிகொடுக்கும் நிலையில் இருந்தார். சட்டப்படி அவருக்குரிய நிலம் அது. ஆனால் எதிர்த்தரப்பினர் விதண்டாவாதத்தில் ஈடுபட்டனர். அடுத்த நாள் காலையில் முடிவுக்கு வர வேண்டிய இக்கட்டான நிலை. முதல் நாள் மாலையிலேயே அந்த வயோதிகர் கட்டட சாமான்கள் மற்றும் கூலியாட்கள் அனைவரையும் அங்கே கொணர்ந்து மறுநாள் பொழுது விடிவதற்குள் அந்த நிலத்தில் ஒரு சிறிய கட்டடத்தைக் கட்டி முடித்து விட்டார். அத்துடன் அந்த நிலத்தைப் பற்றிய தகராறும் தீர்ந்தது. நிலமும் அவருக்குச் சொந்தமாயிற்று. இந்த நிகழ்ச்சி குருதேவரின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. எந்த நிகழ்ச்சியையும் அவர் ஒத்திப் போடமாட்டார். ஆசிரம ஆலயத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை முகூர்த்த வேளை குறித்து பண்டிதர்களின் இரு குழுவினரிடையே கருத்து வேறுபாடு நிலவியது. அதைக் கண்ட நம் குருதேவர், "பக்தர்கள் முகூர்த்த வேளைக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. இன்றே அகண்ட கீர்த்தனத்தை ஆரம்பியுங்கள். எந்த விக்கினமும் எதிர்ப்படாது," என்று அந்தப் பிரச்சினையைத் தீர்த்து வைத்தார். ஆசிரமத்தில் இன்றும் பஜனைக் கூடத்தில் 'இடைவிடாது தொடர்ந்து நடந்து வரும் மஹாமந்திர கீர்த்தனம் தொடங்கியது மற்றும் ஆசிரம விஸ்வநாத மந்திரில் பிரதிஷ்டை நிகழ்ந்தது இந்த விதத்திலாகும்.

சுவர்க்காசிரமத்தில் குருதேவர் இருந்த சமயம் அவரது சீடர்களில் இருவர் தங்களுக்கு சன்யாச தீட்சை அளிக்கும் படி குருதேவரிடம் வேண்டிக் கொள்ள முடிவு செய்தனர். தங்களது விருப்பத்தை ஒரு காகிதத்தில் எழுதி குருதேவரின் குடீர் வாயிலில் ஒட்டினர். அதைப் பார்த்ததும் குருதேவர் 'ஒரு விநாடி கூடத் தாமதிக்கக் கூடாது, ஏனெனில் இப் பொழுதுள்ள மனம் இன்னும் சிறிது நேரத்திற்குள் மாறி விடும்,'' என்று முடிவு செய்து உடனே ஒரு நாவிதனைக் கூட்டி வந்து அவரது குடீருக்குள் அவனை வைத்துப் பூட்டி விட்டு (அந்த சிஷ்யர்களைத் தாம் தேடிப் போன சமயத்தில் அந்த நாவிதன் எங்காவது போய்விடக் கூடாதே என்பதற் காக இந்த முன்னேற்பாடு) அந்த சிஷ்யர்களைத் தேடிக் கொணர்ந்து அவர்களுக்கு முறைப்படி சன்யாச தீட்சை அளித்தார்.

## செய்வன திருந்தச் செய்தவர்

எந்தச் செயலைச் செய்தாலும் அதை முழு மனதுடன் நல்ல முறையில் செய்ய வேண்டும் என்பது அவர் கடைப் பிடித்த கொள்கையாகும். அரைகுறைமனதுடன் எதையும் செய்வது அவருக்குப் பிடிக்காது. ஒரு சமயம் ரிஷிகேசத்தில் அங்காடி ஒன்றுக்கு அஸ்திவாரக்கல் நாட்டும்படி குரு தேவரிடம் பக்தர்கள் வேண்டிக்கொண்டனர். விழா முடிந்து குருதேவர் ஆசிரமம் திரும்பிய பிறகு அவர் அஸ்திவாரக் கல் நாட்டியவிதம் குறித்து சிஷ்யர்கள் பேசிக் கொண்டனர். ஒரு கொத்தனார் செய்யும் அளவுக்கு விஸ்தாரமாக குரு தேவர் அடித்தளக் கல் பூச்சு வேலையைச் செய்திருக்க வேண் டாம் என்பது அவர்களது கருத்து. "சுவாமிஜி! பொது வாக ஒரு கட்டடத்திற்கு முக்கியஸ்தர்கள் அடித்தளக்கல் நாட்டுகையில் ஏதோ பெயருக்குக் கரண்டியால் கொஞ்சம் சுண்ணாம்புச் சாந்தை எடுத்துப் பூசுவார்கள். மற்றதைக் கொத்தனார்கள் செய்வார்கள்,'' என்று அவர்கள் சொன் னதும், குருதேவர், "நான் ஒன்றும் பெரிய மனிதன் இல்லையே. நாம் செய்வது அனைத்தையும் மனப்பூர்வமாகச்

கூடுமான வரை சுத்தமாகச் செய்ய வேண்டும். ஒரு விநாடி நேரத்துக்கு நான் கொத்தனாராக ஆனாலும் கூட அந்த வேலையைச் சுத்தமாகச் செய்ய வேண்டும். செய்வன திருந்தச் செய் என்பதுவே எனது கொள்கையாகும்'. என்று பதிலளித்தார்.

ஒரு சமயம் ஆசிரமவாசியான ராமானந்தர் என்பவரின் இறுதிச் சடங்குகளைச் செய்வதில் ஆசிரமவாசிகள் ஈடுபட்டிருந்தனர். குருதேவர் கீழே கிடந்த ராமானந்தரின் முகத்தைப் பார்த்தார். சிஷ்யர்களைப் பார்த்து, "அவசரப் படாதீர்கள், முதலில் செயற்கை சுவாசத்தை அவருக்குக் கொடுங்கள். ஒரு சில இஞ்ஜெக்ஷனைப் போடுங்கள். அவர் வெறும் மயக்க நிலையில் இருக்கிறாரா இல்லையா என்பதைத் தீர்மானம் செய்யுங்கள்" என்று ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை கொடுத்தார். சிஷ்யர்கள் அங்குமிங்கும் பறந்தனர். இரண்டு பேர் ராமானந்தரின் கால்களில் டர்பென்டைனைத் தடவித் தேய்த்தனர். மற்றொருவர் ஊசி போட்டார். குருதேவரே அந்த சரீரத்தின் அருகில் அமர்ந்து மார்பைத் தடவி ஹரே ராம கீர்த்தனம் செய்தார்.

செயற்கை சுவாசம் கொடுத்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் ராமானந்தரின் கைகளை விட்டபொழுது அது பொத்தென்று உணர்ச்சி ஏதுமின்றித் தரையில் விழுந்தது. "சரி இப்பொழுது சொல்லுங்கள் "கிருஷ்ண பகவான் கீ ஜய்". செய்வது அனைத்தையும் செய்து முடித்த பின்னர் குருதேவர் மேற்கொண்டு நடக்க வேண்டிய காரியங்களுக்காக சிஷ்யர்களுக்கு உத்தர விட்டார். பஞ்சாட்சர கீர்த்தனையுடன் குருதேவரே அந்த சரீரத்தின் தலையில் ஒரு செம்பு கங்காஜலத்தை ஊற்றினார்.

'உங்களால் முடிந்த மட்டும் முயற்சி செய்யுங்கள். மற்றதை இறைவனிடம் விட்டுவிடுங்கள். முயற்சி செய்வது உங்கள் கடமை, பலனை அளிப்பது இறைவன் பெருமை. 'கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன' என்ற

கீதா வாக்கியத்துக்கு விளக்கமாக குருதேவர் வாழ்ந்து காட்டினார்.

வெறும் ஸ்தூல உடலில் அல்லாமல் தூய அருள் வடிவத்தில் அவரைப் பல பக்தர்கள் கண்டு பணிந்தனர். லெஸ்லி ஷெப்பர்டு என்ற ஒரு சீரிய ஆங்கிலேய யோகி குருதேவரைப் பற்றிக் குறிப்பிடுகையில், "நாம் சத்சங்கத்தின் போது பார்த்துக் கேட்பவர் உண்மையான சுவாமிஜி அல்ல; ஒரு மாபெரும் சக்தியாக, நம்மை எல்லாம் எண்ண அலைகளால் ஆட்கொண்டு, வார்த்தை எதுவும் இன்றியே நமது ஆன்மீக முன்னேற்றத்தில் நமக்கு வழிகாட்டி நடத்திச் செல்லும் அந்தப் பிரம்மாண்ட ஆன்ம சக்தியே உண்மையான சுவாமிஜி, குருதேவர் ஆவார்", என்று கூறுகிறார். குருதேவரின் தூல உடல் ஒரு ஒளி விளக்கு என்றால், அதன் ஒளி உலகெங்கும் பரந்து, விரிந்து, பலரது வாழ்வினைக் கவ்வியிருந்த இருளை அகற்றி ஒளி ஊட்டியது எனலாம். நேரில் தரிசித்தவர் மட்டுமல்லாது, அவரைக் காணாதவரும் கூட அவரால் ஈர்க்கப்பட்டு உய்வு பெற்றனர் என்றால் அவரது அருளை என்னென்பது!

பக்தர்கள் மற்றும் சிஷ்யர்களுடன் குருதேவர் விவாதம் ஏதும் செய்ததில்லை. மற்றவர் மனதில் ஒரு பதிவை ஏற்படுத்த வேண்டும் எனவும் அவர் விரும்பியதில்லை. அவரைத் தரிசித்தவர்கள், அவரது நூல்களைப் படித்தவர்கள் அவரது தெய்வீக சக்தியால் காந்தம் ஈர்க்கும் இரும்புபோல் ஈர்க்கப்பட்டார்கள். அவ்வளவுதான். அவரது தரிசன மகிமை அளவிடற்கரியது. அன்பை அவர் பொழிந்தார். அருளை அவர் சொரிந்தார். சந்திரவதன மந்தஹாஸ தேவரூபம் அவருடையது. மதுர கீத கான லோல ஞான ரூபம் அவருடையது. உலகம் பூராவும் அவர் பாதம் பணிந்து அருளைப் பெற்றது.

இன்றும் குருதேவரின் திருவுருவத்தைப் பார்த்தால் அவரது கண்களில் திகழும் ஒளிதான் என்னே! முகத்தில் பொலியும் அமைதி என்னே! அவரது அருள் ஒளி இன்றும் நமக்கு வழிகாட்டுகிறது

## சிவானந்தருடன் ஒரு நாள்

சென்னையிருந்து ஒரு வயதான மூதாட்டி குருதேவரின் தரிசனத்திற்காக ஆசிரமத்திற்கு வந்திருந்தார். நோய் வாய்ப்பட்டிருந்த அவரால் சரிவர நடக்க முடியவில்லை. துரதிருஷ்டவசமாக ஆசிரமத்தில் எந்த அறையும் காலி யில்லாததால் அந்த அம்மையார் கங்கைக் கரையில் இருந்த வேறு ஏதாவது இடத்தில் தங்கும்படிக் கேட்டுக் கொள்ளப்பட்டார்.

குருதேவரைத் தரிசிக்கப் போகையில் அந்த அம்மை யார், "சுவாமிஜி! நான் இவ்வளவு தூரம் இங்கே வந்தது உங்களது தரிசனத்திற்காகவும் உங்களுடன் சத்சங்கத்தில் பங்கு கொள்ளவுமேயாகும். ஆனால் இங்கே தங்க இடமில்லை. தினமும் என்னால் இங்மே வந்து சத்சங்கத்தில் பங்குகொள்ள முடியாதுபோல் தோன்றுகிறது", என்று வருத்தத்துடன் கூறினார்.

"அறை எதுவும் காலி இல்லையா?", குருதேவர் தமது செயலாளரைப் பார்த்துக் கேட்டார்.

"சுவாமிஜி! எல்லா அறையிலும் பக்தர்கள் இருக்கிறார் கள். தற்சமயம் எந்த அறையும் காலியில்லை",

அரிய நூல்களை எழுதுவது என்பது குருதேவரது தொண்டுகளுள் தலையாயது ஆகும். எனினும் "கட்டுரை எழுத நான் பயன்படுத்தும் அறையைக் காலி செய்து அந்தப் பெண்மணிக்கு அளியுங்கள்" என்றார் குருதேவர்.

சத்சங்கத்திற்குப் போகையில் சிரமத்துடன் அந்த அம்மையார் நடந்து செல்வதைப் பார்த்த குருதேவர்" ஒரு நாற்காலி கொண்டுவாருங்கள். அதில் இந்தப் பெண் மணியை அமர்த்தி சத்சங்க அறைக்குக் கூட்டி வாருங்கள் சத்சங்கத்தில் அவரும் ஆனந்தம் அடையட்டும். "என்று சொல்லி விட்டுச் சென்றார்.

பக்தர்களிடம் அவர் காட்டிய அன்பு அலாதியானது.

# 13

## இதய ஜோதியான இமய ஜோதி

1960ம் ஆண்டு ஒரு நாள் சிவானந்தாசிரமத்தில் ஆரத்தியுடன் இரவு சத்சங்கம் இனிதே முடிவுற்றது. அதன் பிறகு குருதேவர் தமது குடிருக்குத் திரும்புவதற்கு முன் வழக்கம் போல் அங்கே குழுமியிருந்த பக்தர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு நின்றனர். அவர்களை ஒவ்வொருவராக குருதேவர் அன்புடன் குசலம் விசாரித்தார். அந்த பக்தர்களில் ஒருவர் விரைவில் தாம் தமது வேலையிலிருந்து ஓய்வு பெற இருப்பதாகத் தெரிவித்தார். அதைக் கேட்ட குருதேவர் சில நிமிடங்கள் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டு, 'எனக்கு ஓய்வு எப்பொழுதோ? நான் ஓய்வு பெற்றுக் கொண்டிருக்கிறேனே?'' என்று அடங்கிய குரலில் தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார். அதில் அடங்கிய பொருள் அப்பொழுது அங்கு இருந்தவர்களில் எவருக்கும் புரியவில்லை. அதன் பிறகு இரண்டு வருடங்கள் கழிந்தன. 1962ம் வருடம் மே மாதம். நல்லவெயில் காலம், ஆசிரம அலுவலகத்திலிருந்து வெளியேவந்த குருதேவர் பக்தர் ஒருவருடன் போட்டோ எடுக்கவசதியாக அமர்ந்து கொண்டார். போட்டோ எடுத்தான பிறகு பக்தர் குருதேவரை வணங்கி நன்றி தெரிவித்து விட்டுவிடைபெற்றுக்கொண்டார். அந்தரங்க சீடர் ஒருவர் மட்டும் குருதேவருக்கருகில் நின்று கொண்டிருந்தார். திடீரென்று குருதேவர் சீடர் பக்கம்திரும்பி,நாஹம்ந தும் தஃப்தர் கம்' என்று சொன்னார். இந்த வாக்கியம் குருதேவருக்கு மிகவும் பிடித்த ஒரு வாக்கியமாகும். 'நானும் இல்லை, நீருமில்லை, அலுவலகத்தில் அமைதி. என்பது இதன் பொருள்

ஆகும், ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி தாண்டி துரீயாவஸ் தையில் எல்லாம் ஒரே அமைதி என்பதைக் குறிப்பிட்ட குருதேவர் இந்த வாக்கியத்தை முன்பு அடிக்கடி பயன் படுத்திய போதிலும், அன்று எந்தக்காரணமும் இன்றி அதைக் கூறியது அந்த சீடரின் மனதில் இனம் தெரியாத ஒரு கவலையை உண்டாக்கியது.

1963ம் வருட ஆரம்பத்தில் ஒரு இரவு சத்சங்கத்தில் குருதேவர் அங்கு கூடியிருந்தோர்களை நோக்கி, "சன்யாசம் பெற்றுக்கொள்ள விருப்புபவர்கள் வரும் சிவராத்திரியன்றே பெற்றுக்கொள்ளலாம். அடுத்த சிவராத்திரிக்குள் என்ன நடக்குமோ யாருக்கும் தெரியும்?" என்று மறைமுகமாக தமது முடிவை அறிவித்தார். அருகிலிருந்த ஒரு சீடர் சுவாமிஜி அந்தமாதிரிப் பேசக்கூடாது என்பதை சூசக மாகத் தெரிவிக்கவே, குருதேவர் அவரிடம் 'நீங்கள் சும்மா இருங்கள், உங்களுக்குத் தெரியாது', என்று கூறினார்.

### எதிர்பாராத மாற்றம்

ஏப்ரல் 1963. திடீரென்று குருதேவரிடம் ஒருகுறிப்பிடத் தக்க மாற்றம் காணப்பட்டது. அவரது நடவடிக்கைகளில் அதற்கு முன்பு எப்பொழுதும் இல்லாத ஒரு மாற்றம் அனை வரையும் வியப்பில் ஆழ்த்தியது. வாரி வாரி வழங்கிய குரு தேவர் சிக்கன நடவடிக்கைகளில் தீவிரமான கவனம் செலு த்தலானார். ஆசிரமச் செலவுகளைப் பெருமளவுக்கு அவர் குறைத்தார். ஆசிரம வாசிகளின் சிறு தேவைகளில் கூட அவர் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கலானார். அவரது அந்த நடவடிக்கைகளினால் பல மாதங்கள் சுமந்து கிடந்த ஆசிர மக் கடன்கள் ஒரே மாதத்தில் மிகவும் குறைந்து விட்டன. 'சிக்கனம்; சார் சிக்கனம்' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டுக் கொண்டே குருதேவர் ஆசிரம நிதி நிலைமை யில் பெரிதும் கவனம் செலுத்தினார். யார் எது கேட்டு அவரி டம் போனாலும், வாரி வாரிக் கொடுத்தவர், இப்போது

"சிக்கனம், சார்", என்று சொல்லுவதைக் கேட்கவும் அன்பர்களுக்கு ஒருபுறம் வியப்பும் மறுபுறம் திகைப்பும் ஏற்பட்டது.

பல தடவைகள் குருதேவர் வெவ்வேறு நபர்கள் மூலம் நாட்காட்டியைக் கொண்டு வரச் சொல்லுவார். ஒரு சமயம் தினசரிக் காலண்டரில் குருதேவர் மொத்தமாக ஜூன் மாதம் வரைக்கும் நாள்களைத் தள்ளி ஜூலை மாதத்தில் ஒவ்வொரு நாளாகப் பார்க்கலானார். அருகிலிருந்த ஒரு சீடர், 'சுவாமிஜி, இது என்ன?', என்று திடுக்கிட்டுக் கேட்டதும், அவர், 'ஒன்றுமில்லை, உங்களுக்குத் தெரியாது', என்று சொல்லி காலண்டரைத் திருப்பிக் கொடுத்தார். அவரருகிலிருந்த ஒரு சிலரே குருதேவர் தமது மகாசமாதிக்கான தேதியைக் குறிப்பிடுவதில் கவனம் செலுத்துகிறார் என்பதை உணர்ந்தனர்.

1963 மே மாதத்திலிருந்தே அலுவலகத்திலிருந்து திரும்பியதும் சுவாமிஜி தமது உடல்நிலையைக் கொஞ்சமும் பொருட்படுத்தாது, தமது நூல்கள் மற்றும் டைப் செய்யப்பட்ட பகுதிகளிலிருந்து உரக்கப் படித்து டேப் செய்வதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தார். எப்பொழுதும் ஒரு சீடர் அருகிலிருந்து கொண்டு குருதேவரின் அமுத மொழிகளை டேப் செய்துவந்தார். இந்தக் காரியத்தில் குருதேவர் மிகுந்த கவனம் செலுத்தினார்.

மனித சமுதாயத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற அவரது கட்டுக்கடங்காத ஆர்வம் எத்தனை எத்தனையோ விதங்களில் வெளிப்பட்டது. எப்பொழுதுமே பொதுவாகப் பத்திரிகைகளுக்கு குருதேவர் தமது கட்டுரைகளைத் தொடர்ந்து அனுப்புவது வழக்கம் என்றாலும், மகாசமாதிக்கு முன்பு எதிர்பாராத அளவில் அதிக எண்ணிக்கையில் அவர் தமது கட்டுரைகளைப் பத்திரிகைகளுக்கு அனுப்பி வைத்தார். இறுதிவரையில் தொண்டு என்ற பெரும் இலட்சியத்தை அவரிடம் காணமுடிந்தது.

டேப் ரிகார்டரில் குரல் பதிவு செய்யப்படுகையில் பல தடவைகள் குருதேவர், "பார்வை மங்குகிறது. எவ்வளவு டேப் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்து கொள்ளுங்கள். கேள்வி மங்குகிறது. என்ன சொல்ல வேண்டுமோ அதை இப்பொழுதே சொல்லிவிடுங்கள். நா குழறுகிறது. என்ன கேட்க வேண்டுமோ அதை இப்பொழுதே கேட்டுவிடுங்கள்", என்று அடிக்கடி சொல்லி வந்தார். ஒருநாள் தபால்களில் குருதேவர் கையெழுத்திடுகையில், கொஞ்சம் வேடிக்கை யாகவே அவர் கடிதங்களைக் கொணர்ந்த சீடரை நோக்கி, 'பார்வை மங்குகிறது. இனிமேல் என்னால் கையெழுத்துப் போட முடியாது சார்', என்று சொல்லிவிட்டு தாம் சொல்லு வதன் உட்கருத்தை அவர் புரிந்து கொள்ளுகிறாரா என் பதைத் தெரிந்து கொள்ளும் விதத்தில் அவரை உற்று நோக்கினார்.

இறுதி வாக்கியம்

1963 ஜூன் 21ம் தேதி. அதுதான் ஆசிரம வைரவிழா அறை அலுவலகத்திற்கு குருதேவர் கடைசியாக வந்த நாளாகும். அலுவல்முடிந்து வழக்கம்போல அவர் அறைக்கு வெளியே வந்தார். காஷியர் அலுவலகத்துக்குப் பக்கத்தில் உள்ள வேப்ப மரத்தை நெருங்கியதும், அவர் சற்றே நின்றார். தம்மைத் தொடர்ந்து வந்த பக்தர்களை நோக்கி தமக்கே உரிய வேடிக்கையுடன், 'ஓ' பிரம்ம லோகத்தி லிருந்து விமானம் வரப்போகிறது. யார் யார் வருகிறீர் கள்?,' என்று கேட்டார். லக்னோவைச் சேர்ந்த முராரிலால் என்ற வக்கீல், "சுவாமிஜி, நான் வருகிறேன்" என்றார். அருகில் பதில் பேசாது வெறுமனே புன்முறுவல் செய்த லக்னோவைச் சேர்ந்த மற்றொரு பிரதமசிஷ்யையான டாக்டர் தேவகி குட்டியைப் பார்த்து குருதேவர் 'உம்! நீங்கள்...... கொஞ்ச காலத்திற்குப் பிறகு போலும்', என்று வேடிக்கை யாகச் சொன்னார். ஆனால் அவரைப் பொறுத்த மட்டில்

அன்றிலிருந்து இருபத்து மூன்ருவது நாள் விமானம் வர இருந்தது என்பது அவரைத் தவிர வேறு எவருக்கும் அப்பொழுது தெரியவில்லை. குடிருக்குத்திரும்பிய குருதேவருக்கு இடுப்பு மூட்டில் வலி கண்டது. அன்று இரவு சத்சங்கத்தில் அவரால் பங்கு கொள்ளமுடியவில்லை. உடனடியாக சிகிச்சை செய்யப்பட்டு மருந்துகள் கொடுக்கப்பட்டன. அடுத்த நாளும் குருதேவரால் அலுவலகம் போக முடியவில்லை. தமது அறையில் இருந்து கொண்டே அவர் கடிதப்போக்குவரத்துக் காரியங்களைக் கவனித்தார். இரவில் வலி அதிகமாயிற்று. மறுநாள் காலையில் தமது குடிரின் வராந்தாவிற்கு குருதேவர் வந்தார். தபாலைப் பார்த்தார். டேப் ரிகார்ட் செய்வதற்காக கொஞ்சம் பகுதிகளை வாசித்தார். ஆனால் சீக்கிரமே அதை முடித்துக் கொண்டார்.

அதையடுத்து ஒருநாள் தமது மோசமான நிலையையும் பொருட்படுத்தாது வழக்கம்போல தாம் எழுதும் நோட்டை எடுத்தார். "Happiness comes when the individual merges in God" (ஜீவன் கடவுளுடன் ஐக்கியமாகும் பொழுது இன்பம் ஏற்படுகிறது) என்ற வாக்கியத்தை ஒரு வாறு எழுதினர். அதன் பின் மௌனம் ஒரு நிமிடம், இரு நிமிடங்கள், மூன்று நிமிடங்கள் —குருதேவர் ஒன்றும் சொல்லவில்லை. அருகில் இருந்த சிஷ்யர் குருதேவரின் திருமுகத்தை நோக்கினர். குருதேவர் 'போரும்' என்று கொச்சைத் தமிழிலேயே சொன்னர்.

'Happiness comes when the individual merges in God'—நூற்றுக்கணக்கான அற்புதமான நூல்களை எழுதிய குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் கடைசி வாக்கியம் இதுதான். தமது போதனைகள் அனைத்தையும் இந்த ஒரு சிறிய வாக்கியத்தில் அவர் அடக்கி விட்டார். தாம் சொன்னதைச் செயலில் காட்ட அவர் விரும்பினர் போலும். அந்த வாக்கியத்தைச் சொன்ன சில வாரங்களுக்குள் இறைவனுடன் ஐக்கியமாக அவர் தீர்மானித்து விட்டார்.

தான்வேறு உடல்வேறு

ஜுன் 23ம்தேதி நடு இரவில் குருதேவர் கழிப்பறைக்குச் செல்ல விரும்பினார். அப்பொழுது தமது கால்களில் ஒன்று பக்கவாதத்திற்கு உட்பட்டிருப்பதை உணர்ந்தார். இருந்தாலும், 24ம் தேதி காலையில் வராந்தாவிற்கு வந்தார். அப்பொழுது அவருக்கு ரத்த அழுத்தம் அதிகமாக இருந்தது. மிகுந்த சிரமப்பட்டே அவரால் பேசமுடிந்தது. அந்த நிலையிலும் டேப் ரிகார்ட் செய்வதற்குச் சில பகுதிகளை அவர் சொல்ல விரும்பினார். ஆனால் பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க அந்த முயற்சியை அவர் மேற்கொள்ளவில்லை. அன்று குருதேவரின் முன்னிலையில் பக்தர் ஒருவரின் குழந்தைக்கு அன்னப்ராசன நிகழ்ச்சி நடத்துவதாக முன்பே ஏற்பாடாகியிருந்தது. எல்லாம் நன்கு நடந்தேறின. குருதேவரும் குழந்தையை ஆசீர்வதித்தார்.

அந்த நிகழ்ச்சி முடிந்ததும் ஆசிரம அச்சக மானேஜர் குருதேவரின் 'குண்டலினி யோக'த்தின் மறுபதிப்பு முதல் பிரதியினை அவரிடம் வழங்கினார். அந்தப் புத்தகத்தைக் கையில் வாங்கிய குருதேவர் குழந்தையைத் தாய் ஒருத்தி அன்புடன் அணைத்துக் கொள்வதைப் போல அதை அன்புடன் அணைத்துக் கொண்டார். ஞான யக்ஞத்தில் அவர் காட்டிய நாட்டம் அத்தகையது. அந்தப் புத்தகத்தின் பக்கங்களை அவர் திருப்ப முனைந்த பொழுது அவரது கை வெகுவாக நடுங்கியதை அருகிலிருந்த சிஷ்யர்கள் கவனிக்கத் தவறவில்லை. சாப்பாட்டு சமயத்திலும் தமது இடக்கையால் டவலை அவரால் சரிவர எடுக்க இயலவில்லை. சாப்பாடு முடிந்த பிறகு என்றும் செய்வது போல கைகளைக் கூப்பி கங்கை அன்னைக்கு நமஸ்காரம் அன்று அவரால் செய்ய முடியவில்லை.

ஜுன் 25ம் தேதி லக்னோவிலிருந்து டாக்டர்கள் வந்து குருதேவரைப் பரிசோதித்தனர். குருதேவர் பேச முயன்றார்.

ஆனால் நாக்குழறியது. டேராடூன் டாக்டர், 'சுவாமிஜி! எதைப் பற்றியும் நீங்கள் கவலை கொள்ள வேண்டாம். எந்தச் சிந்தனையும் வேண்டாம்', என்று சொன்னார். "ஓ அது எப்படி முடியும்? நிறைய விஷயங்களைப்பற்றிச் சிந்திக்க வேண்டியதிருக்கிறதே! எத்தனை பேரை நான் கவனிக்க வேண்டியதிருக்கிறது"! என்று உடனே குருதேவரிடமிருந்து பதில் வந்தது. எவ்விதம் நல்மேய்ப்பன் ஒருவன் தன் மந்தையில் உள்ள ஒவ்வொரு ஆட்டின் மீதும் தனிக் கவனம் செலுத்துவானோ, அதுபோல குருதேவர் உலகெங்கிலும் உள்ள தனது பக்தர்கள் ஒவ்வொருவரிடத்தும் பிரத்தியேக அன்பு பாராட்டினார்.

டெல்லியிலிருந்து ஜனாதிபதியின் விசேஷ டாக்டர் கர்னல் எம். எஸ். ராவ் குருதேவருக்குச் சிகிச்சை செய்ய ஓடோடியும் வந்தார். 'சுவாமிஜி, உங்கள் உடல் நலம் எப்படி இருக்கிறது?', என்று டாக்டர் கேட்டார். "மிக நன்றாக இருக்கிறது." — குருதேவர் பதில் சொன்னார். உடல் வேறு ஆன்மா வேறு என்ற உயரிய ஞானத்தில் சதா திளைத்திருந்த சுவாமிஜி தமது உடல் நிலையைப் பற்றி டாக்டர் எப்பொழுது விசாரித்தாலும், "மிக அற்புதமாக உள்ளது", என்றே பதில் சொல்லுவார். டாக்டருடன் இனிமையாகப் பேசி குருதேவர் உணவு உட்கொண்டார். ஆனால் அன்று மாலையே உணவை விழுங்குவதில் மிகுந்த சிரமம் அவருக்கு ஏற்பட்டது. மாத்திரைகளைக் கூட விழுங்க முடியவில்லை. அந்த மாத்திரைகள் பொடி செய்யப் பட்டு, தேனுடன் சேர்த்துக் குழைக்கப்பட்டு அவருக்குக் கொடுக்கப்பட்டன.

1963 ஜூலை 6ம் தேதி குருபூர்ணிமா நன்னாள். குருதேவரைச் சந்திக்க எவரும் அவரது குடிருக்குள் அனுமதிக்கப்படவில்லை. வெகு எளிய முறையில் பக்தர்களும் ஆசிரமவாசிகளும் குருபூர்ணிமாவைக் கொண்டாடினர். குருதேவர் படுக்கையில் படுத்திருந்தார். அன்று மதியும்

அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த பக்தர் குருதேவரிடம் 'சுவாமிஜி! உங்களுக்கு ஏதாவது வேண்டுமா'? என்று கேட்டார் 'ஒன்றும் வேண்டாம்' என்று பதில் வந்தது. சிறிது நேரத்திற்குப் பின் வியாசபகவானின் பிரம்ம சூத்திரம் மற்றும் பதஞ்சலியின் யோக தர்சனத்திலிருந்து கீழ்க்காணும் பகுதியைப் பாராயணம் செய்யலானார்.

தத்து ஸமன்வயாத்
தஸ்ய வாசக: ப்ரணவ:
ஸ து தீர்க்ககால நைரந்தர்ய
ஸத்காரஸேவிதோ த்ருடபூமி;

புனிதம் வாய்ந்த குருபூர்ணிமா நாளன்று பக்தர்களுக்கு ஸத்குருதேவர் அருளிய உபதேசமாக இது அமைந்தது. இந்த வரிகளில் எவ்வளவு சுருக்கமாகக் குருதேவர் பெரும் தத்துவத்தைப் புகட்டிவிட்டார்! ''அடையப்பட வேண்டியது பிரம்மா ஒன்றே, அதை அடைவதற்கு ஒருவர் 'ஓம்' காரத் தியானம் செய்ய வேண்டும். பக்தி சிரத்தையுடன் இடைவிடாத நீண்ட சாதனையினால் அதை அடைய முடியும்'' என்பது மேற்காணும் பகுதியின் பொருளாகும்.

அன்று முதல் குருதேவரின் உடல் நிலை தேர்ச்சி அடையத் தொடங்கியது. மீண்டும் முன்போலவே பக்தர்கள் குருதேவரைத் தரிசிக்க அனுமதிக்கப்பட்டனர். ஜூலை 8ம் தேதி சக்கர நாற்காலியின் மூலம் குருதேவர் தமது குடிலின் வராந்தாவிற்குக் கொண்டு வரப்பட்டார். அங்கிருந்து அவர் கங்கை அன்னையைக் கண் குளிரக் கண்டு நமஸ்காரம் செய்தார். பக்தர் குழு ஒன்று அவரைச் சுற்றிக் கவலையுடன் அமர்ந்திருந்தது. சுவாமிஜியினால் எந்த அளவுக்குத் தமது அவயவங்களைப் பயன்படுத்த முடியும் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக ஒரு சிறு சோதனை செய்யப்பட்டது. காகிதம், பேனா, கண்ணாடி ஆகியவை கொண்டு வரப்பட்டன. தெளிவான முறையில் குருதேவர் காகிதத்தில்,

'Serve, love, meditate, realise' என்று எழுதினார். இந்த அரிய பொக்கிஷம் தற்சமயம் குருதேவரின் சீரிய பக்தர்களில் ஒருவரான குஜராத்தைச் சேர்ந்த டாக்டர் அத்வர்யூவிடம் உள்ளது.

பார்ப்பவர்களுக்குக் குருதேவரின் நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது. அவரது ஒரு கண் மூடிவிட்டது. வாய் சிறிது கோணியும், ஒரு கால் வாத நோயால் செயலற்றும் போய் விட்டது. படுக்கையிலிருந்து அவரால் எழுந்திருக்கவும் முடியவில்லை. இவ்வளவு நிலையிலும் அவரது முகம் மிகுந்த அமைதியுடனும் ஆனந்தத்துடனும் எப்பொழுதும் காட்சி தந்தது. வலியினால் எந்தவித முக்கலும் முனகலும் அவரிடமிருந்து வெளிப்படவில்லை. அதுமட்டுமல்ல, எப்பொழுதும் போலவே அவர் தன் அருகிலிருந்தவர்களைக் குஷிப்படுத்தி வந்தார். அவருக்குள்ளே பொங்கி எழுந்த இன்பமும் மகிழ்ச்சியும் அவரது ஒவ்வொரு செயலிலும் வெளிப்பட்டது.

### பக்தர்கள்பால் காட்டிய பரிவு

குருதேவரின் ஒப்பற்ற பக்தர் பன்னாலால் குருதேவரைக் காணவந்தார். பன்னாலாலைப் பொறுத்தமட்டில் குருதேவரைத் தவிர அவருக்கு வேறு எந்தத் தெய்வமும் கிடையாது அவருக்கு எல்லாம் குருதேவரே. அதுபோல குருதேவரும் அவரை மிகவும் நேசித்தார். பன்னாலாலைப் பார்த்ததும் குருதேவர், 'உங்களை நான் பார்த்து வெகுநாட்களாகி விட்டனவே', என்றார். பன்னாலால் மிகுந்த பக்தியுடன் குருதேவரை நமஸ்கரித்து எழுந்ததும், குருதேவர் அவரைத் தன்னருகில் அழைத்து பல முறை அவரது முதுகில் அன்புடன் தடவிக்கொடுத்து, 'தைரியமாயிருங்கள். மனஉறுதியோடிருங்கள்', என்று கூறினார். அப்பொழுது குருதேவரின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. தமக்கு மிகவும் நெருங்கிய பக்தர்கள் மற்றும் சிஷ்யர்கள் மீது குருதேவர் காட்டிய பரிவும், அன்பும் அளவிடற்கரியது.

அதுபோல குருதேவரின் உடல்நிலையை அறிந்து அவரது தரிசனத்திற்காக தென்கோடியில் உள்ள மதுரையிலிருந்து ஓடோடியும் வந்திருந்த குருதேவரின் மற்ெருரு பிரதம சீடர் வானமாமலை (தற்சமயம் சுவாமி விமலானந்தாவாக இருப்பவர்) குருதேவருக்கருகில் நின்று கொண்டிருந்தார். குருதேவரின் பார்வை அவர் மீது பட்டதும், உடனே 'உங்கள் சகோதரியின் திருமணம் எந்த நிலையில் உள்ளது?' என்று அவரிடம் குருதேவர் அன்புடன் விசாரித்தார். பக்தர்கள்பால் அவர் காட்டிய அன்புதான் என்னே! லட்சக் கணக்கான பக்தர்களின் தனித் தனித் தேவைகளையும் பிரச்சினைகளையும் நினைவில் வைத்து அவற்றைத் தனதாகவே கருதி அவற்றைத் தீர்த்து அருளிய அவரது தெய்வீகக் கனிவுதான் என்னே!

ஒரு நாள் படுக்கையில் குருதேவர் படுத்திருந்தார். அந்த நிலையில் அருகிலிருந்தவர்களைப் பார்த்து அவர், 'ஓம் சரவணபவ களிம்பு மேலேயிருந்து விழுகிறது. ஒவ்வொருவரும் ஒரு கண்ணாடிக் குவளையை எடுத்துக் கொள்ளுங்கள்,' என்று கூறினார். எந்த ஒரு உயர்ந்தநிலையில் அவர் அந்த வார்த்தைகளைச் சொன்னார் என்பது அங்கிருந்த எவருக்கும் தெரியாது.

மற்ெருரு நாள் குருதேவர் படுத்திருந்த அறைக்குப் பக்கத்து அறையிலிருந்த ரேடியோ இனிய நாதஸ்வர இசையை எழுப்பிக் கொண்டிருந்தது. அது அகில இந்திய நிகழ்ச்சியாகும். ஒரு பிரபல நாதஸ்வர வித்வான் மிக இனிமையாகக் கச்சேரி செய்துகொண்டிருந்தார். குருதேவர் கண்களை மூடிப் படுக்கையில் படுத்திருந்தார். அவர் அயர்ந்து தூங்குகிறார் என்று ஏனையோர் எண்ணினர். நாதஸ்வரக் கச்சேரி முடிந்ததும் குருதேவர் கண் விழித்து, 'நான் அவரது நாதசுரக்கச்சேரியை மிகவும் ரஸித்தேன் என்று அந்த வித்வானுக்கு எழுதி எனது பாராட்டுதலையும் நன்றியையும்

தெரிவியுங்கள்'. என்று கூறினார். அது அங்கிருந்த அனை வரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

டாக்டர் சுசீலா நய்யார் அப்பொழுது மத்திய அரசின் சுகாதார அமைச்சராக இருந்தார். குருதேவரைத் தரிசிக்க அவர் ஆசிரமம் வந்திருந்தார், தமதுஉடல் மிகவும் நலிவுற்றிருந்த நிலைமையிலும் குருதேவர் அவரை மிகுந்த அன்புடன் வரவேற்றார். நிறையப்புத்தகங் களைக் கட்டு கட்டாக குருதேவர் அவரிடம் அளித்தார். அவ ரது ஆரோக்கியத்துக்காக குருதேவர் மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபித்தார்.

### கங்கையும் குருதேவரும்

ஜூலை 10ம் தேதி படுக்கையில் படுத்திருந்த குருதேவர் கங்கையைத் தரிசிக்க வேண்டுமென்ற தமது விருப்பத்தைத் தெரிவித்தார். இடையில் இருந்த அறை கங்கைக் காட்சியை மறைத்தது. உடனே அதற்கேற்ப படுக்கையின் நிலை மாற்றி யமைக்கப்பட்டது. படுக்கையில் இருந்தவாறே 'குருதேவர் கங்கையைக் கண்டு ரசித்தார். குருதேவருக்கும் கங்கைக்கும் இருந்த தொடர்பு தெய்வீகமானது. பிரிக்க முடியாதது கங்கைக் கரையில் குருதேவர் சுமார் 30 வருடங்களுக்கும் மேலாக வசித்து, தவம் புரிந்து தனக்கும் கங்கைக்கும் இடையில் ஒரு பிரிக்க முடியாத இணைப்பை ஏற்படுத்திக் கொண்டார். 'கங்கை அன்னை' என்ற தலைப்பில் ஒரு புத்தகமே அவர் எழுதியிருக்கிறார், ஜூலை 12ம் தேதி டாக்டர் தேவகிக் குட்டி குருதேவரிடம் பேனாவையும் ஒரு காகிதத்தையும் கொடுத்தார். குருதேவர் அதில், 'Remember, Forget.' என்று எழுதினார். மேலும் ஏதாவது எழுதுவதற்காக டாக்டர் அவரிடம் கேட்டுக்கொண்டபோது குருதேவர் 'அதுபோதும்' என்று சைகை செய்தார். மேலும் அவர் டாக்டரிடம், 'நீங் கள் தேவி என்பதை நினைவில் வையுங்கள், தேவகிக் குட்டி

அல்ல', என்று நாம் அடிப்படையில் ஆன்ம சொரூபமே தவிர உடல் அல்ல என்பதைச் சுருக்கமாக உபதேசித்தார்.

ஜூலை 14ம் தேதி டாக்டர் கர்னல் பூரி குருதேவருக்குச் சிகிச்சை செய்வதற்காக அங்கே வந்திருந்தார். எந்தெந்தப் பகுதிகளில் உணர்ச்சி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வதற்காக குருதேவரது உடலை அவர் தம் கையி லுள்ள குச்சியால் தட்டிய பொழுது, குருதேவர் 'டாக்டர்கள் மிகவும் பொல்லாதவர்கள்'' என்று குறிப்பிட்டார். அதற்கு அந்த டாக்டர், 'ஆமாம் சுவாமிஜி. நாங்கள் என்ன செய்ய முடியும்? எங்கள் கடமை அத்தகையது. 'சுவாமிஜி' நீங்கள் விரைவில் குணமடைந்து விடுவீர்கள்,' என்றார் ஆமாம் நான் குணமடைய வேண்டும், இன்னும் நிறைய செய்ய வேண்டியதிருக்கிறது' என்று குருதேவர் கூறினார். ''ஆமாம் சுவாமிஜி' நீங்கள் நிறைய இன்னும் தொண்டாற்றுவீர்கள். ஆனால் கொஞ்சம் சரீர சிரமங்களுடன்'', என்று டாக்டர் பதில் சொன்னதும், டாக்டரைக் குருதேவர் கொஞ்ச நேரம் கூர்ந்து பார்த்தார். அதன் பின் டாக்டருக்கு உப்புமா, காபி மற்றும் புத்தகங்களைக் கொடுக்கச் செய்து 'ஓம் நமோ நாராயணாய' என்று சொல்லி அவருக்கு விடை கொடுத்தார்.

மாலை 3 மணி இருக்கும். 'தண்ணீர், தண்ணீர்', என்றார் குருதேவர். உடனே பக்தர்கள் பார்லி மற்றும் ஜீரகத்தண்ணீ ரைக் கொடுக்க முன்வந்தனர். ஆனால் குருதேவர் கங்கா ஜலம்தான் வேண்டுமென்று கேட்டார். தூய கங்கை நீர் கொண்டுவரப்பட்டது. ஒரு ஸ்பூன் திரவத்தைக் கூட அது வரை மிகுந்த சிரமத்துடன் விழுங்கிய குருதேவர் அன் றைய டம்ளர் கங்கா ஜலத்தை எவ்வித சிரமமுமின்றி மட மட வென்று அருந்தினார். அன்றே இறையுடன் ஒன்றினார். அப்பொழுது இரவு மணி 11-15.

"எனது சரீரம் எனக்கு இடைஞ்சலாக இருக்கிறது. அது போன பிறகு நான் எங்கும் வியாபித்து நிற்பேன். உலகத்திலுள்ள அனைத்து மக்களுக்கும் தொண்டாற்று வேன்" என்று கூறிய குருதேவரின் அருள்வாக்கு உண் மையானது. இப்பொழுது அவர் எங்கும் அனைவருடைய உள்ளத்திலும் இருந்துகொண்டு அனைவருக்கும் வழிகாட்டி யாக விளங்கி வருகிறார். அவரது போதனைகளைக் கடைப் பிடித்து அனைவரும் தெய்வீக உருவகங்களாகத் திகழ்வார் களாக! குரு மகராஜ் கீ ஜய் !

---

## சிவானந்தருடன் ஒருநாள்

ஒரு நண்பன் தான் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் வியாதியைப் பற்றி குருதேவரிடம் எடுத்துரைத்தார். குருதேவர் அவரிடம் 'இனிமா' எடுத்துக் கொள்ளும்படிக் கூறினார்.

'இனிமா ஒரு உணவுப் பொருளா?' — நோயாளி கேட்டார்.

"இல்லை. இனிமா உணவுப்பண்டம் அல்ல, ஆசன வாய் மூலம் திரவத்தை உட்செலுத்தி குடலைச் சுத்தப் படுத்துவதுதான் அதன் பொருள், என்று குருதேவர் விளக்கம் கொடுத்தார்.

ஐயம் தெளிந்த அன்பர் அங்கிருந்து அகன்றார். சாதாரண நபராயிருந்தால் அந்தக் கேள்வியைக் கேட்ட தும் சிரித்துக் கேலி செய்திருப்பார். ஆனால் குருதேவர் எதையும் பரிவுடன் கவனிக்கும் உயர் பண்பைப் பெற்று விளங்கினார்.

# 14

## வழிகாட்டும் குருதேவர்

மகான்கள் என்றும் எப்பொழுதும் நம்முடன் இருக்கிறார்கள். அவர்களது பூதவுடல் நம் பார்வையிலிருந்து மறைந்து போவதாகத் தென்படினும், அருள் வடிவில் அவர்கள் பக்தர்களுடனேயே இருந்து வழி நடத்திச் செல்கின்றார்கள். குருதேவரைப் பொறுத்தமட்டில் உலகெங்கிலுமுள்ள பல பக்தர்கள் இதைத் தங்கள் வாழ்வில் அன்றும் இன்றும் அனுபவித்து வருகிறார்கள் என்பது நாம் கண்கூடாகக் காணும் ஒரு உண்மையாகும்.

சென்னையில் ஒரு பேராசிரியர், புகழ் பெற்ற ஒரு அரசுக் கல்வி நிறுவனத்தில் பணிபுரிந்து வருகிறார். குருதேவரது பல அரிய நூல்களை அவர் பழைய புத்தகக் கடைகளிலிருந்து தொகுத்து வைத்திருக்கிறார். தவிர குருதேவருடைய சொற்பொழிவுகள் மற்றும் பஜனைப் பாடல்கள் நிறைந்த கிராமபோன் ரிக்கார்டுகளை வாங்கி வைத்து அவ்வப்பொழுது அவற்றைக் கேட்பதில் அவருக்கு ஒருதனி விருப்பம். குருதேவரிடம் அவருக்கு இருக்கும் பக்தி அலாதியானது. ஆனால் நேரில் அவர் குருதேவரைத் தரிசனம் செய்தது கிடையாது. அதைப் பற்றி அவர் அடிக்கடி தம்மைத் தாமே நொந்து கொள்வார். அலுவலகத்திலோ வீட்டிலோ ஏதாவது சிக்கல்கள் தோன்றினால் குருதேவரின் திருவுருவப் படத்திற்கு முன்னால் வந்து அமர்ந்து கொள்வார். பக்தியுடன் அப்படத்தை உற்று நோக்குவார். பின்னர் கண்களை மூடித் தியானம் செய்வார். மனத்தைக் கவ்விய சஞ்சலமும்

குழப்பமும் நீங்கி அங்கே அமைதியும் ஆனந்தமும் உடனே தோன்றுவதைக் காண்பார்.

ஒரு நாள் குருதேவர் உருவப் படத்தின் முன் அமர்ந்து, ''குருதேவா! உம்மை நேரில் தரிசித்தவர்கள் மிகவும் பாக்கியவான்கள். ஆனால் எனக்கு அந்த பாக்கியம் கிட்டவில்லையே. உமதருளால் எனக்கு உமது தரிசனம் என்று கிட்டுமோ?,'' என்று காதலாகிக் கண்ணீர் மல்கிப் பிரார்த்தித்தார்.

அந்தரங்கமான பிரார்த்தனை வீண்போவதில்லை. என்ன ஆச்சரியம்! அன்றிரவு அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்திருந்தார் பேராசிரியர். திடீரென அவர் முன் குருதேவர் தோன்றுகிறார். அதைக் கண்டு திடுக்கிட்ட பேராசிரியர் ஆனந்தக் கண்ணீர் கண்களில் பெருக குருதேவரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறார். குருதேவரும் அவரை ஆசீர்வதித்து அவருக்கு மந்திரோபதேசம் செய்கிறார். அதன்பின் குருதேவர் காட்சியிலிருந்து மறைந்துவிடுகிறார். 'குருதேவா! எங்கு சென்று விட்டீர்?,' என்று பேராசிரியர் அலறுகிறார். அந்த சப்தத்தைக் கேட்டு வீட்டிலுள்ளோர் ஓடி வந்து விஷயம் என்னவென்று விசாரிக்கின்றனர். தாம் கண்ட அரிய காட்சியைப் பற்றிப் பேராசிரியர் அவர்களிடம் விவரிக்கிறார். மறுநாள் காலை விடிந்ததும் அவர் குருதேவரின் பிரதம சீடர் ஒருவரைச் சந்தித்து தாம் கண்ட அற்புதக் காட்சியை அவரிடம் எடுத்துரைக்கிறார். அதைக் கேட்ட அந்த அன்பர் 'நீங்கள் உண்மையிலேயே பெரிய பாக்கியசாலி'. அற்புதமான முறையில் குரு அருளைப் பெற்றிருக்கிறீர்கள். குருவின் மந்திரோபதேசம் உங்களுக்குக் கிட்டிவிட்டது. இனி உங்கள் வாழ்வில் குருவருளால் மேலும் பல அற்புதங்கள் நிகழ்வதைக் காண்பீர்கள்', என்று கூறுகிறார். பேராசிரியர் எல்லையற்ற மகிழ்ச்சி அடைகிறார்.

பல ஆண்டுகள் பணிபுரிந்தும் பி. எச்டி. பட்டம் பெறவில்லையே என்ற ஏக்கம் அவரது மனத்தைக் கவ்வியிருந்தது.

ஆனால்அந்தப் பட்டமும் அவருக்குக் கிட்டிவிட்டது. அதுமட்டு மல்ல, அவருக்கு இரண்டு மகன்கள் உண்டு. இருவரையும் டாக்டருக்குப் படிக்க வைக்க வேண்டுமென்பது அவரது விருப்பம். என்ன அதிசயம்! யாரையும் சிபாரிசுக்காக அண் டாமல் எந்தவிதக் குறுக்கு வழியிலும் செல்லாமல் அடுத்த டுத்து இரண்டு பேருக்கும் மருத்துவக் கல்லூரியில் வியக்கத் தக்க விதத்தில் அனுமதி கிடைத்தது. மூத்தவன் நான்காவது வருடத்திலும், இளையவன் இரண்டாம் வருடத்திலும் எம். பி. பி. எஸ். இப்பொழுது படித்து வருகின்றனர்.

இவை அனைத்தும் குருவருளால் அவரது வாழ்வில் சென்ற சில ஆண்டுகளுக்குள் நிகழ்ந்த அற்புதங்களாகும். இன்னும் தொடர்ந்து எத்தனை அற்புதங்கள் நிகழ்கின்றன வோ?

மற்றொரு குடும்பம். ஏழைக் குடும்பம் தான். குழந்தைகள் பள்ளி, கல்லூரிகளில் படிக்கும் பருவத்தில் உள்ளவர்கள் செலவோ அதிகம், தந்தை ஒருவர் ஊதியத்தில் குடும்பத் தைப் பராமரிக்க வேண்டிய சூழ்நிலை. திருமணமாகாத இரு மைத்துனிமார்கள். செலவினங்கள் அதிகம். வரவோ குறைவு. இந்த நிலையில் அந்தக் குடும்பத் தலைவிக்கு குரு தேவரின் இயக்கத்துடன் தொடர்பு ஏற்பட்டது. உடல் நிலை யும் அவருக்கு அவ்வப்பொழுது தொந்தரவு கொடுத்துக் கொண்டு வந்தது. பக்தி மிகுந்த அந்தப் பெண்மணி குரு தேவரிடம் தம்மைப் பூரணமாக ஒப்படைத்து விட்டார். அண்டியவருக்கு அற்புதமான முறையில் அடைக்கலம் அளிக் கும் அவதார புருஷர் அல்லவா நம் குருதேவர்! மூத்த பையன் பி. காம். தேர்வில் முதல் வகுப்பில் நல்ல மதிப் பெண்களுடன் தேறிவிட்டான். தேர்வு முடிவு வந்த உடனேயே சென்னையில் ஒரு தனியார் கம்பெனியில் அவ னுக்கு வேலையும் கிடைத்தது. நெடுநாள் கழித்து இரு மைத் துனிகளுக்கும் நல்ல இடத்தில் திருமணமும் அடுத்தடுத்து

சிறப்பாக நிகழ்ந்தது. வீட்டுத் தலைவருக்கு அலுவலகத்தில் பிரமோஷனும் கிட்டியது. இவையெல்லாம் குருதேவரின் திருவருளாலேயே என்பது அந்தக் குடும்பத்தாருக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கியது. எனவே தங்களுக்கு நல்வாழ்வளித்துவரும் குருதேவருக்கு என்ன விதத்தில் கைமாறு செய்வது என்று அவர்கள் யோசித்தனர். ஆம்! அடிக்கடி தங்கள் வீட்டில் சத்சங்கத்திற்கு ஏற்பாடு செய்து குருதேவரின் பெருமையை மேலும் பலருக்குத் தெரிவிப்பதுதான் தங்களது தலையாய கடமை என்பதை அவர்கள் உணர்ந்தனர். இப்பொழுது வாரம் தோறும் தவறாமல் அவர்களது இல்லத்திலே சத்சங்கம் நடந்து வருகிறது. அதில் பலரும் பங்குகொண்டு குருதேவரின் திருவருளைப் பெற்று வருகின்றனர்.

இது போன்று எண்ணற்றவர்களின் வாழ்க்கையில் இன்று குருவருளால் நிகழும் அற்புதங்களைப் பார்க்கையில் மெய் சிலிர்க்கிறது. இதில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில் இவர்களில் பெரும்பாலோர் குருதேவரை நேரில் தரிசிக்காதவர்கள் ஆவார்கள். குருதேவரின் நூல்கள் மற்றும் தெய்வ நெறிக்கழக சத்சங்கங்களின் மூலமாகத்தான் அவர்களுக்குக் குருதேவருடன் தொடர்பு அண்மையில் கிட்டியுள்ளது. குருதேவரிடம் நேரில் தீட்சை பெற்றவர்களுக்குக் கூட கிட்டாத அருளும், ஆசீர்வாதமும், அற்புதங்களும் இத்தகைய பக்தர்களுக்கு இன்று ஏற்படுகின்றன என்றால் அது எதைக் காட்டுகிறது? குருவின் பாதாரவிந்தங்களில் எவருக்கு உண்மையான பக்தி இருக்கிறதோ, எவர்கள் சந்ததமும் குருவை நினைந்து போற்றுகின்றனரோ, எவர்கள் குருசேவையில் தங்களது வாழ்வைப் பரிபூரணமாக ஒப்படைத்து விடுகின்றனரோ, எது நிகழ்ந்தாலும் அது நல்லதற்கே என்று எண்ணி அனைத்தையும் குருவின் பிரசாதமாக ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் எவரிடம் நிலவுகிறதோ அவர்களது வாழ்வில்

குருவருள் அநேகம் அற்புதங்களை நிகழ்த்துகிறது என்பது கண்கூடாக விளங்குகிறது.

குருதேவர் நம்முடன் இன்றும் இருக்கிறார், என்றும் இருப்பார். நமது வழிகாட்டியும், உற்ற நண்பரும் அவரே. அவரிடம் பக்தி கூடக்கூட பொருளும் அருளும் நம்மைத் தேடி வரும். துன்பங்கள் எல்லாம் சூரியனைக் கண்ட பனி போல அகலும்.

குருவருளால் நாம் நலன்கள் அனைத்தையும் பெற்று உய்வோமாக!

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ ।
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவ தேவ ॥

---

## சிவானந்தருடன் ஒரு நாள்

குருதேவர் அப்பொழுதுதான் தனது உணவை அருந்தி முடித்திருந்தார். அப்பொழுது குளவிப் பூச்சி ஒன்று குரு தேவர் உணவு அருந்திய தட்டின் ஓரத்தில் அமர்ந்து சென்றது. அதை அன்புடன் நோக்கிய குருதேவர் சொன்னார்:

"இந்தக் குளவியைப் பாருங்கள். அந்தத் தட்டில் வந்து அது அமர்ந்து கொஞ்சம் உணவை உண்டது. மகிழ்ச்சியாகப் பறந்து சென்றது. பணம் சேர்த்தல், மளிகைச் சாமான்கள் வாங்குதல், சமைத்தல் போன்ற எதைப் பற்றியாவது அதற்கு நினைப்புண்டா? தெய்வ நெறிக் கழகம் மற்றும் ஆசிரமம் நடத்துவதைப் பற்றி அதற்கு ஏதாவது சிந்தனையுண்டா? கணக்கு வழக்கு மற்றும் ஆண்டு வரவு செலவு பற்றி அதற்கு எதுவும் தெரியாது. இருந்தாலும் அது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது".

---

## 'வாழ்ந்துகாட்டிய வள்ளல்' முதற்பதிப்பு பற்றி வாசகர் கருத்துக்கள்

...சுவாமி சிவானந்தரது வாழ்க்கை வரலாற்றை மிக மிகச் சுவைபட ஆசிரியர் தொகுத்துத் தந்துள்ளார்.... மேலும் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டும் உத்தியைக் கையாண்டுள்ள ஆசிரியர் பாராட்டுக்கு உரியவர்.

—"தினமணி"

...இந்தியாவில் எந்தக் காலத்தில் ஞானிகள் தோன்றுவார்கள் என்பதற்கு ஸ்ரீசுவாமி சிவானந்தர் பெரிய சாட்சி. அவருடைய வரலாற்றைப் பேராசிரியர்டி. கே. நாராயணன் நல்ல முறையில் விரிவாக எழுதியிருக்கிறார். பலரும் படித்துப் பயன் பெற வேண்டிய நூல் இது.

—"கலைமகள்"

... This biography of Guru Maharaj discloses in succinct language the life, teachings and service of the saint, who won the reverence and admiration of the great men in and out of India.

— "Indian Express"

பேராசிரியர் ஸ்ரீ டி. கே. நாராயணன் அவர்கள் எழுதியுள்ள 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' எனும் இந்நூல் குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் வாழ்க்கையை அப்படியே நம் கண்முன் கொணர்ந்து காட்டுகிறது. நாம் அதன் பக்கங்களைப் புரட்டிடும்போது குருதேவரின் வாழ்க்கையில் சில ஏடுகளைப் புரட்டிப் பார்ப்பது போன்ற உணர்ச்சியே ஏற்படுகிறது. நிகழ்ச்சிகளை நாமே உடன் இருந்து காண்பதுபோன்ற அனுபவம் உண்டாக்கப்படுகிறது.



ஸ்ரீ நாராயணன் மிகவும் முயற்சி செய்து ஆழ்ந்த அறிவுடன் குருதேவரின் பல்வேறு நூல்களையும் அன்றாட நிகழ்ச்சிகளையும், உரையாடல்களையும், சொற்பொழிவு களையும் நுணுகி ஆராய்ந்து அவற்றின் சாரத்தைப் பல இடங்களிலும் சிறப்பாகப் பகர்கிறார். நூற்றாண்டு விழா கொண்டாடும் இத் தருணத்தில் அம்மாபெரும் ஞானியின் வாக்குகளை விளக்குவதால் நம் வாழ்க்கையைச் செப்பனிடு வதற்கு ஏற்ற வழிகாட்டியாக விளங்க வல்லது இந் நன்னூல். ஆசிரியரை அவரது சீரிய முயற்சிக்காகப் பெரிதும் பாராட்டுகிறேன்.

—சிவானந்த விஜயலக்ஷ்மி

...There is no doubt that everyone who reads this book will turn a new leaf in his life, even as many have done by reading the lives of saints.

—Swami Brahmananda,
Sivanandashram, Rishikesh.

... 'வாழ்ந்து காட்டிய வள்ளல்' நூலை வாசித்து அனுப வித்துக் கொண்டிருக்கிறேன். அருமையாகவும் சுவை யாகவும் இருக்கிறது.

— வீ. செல்வராஜ்
தலைவர், தமிழ்நாடு காந்தி நினைவு நிதி

